ஆந்திர
ாநிலச் சிறப்பிதழ்

# கல்கி

KALKI
13.4.86
ரூ. 1.50







# "ரண்டி, ரண்டி, பாக உன்னரா?"

* ஆந்திராவில் என். டி. ஆர்., பொருளாதாரத்தில் கீழ்மட்டத்தில் இருப்பவர்களுக்கு உதவக் கொண்டு வந்திருக்கும் திட்டங்களில் சில:

* முதலில் ஆந்திரா முழுவதும் சர்வே செய்து வருட வருமானம் ஆறாயிரத்துக்கும் குறைந்தவர்களுக்குப் பச்சை கார்டு, அதற்கும் மேல் வருமானம் உள்ளவர்களுக்கு 'மஞ்சள் கார்டு' கொடுத்திருக்கிறார்கள். பச்சை அட்டை வைத்திருப்பவர்களுக்குப் பல சலுகைகள்.

*** அன்னபூர்ணா சக்ஷட்காரம்**

பச்சை அட்டை உள்ளவர்களுக்குத் தலைக்கு ஐந்து கிலோ அரிசி, கிலோ இரண்டு ரூபாய் விலைக்குக் கொடுக்கிறார்கள்.

*** வஸ்த்ரா பிரதான விதானம்**

உணவுக்கு அடுத்தது உடை என்ற முறையில் ஜனதா புடைவை வேட்டிகள் பாதி விலையில் தரப்படுகின்றன. மீதிப் பணத்தை அரசு ஆந்திரப்பிரதேசகைத்தறிநெசவாளர்சங்கத்திற்குத் தருகிறது. முப்பத்திரண்டு லட்சம் குடும்பங்கள் இப்படிப் பலன் பெறுகின்றன.

*** ஆஷ்ரேய பதகம்**

ஆறாயிரம் முதல் ஒன்பதாயிரம் வரை வீடுகளை ஏழைகளுக்குக் கட்டிக் கொடுத்து, குடிசைகள் மேற்கொண்டு உருவாவதைத் தடுத்திருக்கிறார்கள்.

*** கிராமேண க்ரந்தி பதம்**

கிராம மக்கள் தங்களுடைய கிராம வளர்ச்சியில் தாங்களே ஈடுபாடு கொள்ளும்படியான மனோநிலையை ஏற்படுத்தும் அற்புதத் திட்டம் இது. தங்களுடைய கிராமத்தில் ரூபாய் ஐந்து லட்சத்துக்கு மேற்படாத அளவில் பொது வேலைகள் நடைபெறத் திட்டம் போட்டுக் கொடுத்தால் உடனே வேலைகளை அவர்கள் தொடங்கலாம். ஐம்பது சதம் பணத்தை அரசாங்கம் தருகிறது. கிராம மக்கள் தங்கள் உழைப்பை இலவசமாகத் தந்து இத்திட்டத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம். இதனால் இடைத் தரகர்கள், காண்ட்ராக்டர்கள் ஒழிவதுடன், 'இது நாங்கள் செய்தது' என்ற பெருமையும் பொறுப்புணர்ச்சியும் ஏற்படுகிறது.

*** மாத்ரு தேவதா சமாதரம்**

கர்ப்பமுற்ற விவசாயப் பெண்மணி நிறை மாதங்களிலும், கைக்குழந்தை இருக்கும் நாட்களிலும் தன் வருமானத்தை இழந்து விடுகிறாள். அப்படிப்பட்ட பெண்மணிகளுக்கு உதவித் தொகை குறிப்பிட்ட சில மாதங்களுக்கு அளிக்கப்படுகிறது. 85 — 86 ஆண்டுக்கு இந்த வகையில் இரண்டு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள்.

*** பெண்கள் பல்கலைக்கழகம்**

திருப்பதியில் 'ஸ்ரீ பத்மாவதி மகிளா விஸ்வ வித்யாலயா' எனும் பெயரில் பெண்களுக்கான பல்கலைக்கழகத்தை உருவாக்கியிருக்கிறார்கள். தவிரவும் அரசாங்க வேலைகளில் முப்பது சதம் பெண்களுக்கு முன்னுரிமை தரப்பட வேண்டும் எனவும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டு இருக்கிறது.

* இன்னும் நம் மாநிலம் போல ரிக்ஷாவிற்குக் கடன், சிறு தொழில் தொடங்க உதவி, தியேட்டர் கட்ட உதவி எனப் பல சலுகைகள்.

* பொதுவாக, 'என். டி. ஆர். ரொம்ப ஸ்டிரிக்ட். சலுகைகள் இன்க்ரிமெண்ட் தர மாட்டார்' என்கிறார்கள்.

* இசைக் கலைஞர்கள், வித்வான்களுக்கு அரசாங்க மட்டத்தில் பதவிகள் கொடுப்பது, நந்தவனம், பார்க் போன்றவற்றை அமைப்பது இவையெல்லாம் வீண் செலவுகள். என்று நிறுத்தியிருக்கிறார் என். டி. ஆர்.

* "இரண்டு ரூபாய்க்கு கிலோ அரிசி போடும்வரை என். டி. ஆரை யாரும் அசைக்க முடியாது" என்கிறார் ஒரு மூத்த (ஆந்திர) பத்திரிகையாளர்.

* நிலப்பட்டா வழங்குதல்.





அண்டை மாநிலமான ஆந்திராவிலிருந்து தமிழகத்துக்கு வந்து குடியேறி, பிறந்த, புகுந்த மண்ணிற்குப் பெருமை சேர்த்துக் கொண்டிருக்கும் தெலுங்கர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இரண்டு மாநிலங்களையும் இணைக்கும் அன்புப் பாலமாகத் திகழும் இவர்கள் அத்தனை பேரையும் பற்றிச் சொல்ல இயலாது. 'சேம்பிளு'க்குச் சிலர் :

### சோமயாஜுலு

சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டவர்களில் தியாகி சோமயாஜுலுவும் ஒருவர். இவர் வ. வே. சு. அய்யர், சுப்பிரமணிய சிவா, ஆகியோருடன் நெருக்கமாக இருந்தவர். சென்னையில் நீலன் சிலையை அகற்றும் போராட்டத்தில் கலந்து கொண்டு போராடினார். ராஜ துவேஷ குற்றம் சாட்டப்பட்டு மூன்று ஆண்டு கடுங்காவல் தண்டனையையும் பெற்றார். நெல்லைச் செய்தி, விஜயா போன்ற பத்திரிகைகளை நடத்தியிருக்கும் இவர் தியாகிகள் சங்கத்தின் தலைவராகவும் இருந்திருக்கிறார்.

### துணை ஷெரீப் விசுவநாத ரெட்டி

1986 — 87 ஆண்டிற்காகத் தமிழகத்தின் துணை ஷெரீப்பாக நியமிக்கப்பட்டிருப்பவர் திரு. விசுவநாத ரெட்டி. இவருடைய தந்தை புகழ்பெற்ற திரைப்படத் தயாரிப்பாளர் நாகி ரெட்டி.

### ஜே. வி. சோமயாஜுலு

எழுபத்தைந்து வயதான ஜே. வி. சோமயாஜுலுவைத் தெரியாத ஆந்திரர்களே சென்னையில் இருக்க முடியாது. பல்வேறு சமூக அமைப்புக்களோடும், பண்பாட்டுக் கலைச் சங்கங்களோடும் தொடர்பு கொண்டவர். ஸ்டாக்புரோக்கராக இருக்கும் இவர் சென்னபுரி ஆந்திர மகா சபாவின் தலைவராகவும் இருந்து வருகிறார்.

### அஸ்வினி — ரோஹிணி சாஸ்திரிகள்

அஸ்வினி சாஸ்திரி, ரோகிணி சாஸ்திரி இந்த இருவரும்தான் சென்னையில் அநேக தெலுங்கர்களுக்கு வைதிகக் காரியங்களை நடத்தி வைக்கும் சாஸ்திரிகள். இவர்கள் தாண்டரன் வம்ச வழியில் வந்தவர்கள். ஆந்திர மாநில முதல்வர் என். டி. ஆரின் குடும்ப சாஸ்திரிகள் இவர்கள்தான். அஸ்வினி, ரோகிணி இருவருமே பட்டதாரிகள். வேதத்தை முறையாகக் கற்றவர்கள்.

போன யுகாதிக்கு மட்டும் மொத்தம் 34 படக்கம்பெனிகளுக்குப் பூஜைபோட்டு இருக்கிறார்களாம். இது ஒரு ரிக்கார்டு!

### சிட்டிபாபு

வீணை என்றதும் நமக்கு ஞாபகத்திற்கு வருபவர்களில் சிட்டிபாபு ஒருவர். பன்னிரண்டாவது வயது முதல் மேடைக் கச்சேரி செய்து வருகிறார். பல விருதுகளைப் பெற்று இருக்கும் வீணை சிட்டிபாபுவிற்கு அவை எல்லாவற்றையும் விட இந்த வருடம் அவர் பிறந்த ஊரான அமலாபுரத்தில் (மேற்கு கோதாவரி மாவட்டம்) ஊர்க்காரர்கள் சூட்டிய தங்கக் கிரீடம்தான் மிகுந்த பெருமையளிப்பதாகவும் மனநிறைவு தருவதாகவும் விளங்குகிறது! தங்கக் கிரீடம் சூட்டும் போது கணவனும் மனைவியும் சேர்ந்து உட்கார வேண்டும் என்று உள்ளூர் ஜோசியர்கள் சொன்னார்களாம்!

### வேம்பட்டி சின்ன சத்தியம்

ஆந்திரத்தின் குச்சிபுடி நாட்டியம் என்றதும் ஞாபகம் வருபவர் வேம்பட்டி சின்ன

* எல். வி. பிரசாத்





* ஜே. வி. சோமயாஜுலு

* ரோஹிணி - அஸ்வினி சாஸ்திரிகள்







* பானுமதி

* எல். வி. ராமையா



# தமிழகத்தில் ஆந்திரர்

சத்தியம்தான். சென்னையில் குச்சிபுடி ஆர்ட்ஸ் அகாடமி ஒன்றை நிறுவி இந்தக் கலையைப் பலருக்கும் சொல்லிக் கொடுத்து வருகிறார். இந்த அகாடமிக்காக சகாய விலையில் தமிழக அரசு இசைக் கல்லூரிக்கு எதிர்த்தாற்போல் நிலம் ஒதுக்கிக் கொடுத்து இருக்கிறது.

## எல். வி. பிரசாத்

'ராஜபார்வை' பார்த்தவர்களுக்கு எல்.வி.பிரசாத்தை மறக்க முடியாது. தென்னக சினிமா உலகின் தந்தை என்றும் தாத்தா என்றும் அன்புடன் அழைக்கப்படுபவர் எல்.வி. பிரசாத். திரை உலகத்தவர்களுக்கு உற்ற நண்பராய், ஆலோசனை சொல்லும் வழிகாட்டியாய்த் திகழ்பவர். வெற்றிகரமான பல மொழித் திரைப்படத் தயாரிப்பாளர். முதல் இந்திய சினிமாவான அலம்.ஆரா (Alam Ara), முதல் தெலுங்கு சினிமாவான பக்த பிரகலாதா; முதல் தமிழ் சினிமாவான காளிதாஸ் — ஆகியவற்றில் நடித்துப் பெருமை பெற்றவர். பிரசாத் ஸ்டுடியோ, பிரசாத் கலர் லேப் போன்றவைகளை ஏற்படுத்தியதோடு 70 எம். எம். தொழில்நுட்பத்தை முதன் முதலில் சென்னையில் ஏற்படுத்தியவரும் இவர்தான்.

## பானுமதி இராமகிருஷ்ணா

திரைப்படத்துறையிலே எந்தப் பெண்ணும் சாதிக்காத, சாதிக்க முடியாத அளவிற்குச் சாதனைகளைப் புரிந்தவர் பானுமதி. வெற்றிகரமான படத்தயாரிப்பாளர், டைரக்டர், பின்னணிப் பாடகர், எடிட்டர், நடிகை... எனச் சொல்லிக் கொண்டே போகலாம். திரைப்படத் துறையினரால், 'தைரியமான துணிச்சலான பெண்மணி' எனக் குறிப்பிடப்படுபவர். இன்றைக்கு இசைக்கல்லூரியின் முதல்வராகத் தமிழக அரசால் நியமிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டிருப்பவர்.

## யாமினி கிருஷ்ணமூர்த்தி

அகில உலகப் புகழ்பெற்ற இந்த நாட்டிய தாரகை சென்னையில் வசித்து வருபவர். பரதம், குச்சுபுடியில் கைதேர்ந்த இந்த நடனமணி இந்தியாவின் முதல் வரிசை நாட்டியக் கலைஞர்களில் இடம் பெற்றிருப்பவர். இவருடைய முன்னோர்கள் ஆந்திரக்காரர்களானாலும் இரண்டு தலைமுறைகளாகச் சென்னையில் வசித்து வருகிறார்கள்..

## ஆந்திர சேம்பர் ஆஃப் காமர்ஸ்

ஆந்திர மாநிலம் பிரிவதற்கு வெகுகாலம் முன்பே ஆந்திர சேம்பர் ஆப் காமர்ஸ் 1928ம் வருடமே சென்னையில் துவக்கப்பட்டது. இன்று குறிப்பாக ஆந்திர மாநிலத்தில் தொழில் வளர்ச்சி பெருகுவதற்குப் பல நடவடிக்கைகளை எடுத்த போதிலும்



* சின்ன சத்தியம்



* துர்க்காபாய் தேஷ்முக்



* சிட்டிபாபு



* யாமினி

தமிழ்நாட்டின் தொழில் மற்றும் பொருளாதார வளர்ச்சியிலும் தீவிர கவனம் செலுத்துகிறது ஆந்திர சேம்பர் ஆப் காமர்ஸ். விவசாயம், தொழில் வளர்ச்சி, ஏற்றுமதி — இறக்குமதி, போன்றவை பற்றி சம்பந்தப்பட்டவர்களுக்கு உடனுக்குடன் தெரிவிப்பதற்காக ஒரு வார ஏடும், தொழிலாளர் செய்திகளுக்கு,என்று இரு மாதத்திற்கு ஒரு இதழும், வரிச் செய்திகளையும், கம்பெனி விவகாரங்களையும் தெரிவிப்பதற்காகத் தனித் தனியே இரு இதழ்களையும் நடத்தி வருகிறது ஆந்திர சேம்பர் ஆஃப் காமர்ஸ். இப்போதைய தலைவராக நந்தகோபால் இருந்து வருகிறார்.

### எல். வி. ராமையா பவுண்டேஷன்

எல். வி. ராமையா பவுண்டேஷன் என்ற அமைப்பு சென்னையிலும், வெளி மாநிலத்திலும் நல்ல பல பணிகளைச் செய்து வருகிறது. ராமையா அவர்கள் ஆந்திராவிலுள்ள பெல்லாரி மாவட்டத்திலுள்ள குண்டு கிராமத்தில் பிறந்தவர். சமையல் எண்ணெய் தயாரிப்பதில் ராமையாவின் யாட்லம் கம்பெனி ஈடுபட்டு இருக்கிறது. இந்த கம்பெனியிலிருந்து கிடைக்கும் லாபத்தில் பத்து சதவிகிதத்தை அப்படியே தர்ம காரியத்திற்காக ஒதுக்கி வைத்து விடுகிறார்கள். தவிர, தமிழகத்தில் மூன்றரை லட்சம் ரூபாயில் ஒரு அறக்கட்டளையை நிறுவி வருடம் தோறும் இலக்கியத்திற்காகவும், விஞ்ஞானம் மற்றும் நாட்டிற்காகவும் சேவை செய்தவர்களுக்குப் பரிசு வழங்கி கௌரவிக்கிறார்கள்.

### ஆந்திர பவானந்த சங்கம்

1940ம் வருடம் ஆரம்பிக்கப்பட்ட சங்கம் ஆந்திர பவானந்த சங்கம். இந்த சங்கம் முழுக்க முழுக்க குழந்தைகளின் நலனில் அக்கறை காட்டுகிறது. ரேடியோவில் நிகழ்ச்சிகளை வழங்குவதற்காக ஆரம்பிக்கப்பட்ட சங்கம் இன்று ஆலமரம் போல் வேரூன்றி நிற்கிறது. இந்த சங்கத்தின் சார்பில் இன்று ஒரு பள்ளிக்கூடமே நடத்தப்படுகின்றது என்று பெருமையோடு கூறுகிறார் இந்த சங்கத்தின் தலைவி ஜோகுலாம்பாள். ஆந்திர மாநிலத்தவர்களால்தான் இந்த சங்கம் நடத்தப்பட்டாலும் இந்த சங்கம் நடத்தும் பள்ளியில் எல்லா மாநில குழந்தைகளையும் சேர்த்துக் கொள்கிறார்கள்.

### ஆந்திர மகிள சபா

சென்னையில் ஆந்திர மகிள சபா என்னும் அமைப்பு ரொம்ப காலமாக இயங்கி வருவதை எல்லோருமே அறிவார்கள். ஆந்திர மகளிர்களால் இது ஆரம்பிக்கப்பட்டதால் இதை மகிள சபா என்று அழைத்தார்கள். இதில் ரொம்ப ஈடுபாடு காட்டியவர் துர்க்கா பாய் தேஷ்முக். மருத்துவ சேவை, சமூக சேவை மற்றும் கல்வி ஆகியவற்றைக் கண்களாக மதித்து ஏழை எளிய மக்களுக்கு மொழி இன வித்தியாசம் பாராட்டாமல் சேவை செய்து வருகிறது ஆந்திர மகிள சபா. மருத்துவமனைகளையும் இளைஞர்களுக்கான சுற்றுலா விடுதிகளையும் நடத்தி வருகிறது.

## அடுத்த இதழில்...



* அளவான குடும்பம்தான் ஆனாலும் வறுமைதான்!

— ஒரு கிராமத்தின் சோகக் கதை

மதுரை மாவட்டத்தில் கல்கி மேற்கொண்ட சமுதாயப் பணியைத் தொடர்ந்து கலெக்டர் எடுத்த நடவடிக்கைகள் பற்றிக் கலெக்டரே எழுதுகிறார்:

பெரியார் மாவட்டத்தில் கல்கி-I

* காவிரி ஆறு? கழிவு நீர் ஓடையா?

— கவர் ஸ்டோரி

* இதோ ஒரு கொத்தடிமைக் காலனி

— திடுக்கிடச் செய்யும் தகவல்கள்



# ஃபாரெக்ஸ்®
# முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக் கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கிய தாகும் ஃபாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கிய மாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-ஃபாஸ்ஃபரஸ் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ஃபாரெக்ஸ் கலப் பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




புதிய மேம்பட்ட **ஃபாரெக்ஸ்®**

பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புத்தாண்டு வாழ்த்துக்கள்



# N. S. K.



## சிட்பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்

# அன்பளிப்பு

## தமிழ்ப்புத்தாண்டு தின பரிசுத் திட்டங்கள்

மக்களின் நன்மதிப்பும் நல்லாசியினையும் பெற்ற என்.எஸ்.கே. சிட்பண்ட்ஸ் பி. லிட் உங்களுக்கு ஓர் அரிய வாய்ப்பைத் தருகிறார்கள்.

புத்தாண்டு தினத்திற்கான சில புதிய திட்டங்கள்



| புதிய குரூப்புகள் |
|---|
| ரூ. 1,000 x மாதங்கள் 50 ரூ. 50,000 |
| ரூ. 1,000 x மாதங்கள் 25 ரூ. 25,000 |
| ரூ. 500 x மாதங்கள் 50 ரூ. 25,000 |
| ரூ. 500 x மாதங்கள் 20 ரூ. 10,000 |
| ரூ. 250 x மாதங்கள் 40 ரூ. 10,000 |
| ரூ. 250 x மாதங்கள் 20 ரூ. 5,000 |
| ரூ. 125 x மாதங்கள் 40 ரூ. 5,000 |

புதிய சலுகை திட்டங்கள்:- இன்று முதல் 30.4.86 வரை எங்களது புதிய சீட்டுகளில் சேரும் அங்கத்தினர்களுக்கு சிறப்பு பரிசாக எவர்சில்வர் மல்டிபர்பஸ் கன்டெய்னர் அளிக்கப்படும்.

புதிய அங்கத்தினர்களுக்கும், அறிமுகப்படுத்தும் N.S.K. அங்கத்தினர்களுக்கும் சிறப்பு பரிசு அளிக்கப்படும்

சிறப்பு அம்சங்கள்:-

(1) சீட்டின் மாத தொகையை தவறாமல் கட்டும் நபர்களுக்கு அந்த சீட்டுக்காலத்தின் முடிவில் சீட்டு கட்டிய தொகையில் 1% போனஸாக தள்ளுபடி அளிக்கப்படும்.

(2) சீட்டு எடுத்த நபருக்கு குறிப்பிட்ட காலத்திற்கு முன்னதாக பணம் பட்டுவாடா செய்யப்படும்.

(3) வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஏலமுறை பாதுகாப்பு தொகையில்லாமல் பகிரங்க ஏலம்.

குறிப்பு :
தமிழ்ப் புத்தாண்டு அன்றும் 14.4.86 காலை 9.00 மணியில் இருந்து மாலை 7.00 மணி வரை புதிய அங்கத்தினர்கள் சேர்க்கப்படுவார்கள்.



சீட்டுகள் சேர, முதலீடு செய்ய தொடர்புகொள்க:
பதிவு & நிர்வாக அலுவலகம்:
எண். 38.B, பர்கிட் ரோடு, (முதல் மாடியில்) (தி.நகர் பேருந்து நிலையம் எதிர் புறம்) தி.நகர், சென்னை—600 017. போன்: 447135

எதிர்கால சேமிப்பிற்கு என்.எஸ்.கே.

# ஆந்திர மாநில தலைநகரில் தமிழர்கள்

ஆளுனர் மாளிகைக்குள் நுழைகிறோம். தெலுங்கில் அல்லது ஹிந்தியில் விசாரிப்பதா என்று முடிவு செய்யுமுன்னே, 'என்ன ஸார் என்ன வேண்டும்?' என்ற கேள்வி காதில் விழுகிறது. தமிழ்க் குரலுக்குரியவர் டவாலி அணிந்த ஸுபேதார் சுப்பிரமணியம். வியக்கிறோம். சென்னையும் ஆந்திரமும் ஒன்றுபட்ட மாநிலமாக இருந்தபோது சித்தூரிலிருந்து வந்த சுப்பிரமணியத்திற்குத் தமிழ் தண்ணீர் பட்டபாடு.

கவர்னரின் காரியதரிசியைக் காண்கிறோம். 'உட்காருங்கள்!' தமிழ்ச் சொல் அசத்துகிறது. ஸ்ரீ சந்திர மவுலி ஐ.ஏ.எஸ். 'பிறைசூடி' என்ற பெயரில் தமிழ்க் கவிதை நூல் வெளியிட்டிருக்கிறார். ஆந்திரத் தலைநகரில் தமிழ்க் கொடி அல்லவா பறக்கிறது!

நிஜாம் ஆண்ட காலத்திலேயே தமிழ்ச் சமூகம் ஹைதராபாத்திற்கு வர ஆரம்பித்து விட்டது. சரித்திரம் என்ன சொல்லுகிறது? நிஜாமிற்கு பிரிட்டிஷ் ராணுவ உதவி தேவைப்பட்டது. 1799ம் ஒப்பந்தப்படி ஆங்கிலேயர் சென்னை, பெங்களூரிலிருந்து இரண்டு 'ரிஜிமெண்ட்' அனுப்பி உதவினர். அதில் வந்த தமிழ் சந்ததி இன்னும் போலோராம், ஆல்வால் முதலிய 'கன்டோன்மென்ட்' பகுதியில் வசிக்கின்றனர். பலர் ரயில், அரசு, பஸ் இலாகா முதலியவற்றில் வேலை பார்க்கின்றனர். பஸ்ஸில் ஏறினால் சுத்தத் தமிழோ ஆங்கிலமோ பேசும் கண்டக்டர்கள் பலரைக் காக்கி உடையில் காணலாம். ஆற்காடு ராணிப்பேட்டை, வேலூர் முதலிய வட ஆற்காடு லீனர்களிலிருந்து பல தமிழ்க் குடும்பங்கள் குறிப்பாக முதலியார் இனத்தவர், இங்கு குடியேறி நல்ல பதவிகளில் இருக்கின்றனர். பல வைஷ்ணவ தமிழர்கள் பெருமையோடு திகழ்கின்றனர். நிஜாம் அரசில் மந்திரி தொடங்கி, ஜஸ்டிஸ்கள், வக்கீல்கள், துணைவேந்தர்கள், பேராசிரியர்கள் என்று பல தமிழர்களைப் பற்றி ஹைதராபாத்தின் சரித்திரம் பேசும்.

ராவ் பகதூர் பத்மராவ் முதலியார் நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆரம்பித்த 'பெண்கள் பாடசாலை' இன்று கீஸ் ஹைஸ்கூல் என்ற பெரிய ஸ்தாபனமாக 3000 பெண்களுக்குக் கல்விச் செல்வம் வழங்கும் பள்ளியாக விளங்குகிறது. தமிழைப் பாடமாக எடுத்துக் கொள்ள இங்கு வசதி உண்டு. இரண்டு வருடங்களுக்கு முன்பு இங்கு பட்டப் படிப்புக்குக் கல்லூரியும் ஆரம்பமாயிற்று.

ஸவுத் இந்தியன் பஜனை சமாஜ் இங்குள்ள பழமையான தமிழர் அமைப்பு. அதற்கு உயிரூட்டி பொன்விழா கொண்டாட இருக்கிறார்கள்.

1968ல் ஸ்ரீ காஞ்சிப் பெரியவாள் இரட்டை மாநகரத்திற்கு விஜயம் செய்தபோது தோன்றியவை ஸ்கந்தகிரி முருகன் கோயில், ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கர் மந்திர் முதலியன. ஸ்ரீ பரமேச்வர சிவாச்சாரியார் அலங்காரம் செய்யும் நேர்த்தியைக் கண்டு தெலுங்கர்கள் மூக்கில் விரலை வைக்கின்றனர்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கர் மந்திர் வருடம் தோறும் பாவை இலக்கியங்களில் மாணவர்களுக்கு போட்டி வைத்து பாவை விழா கொண்டாடி பரிசுகள் அளிக்கின்றது. சுவாமிகள் ஆணைப்படி பிடி அரிசித் திட்டத்தை 20 வருடங்களாக அமுலாக்கி வருகின்றது மந்திர். 40 கிலோ வெண் பொங்கல் செய்து ஏழைகளுக்கு அன்னதானம் நடைபெறுகிறது. தலைவர்கள், தொண்டர்கள் என்ற பேதமின்றி அனைவரது உற்சாகமான உழைப்பு ஏழைகள் வயிற்றை நிரப்புகின்றது.

பி. ஹெச். இ. எல். ஆயுள் காப்பு, அணுசக்தி போன்ற நிறுவனங்களிலும் தமிழ் கலைச் சங்கங்கள் உள்ளன. ஆந்திர மாநிலத் தமிழர் பேரவை இரண்டு வருடங்களாக தமிழ் புத்தகக் கண்காட்சி நிறுவி, தமிழ்த் தொண்டு புரிகிறது.

வெள்ளி விழா கொண்டாடும் ஸ்ரீ ராம நவமி கலைவிழா, ஸ்ரீ தேசிக சபா நடத்தும் திருப்பாவைத் திருவிழா ஆகியன ஆண்டு தோறும் ஆவலுடன் எதிர்பார்க்கப்படுகிறவை.

அரசு அதிகாரிகள், ஊழியர்கள் மட்டத்திலும் பொதுப்பணிகளிலும் இறைபணிகளிலும் இன்னும் எத்தனையோ தமிழர்கள், தமிழ்ச் சங்கங்கள். இதற்கென்றே சிறப்பிதழ் வெளியிட வேண்டும்! எனவே, எடுத்துக் காட்டாகச் சில மட்டுமே பார்த்தோம்.

பல்லாண்டுகளுக்கு முன்னால் டெக்கான் கிரானிகல் நாளேட்டை நிறுவியவரே ராஜகோபால முதலியார் என்ற தமிழர்தான் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!



• பாவை விழாவில் பரிசுபெற்ற மாணவ மாணவியர்.

–சுபஸ்ரீ.




# கல்கி

1986 ஏப்ரல் 13
மலர் 44 இதழ் 37
குரோதன பங்குனி 31




## ஜெயலலிதாவின் ஆபத்தான முழக்கம்!

**ப**ஞ்சாயத்துத் தேர்தல் தோல்விகளுக்கான காரணங்கள் என்ன என்பதை அண்மையில் சென்னையில் கூடிய அ.இ.அ.தி.மு.க. வின் செயற்குழுவும், பொதுக்குழுவும் மனப்பூர்வமாக அலசிப் பார்த்துச் சரியான முடிவுகளை எடுக்கத் தவறிவிட்டது. ஆசிரியர்கள், பட்டதாரிகள் தொகுதிகளில் நான்கு இடங்களையும் இழந்தும்கூட அந்தக் கட்சிக்கு விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருப்பதாகத் தோன்றவில்லை.

இக்கூட்டத்தில் மந்திரிகளின் செயல்திறன் பற்றித் தங்கள் தங்கள் கருத்துக்களை எழுதித் தமது அந்தரங்கப் பார்வைக்குத் தருமாறு எம்.ஜி.ஆர். கேட்டுக் கொண்டது உலகம் கண்டிராத புரட்சிகரமான விஷயம்தான். ஆனால் அது சரியான நடவடிக்கை அல்ல. மானேஜரின் திறமையை டைரக்டர் உணர்ந்தறிய வேண்டுமே தவிர குமாஸ்தாக்களிடமோ, பியூன்களிடமோ மானேஜர் பற்றிய அபிப்ராயம் கேட்கக் கூடாது. சரி, கேட்கத்தான் கேட்டாரே, அவர்கள் என்ன எழுதித் தருகிறார்கள் என்று பார்க்கத் தாமதித்தாரா? அதுவுமில்லை. கூடவே பதினொரு அமைச்சர்கள் பதவியிலிருந்து இறக்கப்படுவார்கள் என்று அறிவித்தும்விட்டார். எப்போது பதினொருஅமைச்சர்கள் என்ற எண்ணிக்கையைத் தீர்மானித்துவிட்டாரோ அப்போதே அவர்கள் யார் யார் என்று முடிவு செய்துவிட்டதாகவும்தான் அர்த்தமாகும். அப்படியிருக்கக் கட்சிக்காரர்களிடம் அமைச்சர்களின் ஆற்றலை எடை போடுமாறு கேட்க அவசியம் என்ன? இனி கட்சிப் பணிக்காக அவர்கள் பதவி துறப்பதாக எவ்வளவுதான் மழுப்பினாலும் அவர்கள் திறமை இன்மை காரணமாக நீக்கப்பட்டிருப்பதாகவே அனைவரும் கருதுவார்கள். அவ்வாறிருக்க, பதவியிலிருந்து இறக்கப்படுகிற பதினொரு அமைச்சர்களுக்கும் கட்சியிடமோ, தலைமையிடமோ எந்த அளவுக்கு மதிப்பும் மரியாதையும் இருக்கும்? வெறுப்பை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாமல் தொடர்ந்து எம்.ஜி. ஆரை வாழ்த்திக் கொண்டே கட்சிக்குள் உட்பூசலை வளர்த்துக் கொண்டிருப்பார்கள். இவர்களுடைய இடத்துக்குப் புதிதாக வரக் கூடியவர்கள் மீது இவர்களுக்கு எரிச்சலும் ஆத்திரமும் அதிகரித்துக் கொண்டேதான் போகும்.

அ.தி.மு.க.வின் பலவீனம் அடித்தளத்திலிருந்து உட்கட்சி ஜனநாயகம் வளர்க்கப்படாததுதான். இது காரணமாக எம்.ஜி. ஆருக்கு அடுத்தபடியாக ஒரு தலைவர்கள் வரிசை உருவாகவில்லை. ஒரு நிச்சயமற்ற நிலைமையே அனைவரிடமும் நிலவுகிறது. போதாக்குறைக்கு எம்.ஜி. ஆருக்கு யாரிடமும் நம்பிக்கை இல்லாததால் பொறுப்புக்களை ஒப்படைத்து முடிவுகள் எடுக்குமாறு அவர் யாரையும் ஊக்குவிப்பதில்லை. எல்லாக் காரியங்களையும் தாமே ஏற்றுச் செய்து முடிக்க முதல்வரின் உடல்நிலை இடம் தரவும் இல்லை. நிகர விளைவு, தமிழகத்தில் சகல துறைகளிலும் தேக்க நிலை. ஏன், பதினொரு அமைச்சர்களின் பெயர்களை அறிவிப்பதில்கூட இந்தத் தாமதப் போக்கையே காண்கிறோம்.

இந்தச் சூழலில் ''எம்.ஜி.ஆர்.தான் முக்கியம். எம்.ஜி.ஆர். மட்டுமே முக்கியம்'' என்ற ஜெயலலிதாவின் கூற்று அவரது ஆதரவாளர்களிடையே மெய்சிலிர்ப்பை ஏற்படுத்தியிருக்கலாம். ஆனால் அது ஓர் ஆபத்தான லட்சியம். ''இந்திராதான் இந்தியா; இந்தியா என்பது இந்திராதான்'' என்ற பழைய மற்றுமொரு ஆபத்தான கோஷத்தை நினைவூட்டுகிறது ஜெயலலிதாவின் இந்த முழக்கம். வலுவான கொள்கைகள், லட்சியங்கள் இன்றி ஒரு தனி மனிதரின் பிராபல்யத்தையும் செல்வாக்கையும் மட்டுமே அஸ்திவாரமாகக் கொண்டு ஒரு கட்சியை வளர்ப்பதும் ஆட்சியைப் பிடிப்பதும் ஜனநாயகத்தில் சட்டபூர்வமாகச் சரியானதர்க இருக்கலாம்; ஆனால் குடியரசின் ஆன்மாவைப் படுகொலை செய்துவிட்டதாகும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் ''மேரி''

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct ''மெரி'' தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!




## மேரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி: 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600 017.



# ஹைதராபாத் நகரம் — கலைகளின் சங்கமம்!

எஸ். ஆர். ராமமூர்த்தி

முன்னாள் தலைமைச் செயலர் ஆந்திரப் பிரதேசம்

இந்தியத் துணைக் கண்டத்தைப் பற்றிப் பேசும்போது வேற்றுமையில் ஒற்றுமை என்பதற்குஎடுத்துக்காட்டாக இதுவிளங்குவ தாகக் கூறப்படுவதுண்டு. இந்த அம்சம் மற்ற எல்லாத் துறைகளையும் விட கலாச்சாரத் துறையில் மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது. இசையோ நாட்டியமோ மேலெழுந்த வாரியாகப்பார்த்தால்வேற்றுமைகள் நிறைய இருப்பது போலவே தோன்றும். ஆனால் இந்த வேற்றுமைகளுக்குக் கீழே பலமான அஸ்திவாரமாக ஒற்றுமைகள் பலவும் இருக்கின்றன. வானவில்லின் நிறங்கள் போல பாரத நாட்டின் பல்வேறு கலைகள் பிரகாசித்தாலும் ஒன்றுபட்டு ஒரே சூரிய ஒளியாகப் பிரகாசிக்கவும் செய்கிறது இந்தியக் கலை.

ஏழு வண்ணச் சிதறல்களுள் ஒன்று ஆந்திர மாநிலத்தின் கலைகள். ஒளிக்கு ஏழு வண்ணங்களில் எது முக்கியம்? எல்லாமே முக்கியம் தான். அவ்வாறே ஆந்திரக் கலைகளும் இந்திய கலாசாரத்துக்கு முக்கியம்.

உதாரணமாகத் தெலுங்கு மொழியையே எடுத்துக் கொள்ளுங்கள். சுந்தரத் தெலுங்கு என்று பாரதி வர்ணித்த இம்மொழி இசைக்கும் கவிதைக்கும் மிகவும் ஏற்றது. மேலும் ஆந்திர மக்கள் மிகவும் உணர்ச்சி வசப்படுகிறவர்கள். அந்த உணர்ச்சியும் அழகிய மொழியும் சேர்ந்தபோது அரிய கலைகள் பிறந்தன.

ஆந்திர நாட்டுக்கே உரிய கலைகள் புர்ர கதா, வீதி நாடகம், தோல் பொம்மலாட்டம், பொம்மலாட்டம் முதலியன. இவை இன்றைக்கும் ஆந்திர கிராமப்புறங்களில் நல்ல வரவேற்பு பெறுகின்றன. ஆந்திராவில் ஏராளமான திரைப்படங்கள் எடுக்கப்படுவதும் மக்கள் ஆர்வத்துடன் பார்ப்பதும் எல்லாருக்கும் தெரியும் என்றாலும் அதே நேரத்தில் மேற்சொன்னது போன்ற புராதனக் கலைகளை மக்கள் இன்றும் ஆதரிப்பதுடன் அவற்றின் தூய்மையைப் பாதுகாக்கவும் போற்றவும் முற்படுகிறார்கள்.



• குச்சுப்புடி தோற்றத்தில் ஸ்வப்னசுந்தரி — புகைப் படம்: 'சுருதி'

பெரு நகரங்களில் மட்டுமின்றி சின்ன ஊர்களிலும் கிராமங்களிலும் கலைஞர்கள் தோன்றி பிரபலமடைந்திருக்கிறார்கள். இவர்களுள் நடிகர் பல்லாரி ராகவா குறிப்பிடத் தக்கவர். ஆந்திரா பட்டணங்களிலும் ஊர்களிலும் உள்ள கலைச் சங்கங்களிடையே ஒரு வித்தியாசமான நல்ல பழக்கம் உண்டு. இவர்கள் தங்கள் நாடகங்களில் நடிப்பதற்கு பிரசித்திபெற்றநடிகர்களைவிசேஷவிருந்தினராக அழைப்பார்கள். குருக்ஷேத்திரம் சிந்தாமணி போன்ற ஆண்டாண்டு காலமாக நடந்துவரும் நாடகங்களில் அந்தச் சிறப்பு நடிகருடன் சேர்ந்து இவர்களும் நடிப்பார்கள். இதனால் இருவித பலன் கிடைத்தது. பிரபலமான நாடகக் குழுவை அழைக்க ஆகும் செலவு மிச்சப்படும். பிரபலமான ஒரு நடிகர் வந்தால் போதுமல்லவா? அந்த நடிகரோடு சேர்ந்து இவர்கள் நடித்தபோது



இவர்களுடைய கலைத்திறனும் அபிவிருத்தி அடையும். மக்களுக்கோ பிரபல நடிகரை தங்கள் ஊர் நாடக மேடையில் நடிக்கப் பார்த்த திருப்தி! வசூலும் நன்றாக இருக்கும்.

புர்ர கதா என்ற கலையை அப்யசித்த குழுவினர் பிரமாதமாக உடை அணிந்து அலங்கரித்துக் கொண்டு சங்கீதக் கருவிகளுடன் ஊர் ஊராகப்போவார்கள். நவரஸங்களையும் வெளிப்படுத்தும் அற்புதமான கிராமியக்கலை இது. எண்ணங்களையும் லட்சியங்களையும் மக்கள் மனத்தில் பதிய வைக்கவும் வீரத்தை ஊட்டவும் புர்ர கதாவுக்கு இணையாக வேறு



* பொம்மலாட்டம்.

ஒரு கிராமியக் கலையைக் கூற முடியாது. இடை இடையே சிரிக்கவும் வைப்பார்கள். சோகத்திலும் ஆழ்த்துவார்கள்.

தோல் பூர் மலேதா என்ற கலைநிகழ்ச்சியை நடத்தினால் மழை பெய்யும் என்ற நம்பிக்கை இந்த 1986 ஆம் ஆண்டிலும் பல கிராம மக்களிடம் இருக்கிறது. அந்த நம்பிக்கை பொய்ப்பதுமில்லை என்பதை நானே என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். இது போன்ற தொன்மைக் கலைகள், சினிமா, டீ.வி. ஆகியவற்றின் படையெடுப்பால் மேலும் வளம் பெற வேண்டுமே தவிர மங்கி மறைந்துவிட அனுமதிக்கலாகாது.

ஹைதராபாத் நகரம் பூகோள ரீதியாக அமைந்திருக்கும் இடம் காரணமாகவே பல்வேறு கலாசாரங்கள் சங்கமிக்கும் நகரமாக விளங்குகிறது. அத்தனையும் அருகருகே ஒப்புரவுடன் வாழ்ந்து, வளம் பெறவும் செய்கின்றன. ஹிந்துஸ்தானி சங்கீதத்துக்கு ஆந்திரத் தலைநகரில் நல்ல வரவேற்பு உள்ளதால் செழிக்கிறது. கர்நாடக சங்கீதமும் அப்படியே. பல்வேறு வகை நடனங்கள், நாடகங்கள் ஆகியவற்றுக்கும் நல் ஆதரவு தரும் நகரம் இது.

ஆனால் சென்னையில் டிசம்பர் மாதத்தில் நடக்கும் சங்கீத சீசன் போலவோ அல்லது திருவையாறு தியாகராஜர் உற்சவம் போலவோ எல்லோரையும் சங்கீத சாகரத்தில் மூழ்கடிக்கிற விதமான கலை விழாக்கள் இங்கு நடப்பதில்லை. சில பல கேந்திரங்களில் அவ்வப்போது கலை விழாக்கள் நடந்தாலும் இசை மழை, கலை வெள்ளம் என்று கூறும்படி இராது.

தமிழ்நாட்டில் பரத நாட்டியம் போல ஆந்திராவுக்கே உரித்தான நாட்டியக் கலை கூச்சுபுடி. கூச்சுபுடி என்பது ஆந்திராவில் உள்ள ஒரு கிராமம். இங்கே வீர சைவர்களால் மட்டுமே ஆடப்பட்டு வந்த இந்தக் கலை பிறகு வைணவத்துக்கும் சென்றது. இந்த நடனத்தின் தனிச் சிறப்பு நாடக பாவங்களுடன் நடன முத்திரைகளை இணைத்துத் தருவது தான்.

மதம், கலாச்சாரம், மொழி இவையெல்லாம் ஒருமித்த மனமுடைய மக்களை ஒன்றுபடுத்த மனிதனால் உருவாக்கப்பட்டவை. மத வேறுபாடுகளுக்கிடையேயும் மொழி மாறுபாடுகளுக்கிடையிலும்கூட உட்புகுந்து இயங்கி மனித குலம் என்ற ஒரே எண்ணத்தை உருவாக்கும் வல்லமை படைத்தவை கலைகள். ஆந்திரக் கலைகள் இதற்கு விதி விலக்கல்ல.

கல்கி — ஆந்திர மாநிலச் சிறப்பிதழுக்காகச் சுற்றுப்பயணம் மேற்கொண்டு, பேட்டிகள் கண்டு, கட்டுரைகள் வழங்கியிருப்பவர்கள்:

**திரு. ரமேஷ்**
**திருமதி மஞ்சுளா ரமேஷ்**

**திரு. எஸ். சந்திரமௌளி**

புகைப்படங்கள், மேலட்டை வண்ணப்படம்: யோகா



* பாராளுமன்றத்தில் பலம் வாய்ந்த எதிர்க்கட்சியாக இருப்பது தெலுங்கு தேசம் கட்சிதான்.

* டாக்டர் ராதாகிருஷ்ணன், சஞ்சீவி ரெட்டி, வி.வி. கிரி என மூன்று ஆந்திராக்காரர்கள் ஜனாதிபதிகளாக இருந்திருக்கிறார்கள்.

* கர்நாடக இசைக்கு தியாகையரின் தெலுங்குக் கீர்த்தனைகள் பெரும் பொக்கிஷம். திருவாரூர் இவர் பிறந்த இடம்.



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1986

தமிழ் உரைநடை இலக்கியத்தின் மறுமலர்ச்சிக்குக் காரணமானவராக விளங்கி பட்டி தொட்டிகளிலெல்லாம் கூடப் பத்திரிகை படிக்கும் பழக்கத்தை உருவாக்கிய அமரர் "கல்கி" அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் கல்கி நடத்தும் சிறுகதைப் போட்டி இது:



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 500 |
| மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்) | ரூ. | 500 |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

* உறையின்மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 3 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

* எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி; சென்னை — 600 032.

# Actions speak louder than words KCUB for sound investments!

Yes. Our performance is our best proof.
Our growing list of satisfied customers are our assets.
Our expanding network of efficient branches are our pride!
KCUB—for service and care!
We offer:

- MONTHLY SAVINGS
- CASH CERTIFICATES
- VAMANA VISWARUPA DEPOSIT
- FIXED DEPOSIT.




KCUB

**THE KUMBAKONAM CITY UNION BANK LTD.,**

Registered Office: Kumbakonam-612 001

KCUB—The Bank that's committed to growth — your growth.

பக்கம் பார்த்துப் பேசுகிறேன் — மு. மேத்தா



அன்புள்ளம் கொண்ட வாசகர்களுக்கு என் வணக்கம்.

நாம் ஒருவரை ஒருவர் பக்கத்தில் வந்து பார்த்துக் கொள்ளும் வாய்ப்பை — 'கல்கி' வழங்கியுள்ளது.
பக்கத்தில் வந்து நாம் பார்த்துக் கொள்வதற்காக வாரம் ஒரு 'பக்கம்' வழங்கப்படுகிறது.
பக்கத்தில் இருந்தாலும் சிலபேர் தொலைவில் இருப்பார்கள்.
நானோ — தொலைவில் இருந்தாலும் உங்கள் பக்கத்தில் வந்து பதிந்து கொள்கிறவன்.
அன்றாடம் நாம் நம்முடைய பக்கத்திலேயே பார்க்கும் சின்னச் சின்னச் செய்திகளைப் பற்றியெல்லாம் இந்தப் பக்கத்தில் நான் பேசப் போகிறேன்.
ஒரு பக்கம் கவிதையாகப் பேசுவேன்.
ஒரு பக்கம் கட்டுரையாகப் பேசுவேன்.
என்றும் நியாயத்தின் பக்கம் இருந்து பேசுவேன்.

# இரவல் முகங்கள்

கண்ணாடி முன்நின்று
கர்வம் நீ கொள்ளாதே!

பரவசம் கொண்டு நீ
பார்க்கும் உன் முகத்தினிலே
உன்னுடைய அடையாளம்
ஒன்றேனும் தெரிகிறதா...?

கண்ணாடி முன்நின்று
கர்வம் நீ கொள்ளாதே!

இரவல் முகத்தினிலா
நீ
இறுமாப்புக் கொள்கின்றாய்...?

*

இது
உனது
சொந்த முகம்தானா
சோதித்துப் பார்த்துக் கொள்...

தந்தை சொத்தில்
தள தளப்புப் பெற்று
வந்த முகத்தினிலா
மகிழ்ச்சி அடைவது?

*

யாரோ பெரியவர்கள்
ஆதரவாய் அமைந்ததனால் —

ஊரார் மதிக்க
நீ
ஒட்டி வைத்த முகமெல்லாம்
உன்னுடைய முகமென்றே
ஒரு நாளும் ஆகாது!

இன்னொருவர் இடுப்பில்
ஏறி அமர்ந்து கொண்டு
நீ
பாதையைக் கடப்பதற்குப்
பாராட்டு விழா எதற்கு?

அடுத்தவர்கள் உனக்கு
அளித்த முகம் காட்டி
நடித்ததினால் வாழ்க்கை
நாடகத்தில் நலம் பெறலாம்!

என்றாலும்
நிமிர்ந்து தலை நிமிர்த்தி
நிற்பதற்கு
உனக்கிங்கே என்ன
உரிமை இருக்கிறது?
உன்னுடையது...... ஒன்றுமில்லை!

*

கேர் ஆஃப் முகவரியில்
கிடைத்த இடவசதித் தேரேறி
உன் பெயர்தான் திரிகிறது...
சரித்திரத்தில் —
அதற்கும் ஒரு
பாராட்டுக் கிடைக்குமென்று
பகல் கனவு காணாதே!

*

உன்னுடைய முகத்தை
உன் உழைப்பால் உருவாக்கு...
உனக்கென்றோர் முகவரியை
உயிர் கொடுத்தும் உனதாக்கு!



# கலாநிதி தொடர்ந்து போராடுகிறார்!

* கல்கி, 30.3.86 இதழில் அதி வேக ரயில் திட்டம் பற்றிய கட்டுரையை சுவாரஸ்யத்துடன் படித்தேன். ஆனாலும் இத்திட்டத்துக்காக நான் எடுத்துக் கொண்டுள்ள முயற்சிகள் பற்றி ஒரு வார்த்தை கூடக் கட்டுரையில் குறிப்பிடாதது எனக்கு வருத்தத்தை அளிக்கிறது. யாரும் அக்கறை காட்டாததால் 1979ல் ஜனதா ஆட்சியின் போதே இந்தத் திட்டத்துக்கு மூடுவிழா நடந்திருக்கும். நல்லவேளை 1980ல் பொதுத் தேர்தல் வந்தது. பிறகு தொடர்ந்த கடிதப் போக்குவரத்து காரணமாகவும் அன்றைய நிதி அமைச்சர் ஆர்.வி. செய்த உதவிகளாலும் இந்தத் திட்டம் கைவிடப்படாமல் நீடித்தது. இன்றுவரை நான் இந்தத் திட்டம் தொடர்பாக 1600 கடிதங்கள் எழுதியுள்ளேன். இவற்றில் தந்திகளும் உள்ளடக்கம். பிரதமர், நிதி அமைச்சர், ரயில்வே அமைச்சர்கள், திட்டக் கமிஷன் துணைத் தலைவர், ரயில்வே போர்டு சேர்மன், தென்னக ரயில்வே ஜெனரல் மானேஜர் என்று நான் எழுதாத நபர் இல்லை யாது. நான் கொடுத்த தொல்லையால் ஒரு சமயம் பிரதமர் இந்திரா காந்திக்கு என் மீது அலுப்பு ஏற்பட்டு விட்டது! 'எனக்கு நேரடியாகக் கடிதம் எழுத வேண்டாம்; சம்பந்தப்பட்டவர்களுக்கு எழுதிவிட்டு நகலை அனுப்புங்கள், போதும்' என்று எனக்கு எழுதிக் கேட்டுக் கொண்டார். ஆனால் நான் விடவில்லை. பிரதமர் என்ற முறையில் அல்லாது திட்டக் கமிஷன் சேர்மன் என்ற முறையில் அவருக்கு எழுதுவதாகக் குறிப்பிட்டேன். என் பணியைத் தொடர்ந்து ஆற்றி வருகிறேன். இத்திட்டத்துக்கு அதிக நிதி ஒதுக்கீடு செய்வதற்காக விடாமல் போராடி வருகிறேன்.

சென்னை—40. டாக்டர் கலாநிதி, எம்.பி.

* அதிவேக ரயில் திட்டம் பற்றிய கட்டுரை அதி அற்புதம். பாயின்ட், பாயின்டாகப் போட்டு, நிறைய விஷயங்களை 'கவர்' செய்துவிட்டீர்கள்!

ஆரணி. ஆர்.என். சேகர்.

**ஒரு கண்ணில் வெண்ணெய்; ஒரு கண்ணில் சுண்ணாம்பு!**

* ரயில்வே பட்ஜெட்டில் கல்கத்தாவிற்கு 85 கோடி தமிழ்நாட்டிற்கு 7½ கோடி ஒதுக்கியதன் மூலம், ஒரு கண்ணில் சுண்ணாம்பு, இன்னொரு கண்ணில் வெண்ணெய் என்ற பழமொழிக்கு மத்திய அரசு அர்த்தம் தேடிக் கொண்டது.

திருச்சி—8. எம். ஹெச். ஷேக் தாவூத்.

## வட்டமேஜை

**தலைப்பு எப்படிப் பொருந்தும்?**

* அரசின் திட்டங்களை 'ஷூட்டிங் முடிந்ததும் கலைக்கப்படும் செட்டுக்கள்' என்று கூறி உள்ளீர்கள். செட்டுக்களை மட்டும் போட்டுவிட்டு ஷூட்டிங் நடத்தாமல் போய்விடும் மாநில அரசுக்கு அவ்வாசகம் எவ்வாறு பொருந்தும்?

குடியாத்தம்—2. ஸ்ரீபைபரிதாசன்.

* ஏழைகளுக்கு மட்டுமல்ல, நடுத்தர வர்க்கத்தினருக்குக் கூட எந்தவிதப் பயனையும் உத்திரவாதத்துடன் அளிக்க முடியாத தமிழக அரசின் பட்ஜெட் பற்றி 'ஷூட்டிங் முடிந்ததும் கலைக்கப்படும் செட்டுக்கள்' என பொருத்தமான தலைப்பிட்டுத் தலையங்கம் எழுதிய விதம் அருமை. உண்மை!

நெல்லிக்குப்பம். எஸ்.ஜே. சலீம் தமிஜுதீன்.

**அருமை, அதைவிட அருமை!**

* லஞ்சத்தையும் அன்பளிப்பையும் வித்தியாசம் காட்ட தராசு எடுத்துக் கொண்ட உதாரணம் அருமை. அதை விளக்கியிருந்த முறை அதைவிட அருமை.

கிருஷ்ணகிரி. தே. காந்தி.

**பாராட்டியே தீர வேண்டும்**

* 'அடிப்படை வசதிகள்கூட இல்லாத அரசு மற்றும், பணம் பிடுங்கும் பிரைவேட் மருத்துவமனைகளின் மத்தியில், ஏழைகளுக்காகத் தம்மால் இயன்ற மருத்துவ உதவிகளை வழங்கியும், அதே சமயம் இலவசமாகச் சிகிச்சை அளிக்காமலும் பணியாற்றி வரும் ஸ்ரீ சங்கரா மெடிகல் டிரஸ்ட்டைப் பாராட்டியே தீர வேண்டும்.

சீர்காழி. இரா. சுதாகர்.

**வாழ்க சினிமா சாம்ராஜ்யம்**

* தேனீ குருப் தியேட்டரில் சைக்கிளுக்கு 35 காசு தான் வாங்குகிறார்களா? பிழைக்கத் தெரியாதவர்கள் சாமி! எங்கள் ஊர் தியேட்டர்களில் 50 காசு வாங்குகிறார்கள். இதை எதிர்த்து ஜனதா கட்சிக்காரர்கள் ஒரு நாள் மறியல் கூட செய்தார்கள். வழக்கம் போல் பலன் ஒன்றும் ஏற்படவில்லை. வாழ்க சினிமா சாம்ராஜ்யம்!

சேலம். நவபாரதி.

**மீண்டும் நிரூபித்துவிட்டீர்கள்!**

* சர்ச்சைகள், வாதப் பிரதிவாதங்கள் மூலம் வியாபாரம் செய்ய எண்ணாமல் உண்மையிலேயே பிரச்னைகள் தீர்க்கப்பட வேண்டும் என்ற கொள்கையுடனும் சமுதாயப் பிரச்னையுடனும் செயல்படும் பத்திரிகை கல்கி என்பதை கே.கே. நகர் பிள்ளையார் கோயில் விவகாரத்தில் தங்கள் அணுகுமுறை மூலம் மீண்டும் ஒருமுறை நிரூபித்துவிட்டீர்கள்.

சென்னை—28. எம். தியாகராஜன்.

* 30.3.86 கல்கி இதழில் வட்ட மேஜை பகுதியில், பெரம்பலூர் அ. சிங்காரவேலு, மதுரையில் மின் விநியோகம் செய்வது மின்வாரியம் அல்ல; மதுரை கார்ப்பரேஷனின் மின் இலாகா! என்று கூறியிருந்தார். அது தவறு. மதுரையில் தமிழ்நாடு மின்வாரியம், மதுரை கார்ப்பரேஷனின் மின் இலாகா இரண்டுமே மின் விநியோகம் செய்கின்றன. டி.ஆர். கோ. காலனி மின்வாரியத்தின் மின் ஆளுகையில்தான் இருக்கிறது.

மதுரை—1. மதுமலரன்பன்.

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!







புதியது

<u>உண்மையான</u> புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸிந்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸிந்த்தாலில் உள்ளது.

மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.

**ஸிந்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.



• ஆந்திராவிலுள்ள குண்டம்பள்ளியில் உள்ள ஒரு டூரிங் தியேட்டரில் டிக்கெட் பணத்திற்குப் பதில் அரிசி கொடுத்துச் சினிமா பார்க்கலாம். படி என்ன விலைக்கு அளக்கப்படும் என்பதையும் கொட்டகை வாசலில் எழுதி வைத்திருப்பார்கள்.

• செகந்தராபாத் என்று எழுதுவது தவறு. சிக்கந்தர் + ஆபாத் = சிக்கந்தராபாத். சிக்கந்தர் தான் சரியான பெயர். இது சிக்கந்தர் ஜா என்னும் மூன்றாம் நிஜாமின் பெயரால் விளங்கும் நகரம்.



• பெண் எழுத்தாளர்கள் அதிகமாக இருப்பது ஆந்திராவில்தான். கே. ராமலக்ஷ்மி, கவோசஞ ராணி, ஆனந்தா ராமம் போன்ற பெண் எழுத்தாளர்கள் ஆண் எழுத்தாளர்களைவிட அதிகப் புகழ் பெற்றவர்களாக விளங்குகிறார்கள்.

ஆந்திரப் பெண்களுக்கு இலக்கியப் பசி அதிகம். அவர்கள் நிறையப் படிக்கிறார்கள். இலக்கியப் பிரக்ஞையுடன் எழுதுகிறார்கள்.

— ஏ. கே. நாசர்





# கலர்ஃபுல் லம்பாடிகள்

ஆந்திராவிற்கு வரும் புகைப்படக்காரர்களைத் தப்பாமல் கவருபவர்கள் இந்த வண்ணமயமான லம்பாடிகள். இவர்களுடைய பல வண்ண ஆடைகள்தான் அதற்குக் காரணம்.

ஆந்திராவின் ஆதிவாசிகளான இவர்கள் இப்போது நகரங்களுக்கு நிறைய வர ஆரம்பித்துவிட்டார்கள். ஆனால் தங்களுடைய குழுவிலிருந்து பிரிவதில்லை.

படத்தில் இருக்கின்ற ராமாவத் ஆட்டி, ராமாவத் அச்சி இருவரும் மாமியார், மருமகள். நாம்பள்ளியில் இருந்தார்கள். அவர்களில் மூத்த பெண்ணை 'இந்த உரித்தெடுக்கும் வெயிலில் கூட இப்படி உடையணிந்து இத்தனை நகைகளைப் போட்டிருக்கிறீர்களே, கஷ்டமாயில்லையா?' என்று கேட்டோம்.

''என்ன கஷ்டம்? வெயில்ல போனு கொஞ்சம் கஷ்டம். நிழலுக்கு வந்துட்டா சரியாப் போகும்'' என்றார் அலட்சியமாக.

''எங்கே போய்விட்டு வருகிறீர்கள்?''

''எங்கள் குலதெய்வமான வீரன்ஞசாமி கோயில் மான் கோட்டையில இருக்கு. அங்க போய் புள்ளைக்கு மொட்டை போட்டுக்கிட்டு வர்றோம்...''

''உங்களுக்கும் சின்னவங்க எப்படி இருக்காங்க?'' வழக்கமான வம்பு.

''இப்பல்லாம் இந்த மாதிரி துணி போட்டுக்கப் பிரியப்பட மாட்டேங்குதுங்க. நிறைய சிறிசுங்க இந்தத் துணிங்கள, வளைங்கள போடறதில்லே. சிலதுங்க பள்ளிக்கூடம் கூட போகுதுங்க...'' என்றார் பெருமூச்சு விட்டபடி.

வண்ணப்படம்: லோகா

ஆந்திர மாநில முதலமைச்சர் எங்களுக்குப் பேட்டி கொடுத்தபோது அதிகாலை மணி நாலரை. அப்போது சட்டசபை நடந்து கொண்டிருந்த சமயம். கையில் ஃபைல்களுடன் அந்தவிடியற்காலையிலேயே அரசாங்க அதிகாரிகள் கூட்டம் முதலமைச்சர் வீட்டில் நிரம்பி வழிந்தது.

என். டி. ஆர். காலை இரண்டு மணிக்கு கண்டிபேட்டிலுள்ள தம் குடிலில் எழுந்து வேலைகளை முடித்துக் கொண்டு பூஜை செய்வாராம்., நாலு மணிக்கு ஹைதராபாத்திற்கு வந்து அரசாங்க வேலைகளை ஆரம்பித்து விடுவாராம். 'எந்த நேரமும் அவரைப் பொது மக்கள் பார்க்கலாம்... என்கிறார் அவருடைய பி. ஏ. பல அறைகளைக் கடந்து என். டி. ஆருடன் கைகுலுக்கியவுடன் அவரே தெலுங்குகங்கா பற்றிக் குறிப்பிட்டார். எனவே முதல் கேள்வியே அதுபற்றி அமைந்தது.

கல்கி: தெலுங்கு கங்கா திட்டம் பற்றிப் பெரும் பிரச்னையாக இருக்கிறதே! நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

என். டி. ஆர்.: உங்களுடைய அரசாங்கத்தின் முழு ஒத்துழைப்பு. இல்லாமல் இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியாது...!

கல்கி: நீங்கள் சொல்வது... தமிழ்நாடு அரசாங்கம் பணம் தரவில்லை என்கிறீர்களா?

என். டி. ஆர்: ஆமாம், ஆமாம், பல தடவை ஆமாம். இதுவரை நாற்பத்தேழு கோடிதான் கொடுத்திருக்கிறார்கள். நாங்கள் செய்து கொண்ட உடன்படிக்கைப்படி வருஷத்துக்கு அறுபது கோடி தர வேண்டும். கொடுக்க வேண்டிய மீதிப் பணத்தை ஆந்திர மக்களின் 'பாக்கெட்'டிலிருந்தா எடுத்துக் கொடுக்க முடியும்?' உடன்படிக்கை போட்டுக் கொண்டபோதே நான் பிரதர் எம். ஜி. ஆரிடம் தெளிவாகச் சொன்னேன், எங்களுடைய நிதி நிலைமை சரியாக இல்லை, முதல் மூன்று ஆண்டுகளுக்கு நீங்கள் நிதியுதவி செய்தால்தான் எங்களால் திட்டத்தை நடைமுறைப்படுத்த முடியும் என்று. அப்படி இருந்தும் இதுவரை நூற்று இருபது கோடி செலவழித்திருக்கிறோம். மேற்கொண்டு வர வேண்டிய பணம் வராமல் நாங்கள் என்ன செய்ய முடியும்...?''

கல்கி: ''ஆனால் இதுவரை கொடுத்த பணம் செலவாகிவிட்டதா? அதைப் பற்றியெல்லாம் கணக்கு அது, இதுவென்று...

என். டி. ஆர்.: (ஆவேசமாக) பிரதர் எம். ஜி. ஆருக்கு ஏனிந்த வீண் சந்தேகம்? இருநூறு கோடி பணத்தைஎடுத்துக்கொண்டு ஆந்திர அரசாங்கம் ஓடியா போய்விடும்? கொடுக்கின்ற பணத்தை 'செக்'காகத்தானே கொடுக்கிறார்கள்? இந்த நாளிற்குள் நூற்றிருபதுகோடி கொடுத்திருக்கவேண்டும். நாற்பத்தேழு கோடிதான் கொடுத்திருக்கிறார்கள். இந்தத்திட்டத்தைமுடித்துக் கொடுக்க வேண்டியது எங்களுடைய கடமை, தர்மம். அப்படி இருக்கும்போது எங்கள் மீது ஏன் வீண் சந்தேகம்? எந்தக் கையாடலுக்கும் இங்கு இடம் கிடையாது. நம்பாமல் இருக்கவும் இடமில்லை. ஸ்ரீசைலத்தின் அருகே தெலுங்கு கங்கா வேலைகள் நடந்து கொண்டு இருக்கின்றன. நீங்கள் இன்றைக்குப் போனாலும் அந்த வேலைகளைப் பார்க்கலாம்.

கல்கி: அவர்கள் சரியாக ஒத்துழைக்கவில்லை என்கிறீர்கள். அதற்கு உங்களுடைய பக்கத்திலிருந்து ஏதாவது முயற்சிகள் எடுத்தீர்களா?

என். டி. ஆர்.: நான் பிரதர் எம். ஜி. ஆரிடம் பேச்சுக்கு அழைப்பு விடுத்தேன். 'உங்களால் முடிந்தால் நீங்கள் ஹைதராபாத்திற்கு வாருங்கள். இல்லையென்றால் நான் சென்னைக்கு வருகிறேன்' என்றேன். ஆனால் அரசாங்க அதிகாரிகளின் மட்டத்தில் பேச்சு வார்த்தைகள் நடக்கட்டும் என்றார்கள். இன்றைக்கு (மார்ச் 19ந் தேதி) தமிழக — ஆந்திர





அதிகாரிகளின் கூட்டம் ஹைதராபாத்தில் நடக்கவிருக்கிறது.

கல்கி: கர்நாடக, மகாராஷ்டிர மாநிலங்கள் இந்தத் திட்டத்தை ஆட்சேபிக்கின்றன. மத்திய அரசின் ஒத்துழைப்பும் சரியாக இல்லை போலிருக்கிறதே...

என். டி. ஆர்: தமிழகமும், ஆந்திரமும் இந்தத் திட்டத்தை ரகசியமாகவா போட்டுக் கொண்டன? தெலுங்கு கங்கா ஆரம்ப விழாவை சென்னையில் மகாராஷ்டிர முதல்வர், கர்நாடக முதல்வர், மறைந்த முன்னாள் பிரதமர் அனைவரையும் வைத்துக் கொண்டு பகிரங்கமாக மக்கள் முன்னிலையில்தானே நடத்தினோம்? தமிழகம் தந்த முதல் தவணைப் பணத்தைத் திருமதி இந்திரா காந்திதானே என்னிடம் வாங்கித் தந்தார். மகாராஷ்டிர, கர்நாடக முதல்வர்கள் சாட்சிகளாக இருந்திருக்கிறார்கள். திட்டம் முழுவதுமாக அனைவரிடமும் விளக்கப்பட்டது. அன்றைக்கு விட்டுவிட்டு இரண்டு வருடங்கள் கழித்து ஆட்சேபணை எழுப்புவதில் என்ன நியாயம்? எந்த விதத்தில் சரி... இரண்டு வருஷமாக மௌனமாக இருந்தது ஏன்...?

கல்கி: ஆந்திரா, தமிழ்நாடு இரண்டிலுமே காங்கிரஸ் அல்லாத ஆட்சிகள் நடைபெறுகின்றன என்பதுதான் இந்தத் திட்டம் தாமதம் ஆவதற்குக் காரணமோ...?

என். டி. ஆர்.: நான் எந்தவிதமான வீண் சர்ச்சைகளில் நுழைய விரும்பவில்லை.. நான் சென்னைக்குத் தண்ணீர் தருகிறேன் என்று வாக்குக் கொடுத்துவிட்டேன். சொன்ன வாக்குப்படி தரவேண்டும், வேலைகள் நடைபெறவேண்டும் என்பதில் மட்டுமே எனக்கு அக்கறை. கிருஷ்ணா நதியின் இருபது குயிசெக்ட்ஸ் உபரித் தண்ணீரை ஆந்திர அரசு எப்படியும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். அது எங்களுக்கு இருக்கும் உரிமை. அதன்படிதான் நாங்கள் திட்டம் வகுத்துச் செயல்படுத்தி வருகிறோம். இதற்குமேல் நான் எந்தவிதச் சர்ச்சையிலும் ஈடுபட விரும்பவில்லை...

கல்கி: நீங்கள் ஆட்சிக்கு வந்தபிறகு மக்களுக்குப் புதியதாகப் பல திட்டங்களை அமுல்படுத்தியிருக்கிறீர்கள். மக்கள் உங்களுடைய திட்டங்களில் முழு திருப்தி அடைந்திருக்கிறார்களா...? நீங்கள் உங்களுடைய ஆட்சி முறையால் திருப்தி அடைந்திருக்கிறீர்களா...?

என். டி. ஆர்.: நான் நினைத்ததையெல்லாம் மக்களுக்கு இன்னும் செய்துவிடவில்லை. இன்னும் நிறையச் செய்ய வேண்டும் என்றுதான் நினைக்கிறேன். மக்கள் என்னுடைய ஆட்சியில் முழுத்திருப்தி அடைந்திருக்கிறார்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. உதாரணமாக ஒரு முக்கிய திட்டம் பற்றி விவரிக்கிறேன். மாவட்டங்கள், வட்டங்களாக மாநிலம் பிரிந்திருந்தாலும் ஒவ்வொரு குடிமகனும் ஏதாவது திட்டம் நிறைவேற வேண்டுமானால் ஆந்திர மாநிலத்தின் எங்கோ ஒரு மூலையிலிருந்து ஹைதராபாத்திற்கு வர வேண்டியதாக இருந்தது. நான் பல மண்டலங்களை இப்போது அமைத்திருக்கிறேன். பெண்ணோ, ஆணோ எந்த ஒரு நபரும் அரசாங்க மட்டத்தில் பெற வேண்டிய உதவிகளுக்கு சுமார் ஐந்து கி. மீ. க்கு மேல் போக அவசியம் இருக்கக் கூடாது என்பது என்னுடைய எண்ணம். அந்த வகையில் இந்த மண்டலங்களே பொது மக்களுக்குத் தேவையான திட்டங்களை நிறைவேற்றித் தர அதிகாரமும் நிதியுதவியும் கொடுத்திருக்கிறேன். ஆரம்ப சுகாதார நிலையம், பொது நூலகம் போன்ற அடிப்படைத் தேவைகள் ஒவ்வொரு மண்டலத்திற்குள்ளும் அமையும். இதற்குப் பொது மக்களிடையே நல்ல வரவேற்பு இருக்கிறது.

கல்கி: மதிய உணவுத் திட்டத்தை ஏன் நிறுத்தி விட்டீர்கள்...?

என். டி. ஆர்.: அது சரியாகச் செயல்படாமல், பல ஊழல்களுக்கு இடமானபோது நிறுத்திவிட்டேன். என்னதான் மக்களுக்கு நன்மை பயக்கும் திட்டமாக இருந்தாலும், நிறைய குறைபாடுகள் வரும்போது அதை ஏன் தொடர வேண்டும்? அனாவசியமாக

# "எம். ஜி. ஆருக்கு ஏன் இந்த வீண் சந்தேகம்?"

— என். டி. ஆர்.

மக்களின் வரிப் பணத்தை நான் வீணாக்க விரும்பவில்லை...

கல்கி: மத்திய — மாநில உறவுகள் பற்றி என்ன சொல்ல விரும்புகிறீர்கள் ...?

என். டி. ஆர்.: சர்க்காரியா கமிஷனுக்கு என்னுடைய திட்டவட்டமான கொள்கைகளை எடுத்துக் கூறியிருக்கிறேன். மாநிலத்திற்கு இன்னும் அதிக அதிகாரங்கள் வேண்டும். ஒரு மாநிலத்திலுள்ள தண்ணீரை நான் எப்படி உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதற்கே கூட மத்திய அரசைக் கேட்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். இப்படி இருந்தால் வளர்ச்சிப் பணிகள் எப்படி நடக்கும்?

கல்கி: உங்களுடைய பாரத தேசம் கட்சி எந்த நிலையில் இருக்கிறது...?

என். டி. ஆர்.: திட்டவட்டமான முறையில் முன்னேறிக் கொண்டு இருக்கிறது. இந்திரா காங்கிரசுக்குத் தேசிய அளவில் ஒரு பலமான எதிர்க்கட்சி வேண்டும். அப்போது தான் சரியான ஜனநாயகம் உருவாகும். அந்த வகையில் பாரத தேசம் கட்சியை அமைத்துக் கொண்டு வருகிறேன்...

கல்கி: நீங்கள் வெளிநாட்டிற்குப் போன போது அங்கிருந்த தெலுங்குத் தொழிலதிபர்களுக்கு அழைப்பு விடுத்தீர்களே... அந்தத் திட்டங்கள் எந்த அளவில் இருக்கின்றன...?

என். டி. ஆர்.: வெளிநாட்டிலுள்ள நமது செல்வந்தர்களும், விஞ்ஞானிகளும் ஆந்திராவிற்கு வந்து தொழிற்சாலைகளையும், ஆராய்ச்சிக் கூடங்களையும் நிறுவுமாறு கேட்டுக் கொண்டிருக்கிறேன். அவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். வெகுவிரைவிலே ஆந்திரா மின்னணுத் துறையில் மேம்பட்டு, விஞ்ஞான ஆராய்ச்சித் துறையிலும், வெகுவாக முன்னேறப் போகிறது. கவனித்து வாருங்கள் தெரியும்!

கல்கி: கடைசியாக எங்களுக்குக் கவலை அளிக்கும் கேள்விக்கே திரும்பி வருகிறோம். இத்தனை சர்ச்சைகளுக்கு இடையில் கிருஷ்ணா நதிநீர் எங்களுக்கு வருமா...?

என். டி. ஆர்.: (எழுந்துகொண்டே ஆணித்தரமாக) நிச்சயமாக வரும் நான் முப்பதாண்டுகள் சென்னையில் இருந்து வளர்ச்சி அடைந்தவன். அந்த நன்றியை மறக்க மாட்டேன். தெலுங்கு கங்கா எத்தனை தடைகள் வந்தாலும் உடைத்துக் கொண்டு பெருகும்; சென்னையில் பாயும்! அதில் எள்ளளவும் சந்தேகமில்லை!

---

செகந்திராபாத்தில் புதியரிசர்வேஷன் ஆபீஸ் (20 லட்சச் செலவில்) நவீன வசதிகளுடன் சென்ற ஆண்டு ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அது பல ரயில்வேக்களுக்கு முன்னோடி. டி.வி.க்கள் ரிஸர்வேஷன் பற்றி அன்றையநிலைமையைத்தெளிவாக்குகின்றன. அதைப் படித்துவிட்டு ரிஸர்வேஷன் அட்டையை விசாரணை ஜன்னலில் கொடுத்தால் கவுண்ட்டர், சீரியல் நம்பர் எழுதித் தருகிறார்கள். அந்த புக்கிங் ஜன்னலுக்கு எதிரில் போய் அமர வேண்டும். 'அமர்வதா?' என்கிறீர்களா ஆமாம் ஐயா. வசதியாக 250 பிளாஸ்டிக் மோல்டிங் நாற்காலிகள் வா, வா என அழைக்கின்றன. லால்குடியோ, ரவிசங்கரோ மெதுவாகக் காற்றில் இழைகிறார்கள். உங்கள் 'முறை' வரும் வரை 'ஆராமாக' இருக்கலாம். எந்த ரிஸர்வேஷன் ஆபீஸில் இந்த ராஜோபசாரம் ஸார்?

தகவல்: ரயில்வே பிரதம கமர்ஷியல் சூபரின்டெண்டெண்ட் ஜே. ராஜகோபாலாச்சாரி



# க்ளூகோன்-டி ஸூப்பர்ஹீரோ.

களைப்பூட்டும்
வெய்யிலிலும்
களிப்பூட்டும்
சக்திப்பெருக்கு




புதிய, அசல்,
வண்ணமயமான
பேக்கைப் பார்த்து
வாங்குவீர்.

களைப்பூட்டும் வெய்யில் நாளிலே உங்கள் குழந்தைக்குத் தேவை க்ளூகோன்-டி: க்ளூகோஸ், விட்டமின்-டி, கால்ஸியம் ஃபாஸ்ஃபேட்டுகள் அடங்கிய உடனடி சக்திபானம்.

பழரசம், தேநீர், காபி அல்லது தண்ணீரிலே கலந்து அருந்த, குடும்பத்தினர் அனைவர்க்குமே புத்துணர்ச்சி தரும் பானமாக அமைகிறது. 100, 200, 500 கிராம் பேக்கெட்டுகளில் கிடைக்கிறது. க்ளாக்ஸோ வழங்கும் க்ளூகோன்-டி.

**க்ளூகோன்-டி** ®

ஸூப்பர்ஹீரோ மிகவிரும்பும் சக்திபானம்.

GLL-2389



**ஹோட்டல் வைத்திருக்கும் திரு. கணேசன் (தமிழர்):**



''…என். டி. ஆர். ஆட்சிக்கு வந்த பிறகு தலைமைச் செயலகத்திலும் சரி, மந்திரிகள் மட்டத்திலும் சரி, நல்ல மாற்றங்கள் ஏற்பட்டிருக்கு. பொதுவாக லஞ்சம், ஊழலெல்லாம் குறைஞ்சிருக்கு. என். டி. ஆர். இந்த விஷயத்தில ரொம்பக் கண்டிப்பா இருக்கார்னு தெரியறது. அவர்மனசுல ஒண்ணு, வெளியில ஒண்ணுன்னு இல்லாம வெளிப்படையா பேசறவர். தான் நினைச்சது சரிங்கிற மாதிரி ஆணித்தரமா நடந்துக்கிறார். வாழ்க்கையில்வேஷம்போடற மற்றவங்களை விட தொழிலுக்காக வேஷம் போட்ட இவர் எவ்வளவோ தேவலை…''

**கொண்டபள்ளி வாசி ஸ்ரீராமுலு:**

''கிருஷ்ணா தண்ணீரை மெட்ராஸுக்குக் கொண்டு போற வழியில காலம் காலமா பஞ்சம்பட்டினியில இருக்கிற தெலுங்கானா மாவட்டங்களுக்கு உபயோகப்படுத்த நினைக்கிறது எத்தனை அருமையான விஷயம்! அதை ஏன் மற்ற மாநிலங்கள் புரிந்து கொள்ள மாட்டேன் என்கின்றன? எங்களுக்கு இருக்கிற உபரித் தண்ணீரை வறட்சியில் வாடும் எங்கள் சகோதரர்களுக்கு நாங்கள் கொடுக்கிறதுல இவங்களுக்கு என்ன கஷ்டம்? இந்த ஒரு விஷயத்துக்காகவே நான் எங்க சி. எம். மைப் பாராட்டறேன்…''

# முதலமைச்சரை விமர்சிக்கும் மன்னர்கள்

**தனியார் நிறுவனமொன்றில் பணி புரியும் நரசிம்மன்:**



''சுல்தான்களின் ஆட்சி ஹைதராபாத்தில் முடிந்துவிட்டது என்று சொல்ல முடியாது. என். டி. ஆர். தன்னுடைய மாப்பிள்ளைகளைக் கொண்டு மீண்டும் சுல்தான் ஆட்சி நடத்த விரும்புகிறார். அவருடைய குடும்பச் சொத்தாக ஆந்திராவை ஆக்க விரும்புகிறார்…''

**சீதம்மா, குடும்பத் தலைவி:**

வேறு சில மாநிலங்களில் வாபஸ் பெறப்பட்ட பத்திரிகைக் கட்டுப்பாடு சட்டத்தை ஆந்திராவில் கொண்டு வரப் பார்க்கிறார், என்.டி.ஆர். ஓய்வு பெறும் வயதைக் குறைக்க முயன்று கெட்ட பேர் வாங்கிக் கொண்டார். மேல் சபையை ஒழிப்பதில்பிடிவாதம்காட்டினார். இப்படி பல நடவடிக்கைகளில் அவரது மனத்தின் எதேச்சாதிகாரப் பகுதி பளிச்சிடக் காண்கிறோம். ஆனால் எளியோருக்கு நன்மை செய்ய வேண்டும்; அநீதியை எதிர்த்துப் போராட வேண்டும்; வரிப் பணம் விரயமாவதையும், லஞ்ச ஊழல்களையும் தடுக்க வேண்டும்என்பது போன்ற அம்சங்களில் அவர் மக்கள் மனத்தில் உயர்ந்து இன்னும் 'தேவுடு'வாகவே காட்சியளிக்கிறார்.

**பத்திரிகை நிருபர் ஆலம்பள்ளி ஸ்ரீநிவாஸலு:**

''கிராமங்களில் என். டி. ஆர். ஆட்சி திருப்தியாக இல்லை. சொன்னபடி ரேஷன் சாமான்களைச் சரியாக விநியோகிக்கவில்லை. இளைஞர்கள் மட்டத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் ஒண்ணும் மறையலை. என். டி. ஆர். வந்தவுடன் பெரிய அதிசயங்கள் நடந்துடும்னு மக்கள் நினைச்சாங்க. ஒண்ணும்இல்லாம போயிடவும்எல்லாருக்கும் சப் னு ஆயிடுச்சு…''



# பெண்களின் அலங்காரத்துக்கு

# ஆந்திரக் கலைகள்

### கண் கவரும் கலம்காரி!

ஆந்திர மக்களின் கைத்தொழில்கள் பல மனிதனின் கற்பனை ஆற்றலுக்கும், உழைப்பவர்களின் கலாரசனையுடன் கூடிய நுணுக்கமான வேலைப்பாட்டிற்கும் சிறந்த உதாரணங்களாகத் திகழ்பவை. ஓர் உதாரணம்: 'கலம்காரி' கலை.

கலம் என்றால் பேனா. காரி என்றால் வேலை. பேனாவில் செய்கின்ற வேலைப்பாடு என்கிற அர்த்தம் கொண்ட 'கலம்காரி' டிசைன்களும் மிகவும் புகழ்பெற்றவை. ஹைதராபாத்திலுள்ள உலகப் புகழ்பெற்ற சாலர்ஜங் மியூசியத்திலேயே கலம்காரி வேலைப்பாடுகளைக் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்கள்.

இன்றைக்கு பெட்ஷீட்டுகள் முதல் கர்சீஃப் வரை பலவற்றில் கலம்காரி பிரிண்ட்களைக் காணலாம். நவீன யுகத்தில் பல ரசாயனப்பொருள்களைக்கொண்டு இந்தடிசைன்கள் போடப்பட்டாலும், புராதனமான இந்தக் கலையில் முன்னர் பூ. இலை. காய்,



பழம் போன்றவற்றின் சாறுகளைக் கொண்டே வண்ணக் கோலங்கள் உருவாக்கப்பட்டன.தரமானஇத்தகையபிரிண்ட்கள் இன்றும் 'சிலக்கலூபூடி'யில் செய்யப்படுகின்றன. கலம்காரி வேலைப்பாடுகளுக்காகதேசியஅளவிலும்,மாநிலஅளவிலும் பரிசுகள் பெற்றுள்ள பார்த்தசாரதி அங்குதான் வசிக்கிறார்.

முதலில் துணிகளை பிளீச் செய்கிறார்கள். பிறகு பதினைந்து விதமான வெவ்வேறு வேலைகள் நடைபெறுகின்றன. பிளாக்பிரிண்டிங், வாஷிங், கஞ்சி போடுதல், மெழுகு வேலை என வெவ்வேறு நிலைகளில் டிசைன்கள் பூர்த்தியாகி வர இரண்டு மாதங்கள் ஆகும்! நல்ல வெயிலும் இந்த நாட்களில் இருக்க வேண்டும்.

ஒரிஜினல் கலம்காரி டிசைன்களைப் பார்க்கும் போது கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம் போலிருக்கிறது.

### முத்தான முத்தல்லவோ?

ஹைதராபாத் அருகே துறைமுகப்பட்டினம் கிடையாது; முத்துக் குளித்தலும் இல்லை. அவ்வாறிருக்க இங்கு முத்துக்கள் எப்படிப் பிரசித்தமாக இருக்கின்றன? "ஹைதராபாத்திற்குப் போறியா? கொஞ்சம் முத்துக்கள் வாங்கிண்டு வாயேன்'' என்று சொல்கிறார்களே, ஏன்?

விடை கிடைத்தது. நகரின் பிரபல முத்து வியாபாரிகளுள் ஒருவரான ரவீந்தரிடம்:

''அந்தக் காலத்தில் சுல்தான்களின் ஜனானாக்களில் (அந்தப்புரம்) முத்து அதிகமாக விற்றிருக்கிறது. இங்கு நிறைய வியாபாரம் ஆவதைப் பார்த்து முத்து வணிகர்கள் குவிந்திருக்கிறார்கள். அந்தச் சமயத்தில்தான் முத்துக்களில் சேதமில்லாமல் ஓட்டை போடுவதற்கு ஹைதராபாத்தின் பருவநிலை வெகு சாதகமாக இருக்கிறது என்பதையும் கண்டுபிடித்திருக்கிறார்கள். இன்றைக்கு முத்துக்களில் ஓட்டை போடும் தொழில் ஹைதராபாத்தில் வெகு பிரசித்தம். அயல் நாடுகளில் இருந்தெல்லாம் கூட கச்சா முத்துக்கள் வந்து குவிகின்றன. அதை ஓரளவு பதப்படுத்தி, ஓட்டை போட்டுக் கொடுக்கும்



தொழிற்சாலைகள் அதிகமாகிவிட்டன...'' என்கிறார் இத்தொழிலில் தேர்ச்சி பெற்றுள்ள ரவீந்தர்.

முத்து எப்படி உண்டாகிறது?

கடலிலுள்ள எல்லாச் சிப்பிகளிலும் முத்து விளைவதில்லை. சில சிப்பிகள் உணவுக்காக வாய் திறக்கும் போது தப்பித் தவறி கடல் மணல் ஒன்று அதன் வாயினுள் நுழைந்து வயிற்றுக்குள் போய்விடும். அது வயிற்றினுள் ஜீரணமாகாமல் எரிச்சலை உண்டு பண்ணும்போது ஒரு குறிப்பிட்ட திரவத்தை சிப்பி சுரந்து மண்ணைச் சுற்றி மூடிவிடுகிறது. ஆண்டுகளாக ஆக இது அங்கேயே இருந்து முத்தாக மாறுகிறது. இந்த இயற்கை நியதியைக் கண்டுபிடித்த மிகினோ டோஷியோ என்ற ஜப்பானியர் செயற்கையாக உருண்டை வடிவ மணலைச் சிப்பியின் வாயில் செலுத்தி கடலில்விட்டு இரண்டு ஆண்டுகளில் அழகிய முத்தைப் பெற்றிருக்கிறார். இதைத்தான் 'கல்சர் முத்து' என்கிறார்கள். இந்த முறையைக் கண்டுபிடித்த பிறகு முத்துக்களின் உற்பத்தி அதிகமாகி விட்டது. நம்முடைய தூத்துக்குடி துறைமுகத்தில்கூட இந்த முறையிலே ஏராளமான முத்துக்களைப் பெற ஆரம்பித்திருக்கிறார்கள்.

## தனியழகு தரும் புடைவைகள்

'போச்சன்பள்ளி' புடைவையைக் கட்டிக் கொண்டு வெளியில் போனால், கண்களை அகலவிரித்து ஒருநிமிடம் புடைவையை முறைத்துப் பார்த்துவிட்டுப் போகாத பெண்



மணிகளே கிடையாது! கட்டிக் கொண்டவர்களுக்கு ஒரு தனியழகைக் கொடுத்துவிடும் இந்த போச்சன்பள்ளி புடைவைகள். நலகொண்டா மாவட்டத்திலுள்ள போச்சன்பள்ளி என்ற கிராமத்திலும், சுற்றியுள்ள சில கிராமங்களிலும் தயாராகின்றவை.

இந்தப் புடைவையின் டிசைன்கள் அபூர்வமானவை. அவை எப்படி இந்தப் புடைவைகளில் இடம்பெற்றன என்பதே ஒரு சுவையான கதை! இந்த டிசைன்கள் முன்பு முஸ்லிம் ஆண்கள் தலையில் கட்டும் உருமா வில் இடம் பெற்றிருந்தனவாம். சுதந்திரம் கிடைத்த பின்னர் 'உருமா' கட்டும் அநேகம் பேர் பாகிஸ்தானுக்குப் போய்விட்டார்கள். [illegible] 'இந்த டிசைனை புடைவையில் ஏன் போடக் கூடாது?' என்று யோசனை தோன்றியிருக்கிறது. அந்த நாளிலிருந்து போச்சன்பள்ளி புடைவை ரொம்பப் பிரசித்தமாகி விட்டது.

போச்சன்பள்ளி கிராமத்தில் ஒவ்வொரு வீடும் ஒரு நெசவாளர் யூனிட்டாகத்தான் விளங்குகிறது. குடும்பத்திலுள்ள அத்தனை பேரும் ஆண் பெண் பேதமில்லாமல் வேலை செய்கிறார்கள். 'போச்சன்பள்ளி கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம்' நிறைய இவர்களுக்கு உதவி செய்கின்றது. அரசாங்கம் ஒரு வீட்டு வசதிக் காலனியையே ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. என்றாலும் கைத்தறியாளருக்கு எங்கும் இருக்கிற பல பிரச்னைகள், குறைகள் இவர்களுக்கும் உண்டு.

பருத்தி மற்றும் பட்டில் புடைவைகள் உருவாகின்றன. Tie & Dye முறையில் முதலில் டிசைன்களை ஏற்படுத்துகிறார்கள். பழைய சைக்கிள் ரப்பர் டியூபுகளைக் கொண்டு தேவையான இடத்தில் முடிச்சுகளைப் போட்டு வண்ணம் தோய்க்கிறார்கள். (சுற்று வட்டாரத்தில் பழைய ரப்பர் டியூபுகளுக்கு ஏகக் கிராக்கி!) வர்ணம் ஏறிக் காய்ந்தவுடன் மீண்டும் ரப்பர் டியூபால் முடிச்சுப் போட்டு மற்றொரு வர்ணத்தை ஏற்றுகிறார்கள்.

''ஏன் இந்தப் புடைவைகள் இவ்வளவு விலையுயர்ந்தவையாக இருக்கின்றன...?''

''நீங்கள்தான் பார்த்தீர்களே... டிசைன்களை நூலிலேயே பதித்து இழை இழையாக நெசவு செய்து இந்த டிசைனைக் கொண்டு வர வேண்டும். ஒரு இழை தப்பாகப் போனால் கூட டிசைன் தப்பாகிவிடும். முழுக்க முழுக்க மனித உழைப்பிலே நிதானமாகவும், கவனத்துடனும் செய்ய வேண்டியது. ஒரு நெசவாளி மாதத்திற்கு ஐந்து அல்லது ஆறு புடைவைகளைத்தான் நெய்ய முடியும். அதனால்தான் இவ்வளவு விலை; இவ்வளவு அழகும் கூட....

விலை அதிகமிருந்தாலும் கிராக்கி இருக்கிறதாம் இந்தப் புடைவைக்கு — குறிப்பாகத் தமிழ்நாட்டில்!

## விநோத வளையல்கள்!

ஹைதராபாத் வளையல்களும் அவற்றின் விநோதத் தன்மை காரணமாகப் பிரசித்தி பெற்றவைதாம். அரக்கில் கற்களைப் பதித்து வைத்த வளையல்களும், பல்வேறு உலோகங்களில் செய்யப்படுகிற வளையல்களும் ஹைதராபாத் போகிறவர்களைக் கவர்ந்திழுக்கும்.

ஆந்திரப் பிரதேசத்திற்கே உரிய பழங்குடி மக்களான லம்பாடிகள் நுனிக்கையிலிருந்து முழங்கைக்கும் மேலே தோள் வரை வளையல்களை அணிகிறார்கள்!



# பாதி குடித்து மீதி கொடுக்கும் நரசிம்மமூர்த்தி



'அ'விலிருந்தே ஆரம்பிக்கலாமே! குண்டூருக்கு அருகில் கிருஷ்ணா நதிக்கரையில் அமைதியான அமராவதி. அமரேசுவரரின் பத்தடிக்கு மேல் உயரமான கம்பீரமான தோற்றம். படிக்கட்டு வைத்து மேலே போய் லிங்கத்துக்கு அபிஷேகம். அடங்காது நின்ற அசுரர்களை அழித்து அமரர்கள் போற்றிப் பூஜிக்கும்படி அமரேசுவரராக நின்ற கோலம். பாலசாமுண்டீஸ்வரி அம்மவாரு எழில்கொஞ்சும் கோலத்தில் கருணையே உருவாக நிற்கிறாள்.

மங்களகிரியில் குடிகொண்டுள்ள பானகாலு நரசிம்ம சுவாமியைப் பற்றிக் கேள்விப்படாதவர்கள் குறைச்சலாகத்தான் இருப்பார்கள். ஒரு ஸ்பூனானாலும் சரி, ஒரு குடமானாலும் சரி, எந்தப் பாத்திரத்தைக் கொண்டு பானகத்தை ஊற்றினாலும் பாதியைக் குடித்துவிட்டு, பாதியை நிறுத்திவிடும் சுவாமி! "என்ன பானகாலு நரசிம்ம சுவாமி மாதிரி குடிக்கிறே?'' என்று கேலி செய்பவர்களும் உண்டு!

ஆந்திரப் பிரதேசத்திலேயே உயரமான கோபுரம் நம்மை வாவாவென்று அழைக்க மங்களகிரியின் பாதிமலை உயரத்தில் கோயில் உள்ளது.

அடிவாரத்திலேயே 'பானகம் கரைக்கணுமா, பாதி குடமா முழு குடமா?' எனக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள், அதற்கென்றே தயாராக இருக்கும் வியாபாரிகள். பானகம் தவிர எந்தவிதமான நைவேத்தியமும் இந்த சுவாமிக்குக் கிடையாது.

நாமுச்சி எனும் அரக்கனை வதம் செய்து உலகைக் காத்தான் சியாமள வண்ணன். மிருகம், மனிதன், ஆயுதம் ஆகியவற்றால் கொல்லப்படக் கூடாது என்று அரக்கன் வரம் வாங்கியிருந்ததால் சக்கரத்தால் கொன்றான். போரின் ஆவேசத்துடன் நரசிம்ம மூர்த்தியாக நின்றவனைக் கண்டு அஞ்சி நடுங்கிய தேவர்களிடம் அமிர்தம் கொண்டு வரச் சொன்னான். அன்புடன் அவர்கள் தந்த அமுதத்தைப் பாதி பருகி மீதியைப் பிரசாதமாகக் கொடுத்தான். அதுவே இன்றுவரை தொடருகிறது.

காலெல்லாம் 'பிசுக், பிசுக்' என ஒட்டிக் கொள்ளும் பானகச் சாறு. அத்தனை வெல்லமும் பானகமாகிப் பிசுபிசுத்த போதும் ஒரு எறும்பு, ஈ இருக்க வேண்டுமே... ம்ஹூம்!

விசுவரூப தரிசனத்தைக் காட்டினார்கள். பிரமிப்பாயிருந்தது. மலையிலேயே 'ஆ' வென்ற பிளந்த வாய்த் தோற்றம். வாயின் இருமருங்கும் சங்கு சக்கர சின்னங்கள்... கோபத்தில் உருட்டும் கண்கள்... வெளித் தள்ளி இருக்கும் நாக்கு... அத்தனையும் இயற்கையிலேயே தோன்றியுள்ள நேர்த்தியைக் கண்டு மெய்சிலிர்த்து நிற்கிறோம்.

அர்ச்சகர் நாம் கொண்டு போன பானகத்தை சங்கால் மொண்டு மொண்டு நரசிம்மத்தின் வாயில் ஊற்றுகிறார். 'களக் களக்' என்று பானகம் இறங்கும் சப்தம் கேட்கிறது.

* மங்களகிரி — பானகாலு நரசிம்மசுவாமி.

சரியாகப் பாதிக் குடம் காலியானவுடன் சப்தம் நின்றுவிடுகிறது. சங்கில் மீதிப் பானகம்!

ஒன்றும் பேசத் தோன்றவில்லை. கற்பூர ஆரத்தியில் தெரிந்த தெய்வத்தின் உக்கிரத் தோற்றத்தில் மெய்மறந்து மனத்திற்குள் நமஸ்கரிப்பதைத்தவிர வேறுதோன்றவில்லை.

நரசிம்மத்தின் சந்நிதிக்கும் மேலே குடி கொண்டுள்ள ராஜ்யலட்சுமி, வீரமும் விநயமும் சேர்ந்த ஆஞ்சனேயர், அங்கிருந்து காலடியில் தெரியும் மங்களகிரியின் தோற்றம்... பேச்சுக்கே இடமில்லாத பேரானந்த நிலை அது.

கூடாமல் தள்ளித் தள்ளிப் போய்க் கொண்டிருந்த என்னுடைய கல்யாணம் பெரிய பிரச்னையாக இருந்தது. அப்போது தான் யாரோ சொன்னார்கள்.'விஜயவாடாவி லுள்ள கனகதுர்க்காவை வேண்டிக் கொள்' என்று. இதோ என் மனைவி, குழந்தைகளுடன் மலையேறிக் கொண்டிருக்கிறேன்...'' என்றார் ஒரு சென்னைவாசி.

இது நாங்கள் விஜயவாடாவிலுள்ள கனக துர்க்கா கோவிலுக்கு மலையேறிக் கொண் டிருந்தபோது நடந்த குட்டி பேட்டி.

சென்னைவாசி என்றில்லை, விஜயவாடா, குண்டூர்வாசிகள் கனகதுர்க்காவின் சக்தியைச் சொல்லிச் சொல்லி ஆச்சரியப்படுகிறார்கள்.

அஷ்டலக்ஷ்மிகள் அவளைச்சுற்றியபிராகாரத்தில் அருளாட்சி செய்து கொண்டிருக்க, நடுவிலே அன்பாட்சி செய்கிறாள் கனக துர்க்கா. ஈஸ்வரனும், சுப்ரமணியனும்பக்கத்திலேயே குடிகொண்டு இருக்கிறார்கள்.

மசூலிப்பட்டணத்துல பண்டரி நாதனைப் பார்க்காமல் போகலாமோ?' என்றார் விஜயவாடாவில் சந்தித்த அரசாங்க அதிகாரி.

மச்சிலிப்பட்டணம்தான் மசூலிப்பட்டணம் ஆனதாம். இங்கு கவரிங் கோல்ட் நகைகள் ரொம்பப் பிரசித்தம். அதற்கும் பார்க்க வேண்டிய பண்டரிநாதர் கோவிலுக்கும் என்ன சம்பந்தம் என்கிறீர்களா? இருக்கிறது ஒரு கதை!

திருப்பதியிலிருந்து ஒரு உறவினரின் கல்யாணத்துக்காக வந்தவர் விசுவகர்மா குலத்தைச் சேர்ந்த நரசிம்மதாஸ். மசூலிப்பட்டணத்தில் கல்யாணம் முடிந்து கிளம்பியவருக்குத் திடீரென்று ஒரு பொறி தட்டியது. வசதியுள்ள எல்லோரும் தங்க நகைகளை அணிகிறார்கள். ஏழை பாழைகளுக்குத் தங்கத் தகட்டை மேலே ஒட்டிய வெள்ளி நகைகளைச் செய்தால் என்ன? இந்த ஆச்சாரிக்கு இப்படித் தோன்றிய கருத்துத்தான் பின்னால் 'கவரிங் கோல்ட்' நகைகள் என்று பெரிய வியாபாரமாக மாறியது.

நரசிம்மதாஸின் பொருளாதார நிலை உயர உயர அவருக்கு ஆன்மீகத்தில் ஈடுபாடும் உயர்ந்தது. அன்னதானம் செய்ய ஆரம்பித்தார். சத்திரங்கள் கட்டினார். பூஜைகளில் அதிகமாக ஈடுபட ஆரம்பித்தார். ஏழை பண்டரிநாதனிடம் அவருடைய மனம் அதிகமாக ஈடுபட ஆரம்பித்தது. அவர்



• அமராவதி



• பாண்டுரங்க பகவான்

ஞானத்தில் கனிந்திருந்த நேரம் பண்டரி நாதன் மசூலிப்பட்டணத்தில் ஆலயம் அமைக்கக் கட்டளை இட்டான். கோவில் முடிந்தவுடன் சுபமுகூர்த்த வேளையில் தானே எழுந்தருளுவதாகவும் கூறினான்.

அழகிய கோவில் எழுந்தது. குறிப்பிட்ட வேளையும் வந்தது. பண்டரிநாதன் தானே எழுந்தருளப் போகும் காட்சியைக் காண




சௌக்யம் என்று போய்க் கஷ்டத்தில் விழுகிறோம். ஸந்தோஷம் தருவது என்று நினைத்து ஆசையை வளர்த்துக் கொண்டு அதனாலேயே துக்கத்தை அடைகிறோம். இங்கேயும் ஆசை நிறைவேறாவிட்டால் தான் துக்கம் என்றில்லை; ஆசையின் நிறைவேற்றத்தாலேயும் துக்கம்தான். எப்படியென்றால் ஆசை நிறைவேற்றத்தால் எதைப் பெற்றோமோ அது கையை விட்டுப் போய்விடப் போகிறதே என்ற துக்கம். அதோடு பயம். இந்த பயம் நிஜமாயும் ஆகிவிடுகிறது. நமக்குக் கிட்டிய ஆசை வஸ்து நம்மை விட்டுப் போய்விடுகிறது. ப்ரியமானவர் செத்துப் போகிறார்; பணத்தைத் திருடன் கொண்டு போகிறான். அல்லது பாங்கு முழுகிப் போகிறது. அல்லது நமக்குத் திருட்டுப் போனதாக நேரே தெரியாவிட்டாலும் பணவீக்கத்தில் அதன் மதிப்புக் குறைந்து, 'ஐயோ! வீடு வாங்கலாம், கல்யாணம் பண்ணலாமென்று வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி மீத்தினோம்; இப்போது பார்த்தால் இந்த சேமிப்பு, மனை வாங்கக் கூடப் போதவில்லையே, வரதக்ஷிணைக்குக் கூடப் போதவில்லையே' என்று துக்கிக்கும்படி ஏற்படுகிறது.

ஸந்தோஷம் தரும் என்றுதான் ஒன்றுக்கு ஆசைப்படுகிறோமென்றாலும் அதை அடைவதற்கே வேறு எத்தனையோ கஷ்டப்பட வேண்டியதாகிறது. ஸினிமா பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமானால் எத்தனையோ நாழி 'க்யூ'வில் கால் வலிக்க நிற்க வேண்டியிருக்கிறது. அப்புறம் ஒரே புழுக்கத்தில் கண்ணை எரிய வைக்கிற வெளிச்சத்தோடு காதைத் துளைக்கிற சப்தத்தோடு ஓடுகிற ஸினிமாவைப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதனால் தலை வலியும் கண்ணெரிச்சலும் உண்டாகின்றன. கிரிக்கெட் பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமானால் முதல் நாள் ராத்திரியே அங்கே போய்ப் பனியில் படுத்துக் கொண்டு; பட்டினி, கிட்டினி பார்க்காமல் அவதிப்பட்டுக் கொண்டுதான் இடம் பிடிக்க வேண்டியிருக்கிறது என்கிறார்கள். இப்படித்தான் எதற்கு ஆசைப்பட்டாலும் அது கிடைப்பதற்குக் கூலியாகக் கஷ்டம் ஏதாவது படும்படியே இருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

லட்சக்கணக்கில் மக்கள் கூடிவிட்டார்கள். அப்போதிருந்த (1926) அரசு, 'இதென்ன கலாட்டா, கதவை இழுத்து மூடிவிட்டால் பாண்டுரங்கன் எப்படி வருவான்?' என்றெண்ணிக் கோவில் கதவுகளை மூடிப் பூட்டிவிட்டது.

ஆனால்... உள்ளே வெடி வெடித்தாற் போன்ற சப்தம். எல்லாரும் ஆஹாகாரம் செய்து கதவைத் திறக்க... அங்கே... பட்டு பீதாம்பரமும், வாயில் கள்ளச் சிரிப்பும், காதில் மச்ச குண்டலங்களும், இடுப்பில் வைத்த கையுமாகப் பாண்டுரங்கன்...!

'பாண்டு ரங்க விட்டலா...!' கூச்சல் காதைப் பிளந்தது. இப்படி வந்ததே மசூலிப்பட்டணத்திலுள்ள பாண்டுரங்கன் கோயில் என்கிறார்கள்.

மசூலிப்பட்டணம் கோல்டு கவரிங் பற்றி இன்னும் சில கூற வேண்டும். ஆரம்பத்தில் வெள்ளிமேல் தங்கத்தகடு பதித்து உருவாக்கிய கோல்டு கவரிங் பிறகு மாற ஆரம்பித்தது. ஒவ்வொரு வீட்டு வாசல் முன்பும் விதவிதமாகக் கோல்டு கவரிங் நகைகள் செய்பவர்களைக் காணலாம். தாமிரத் தகடு, பித்தளை இவற்றை மெஷினில் கொடுத்து நீளத் தகடாக்கி அமிலத்தில் நனைத்து மஞ்சள் நிறத்திற்குக் கொண்டு வருகிறார்கள். அதன் மேல் மெல்லிய தங்கத் தகடை 'வெல்ட்' செய்து கோல்டு கவரிங் ஆக்குகிறார்கள். நம்முடைய கோல்டு கவரிங் எல்லாம் பெரும்பாலும் அங்கிருந்து வருபவைதான்.

தங்கத் தகட்டை மேலே வெல்ட் செய்யாமல் தங்கம் கலந்த தண்ணீரில் முக்கி எடுத்து விடுவதும் உண்டு. இதனால் ஐம்பது அறுபது விற்ற கவரிங் இப்போது ஐந்து ரூபாய்க்கும் கிடைக்கிறது. தரம் வேறு விஷயம். இப்படி 'டிப்' செய்யப்பட்டு உருவாகும் நகைகளால் எங்களுடைய தொழில் பெரிதும் பாதிக்கப்பட்டு இருக்கிறது என்கிறார் 'பூர்ணா கோல்டு கவரிங் நகைக் கடை'யின் உரிமையாளர்.

பி. எம். பிர்லா பல தொழிற்கூடங்கள், நிறுவிப் பெயர் பெற்றவர். அவருடைய மற்றுமொரு சாதனை ஹைதராபாத்திலுள்ள பிர்லா மந்திர். ஹிந்துஸ்தான் சாரிடி என்ற அறக்கட்டளை நிறுவி இந்தக் கோவிலைக் கட்டியிருக்கிறார்.

சலவைக் கல்லிலே பளிச்சென்று வேலைப்பாடுகள் நிறைந்து சுத்தமும் சுகாதாரமுமாக விளங்குகிறது பிர்லா மந்திர். ஏழுமலைவாசன் பட்டுப் பீதாம்பரங்களுடன் இங்கே கம்பீரமாகக் காட்சியளிக்கிறான். ஓர் அப்பழுக்கு, சின்ன தூசைக் கூடக் காண முடியாது.

ஆந்திரம் முழுவதும் பக்திமணம் கமழும் கோவில்கள், சக்திச்சுடர் வீசும் தெய்வ சந்நிதானங்கள் ஏராளம். வெள்ளை உள்ளமும், கபடமற்ற நேசமும் கொண்ட ஆந்திர மக்கள் கொண்டாடும் இறைவனின் மகிமைகள் அனந்தம். அந்தப் பக்தி குளத்திலே மூழ்கி எடுத்த சில முத்துக்களை மட்டுமே பார்த்தோம். இன்னும் காண வேண்டியவை ஏராளம்.

# சத்தியத்தின் பெருமை

சத்தியமே பரப்பிரம்ம சொரூபம். சத்தியமே சிறந்த தவம். சத்தியமே சிறந்த யாகம். சத்தியமே சிறந்தது என்று சொல்லப்படுகிறது சத்தியமே வேதங்களில் சொல்லப்படுகிறது. சத்தியமே மேம்பட்ட பதவி, சத்தியமே தேவரிஷி, பிதுர் பூஜைக்கு உரியதாக இருப்பது சத்தியமே. விரதரசாணம்; சத்திய ஸ்வரூபமே. ஓங்காரம் சத்தியத்தினாலேயே காற்று வீசுதலும் சூரியன் தகித்தலும் அக்கினி எரிதலும் என்று உணர வேண்டும். சத்தியத்திலேயே சுவர்க்கம் நிலை பெற்றுள்ளது. சத்தியவானுக்கு சர்வதேவ பாராயணமும் சகல தீர்த்த ஸ்நானமும் செய்த பயன் கைகூடுவதுடன் தன் கோரிக்கைகள் யாவற்றையும் அடையக் கூடும். ஆயிரம் அஸ்வமேத யாகங்களைச் செய்த பயனையும் சத்தியத்தின் பயனையும் நிறுத்தால், சத்தியத்தின் பயனே விசேஷமாக இருக்கும். சத்தியத்தினாலேயே, தேவர்களும் முனிவர்களும் திருப்தியடைகிறார்கள். சத்தியமே, கவனிக்கத் தக்கது. முனிவர்கள் சத்தியத்தினாலேயே சிறந்த சித்திகளை அடைந்து, அப்ஸரசுகளுடன் கூடி திவ்விய விமானங்களில் ஏறி, விரும்பிய இடங்களில் சென்று திரும்புகிறார்கள். ஆழ்ந்தும் பரந்தும் விளங்கும் புண்ணியத் தீர்த்தமான சத்தியத்தில் நல்ல மனத்தோடு மூழ்க வேண்டும். அதுவே தூய்மையான நீராடலாகும். ஆகையால் மனநிறைவாக மக்கள் அனைவரும் வாய்மையையே உறுதியாகக் கொள்ள வேண்டும்.

**(சிவ மஹா புராணம்)**

நாங்களும் சத்தியமாக செய்கின்றோம்.

இனிப்பு வகைகள்: அதிரசம், ஸ்வீட் சோமாஸ், பொருள் விளங்காய் உருண்டை, குங்குமப்பூ ஹல்வா, குங்குமப்பூ பாதாம் ஹல்வா, குங்குமப்பூ ஜாங்கிரி, குங்குமப்பூ லட்டு, தேங்காய் போளி, மெங்களூர்ப் போளி, வெல்லச் சீடை.

கார வகைகள்: கைமுறுக்கு, தேன்குழல், தட்டை, சீடை, சீப்பு சீடை, ரயில் கட்டிடம், கான்பிளேக்ஸ் மிக்சர், பாம்பே அவல் மிக்சர், பாம்பே உருளைக் கிழங்கு சிப்ஸ், வெஜிடபிள் சோமாஸ்.

திருமண வைபவங்களுக்கு: பருப்புத் தேங்காய், அதிரசம், சீர்முறுக்கு, முள்ளுத் தேன்குழல், திரட்டுப் பால் ஆகியவை தயாரித்துத் தருகிறோம்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் அண்டு ஸ்நாக்ஸ்**

**No. 24 2வது மெயின் ரோடு**

**சென்னை - 600 020.**

போன்: 412557.

# அடுத்த ஓர் உலகம்

**13**



• ஃபிஜி நடனக் கலைஞர்கள்.

## மிளிரும் கலைகள்; மிதக்கும் தீவுகள்!

•• பிஜி மந்திரிசபையில் மந்திரிகளாக இருக்கும் இரு இந்தியர்களில் டாக்டர் அஹமது அலியும் ஒருவர். கல்வி மந்திரி அஹமது அலியுடன் சந்திப்பு அவரது அலுவலகத்தில் ஏற்பாடாகியிருந்தது. கல்வி மந்திரியாவதற்குமுன் உண்மையிலேயே கல்வித்துறையுடன் சம்பந்தப்பட்டிருந்தவர். சர்வகலாசாலையில் சரித்திரப் பேராசிரியராகப் பணியாற்றியவர். பல நூல்கள் எழுதியவர். சுறுசுறுப்பான இளைஞராகத் தெரிந்தார்.

''கல்வி மந்திரி பதவிக்கு மிகத் தகுதியானவர்'' என்று நான் அவரைப் பாராட்டிய போது, ''இல்லை'' என்று அவர் மறுத்தார். ''என் கல்வித் தகுதி ஒரு பலம் இல்லை; பலவீனம். மந்திரியாகச் செயல்படும்போது தன்னிச்சையாகச் செயல்பட முடியாது. பல கட்டுப்பாடுகள் உண்டு. ஆசிரியராக இருப்பதற்கும் அரசியலில் இருப்பதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது.''

இந்தியராக இருந்தும் இந்தியர்களுக்காக இவர் ஏதும் செய்வதில்லை என்ற புகாரை நான் கேட்டிருந்தேன். இவருடைய நிலைமை சற்று தர்மசங்கடமானது என்று எனக்குத் தோன்றியது. ஃபீஜியக் கட்சியின் வேட்பாளராகத் தேர்தலில் வென்று மந்திரியாகி இருப்பவர் ஆளும் கட்சியின் கொள்கையைத்தான் கடைப்பிடிக்க வேண்டியிருக்கும்.

''இங்கு இந்தியப் பள்ளிகளில் இந்திய மாணவர்களுக்கு இந்தியாவைப் பற்றிய பூகோள ஞானம் கூட இல்லையே?'' என்று கேட்டேன்.

''இங்கே இந்தியர்கள் ஃபீஜியர்களாக வாழ்வதுதான் நல்லது. இந்தியாவிற்குப் பள்ளிகளில் முக்கியத்துவம் கொடுப்பது சிக்கல்களை ஏற்படுத்தும்'' என்றார் அவர்.

''நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. பஞ்ச தந்திரக் கதைகளைப் போன்றவை மிக சுவாரசியமான நீதிக் கதைகள். நீங்கள் கிரேக்கப் புராணக் கதைகளைப் பாடத் திட்டத்தில்



• அரசு மாளிகை முன் காவல்

வாஸந்தி



• தாழப் பறக்கும் விமானம்

சேர்ப்பதில்லையா? அது போலக் குழந்தைகள் சில இந்தியக் கதைகளைப் படிக்கலாமே?'' என்றேன்.

''நீங்கள் சொல்வது சரிதான். இதை நான் ஞாபகத்தில் வைத்துக் கொள்கிறேன்'' என்றார்.

அவரிடம் விடைபெற்றபின் இந்தியப் பண்பாட்டுக் கேந்திரத்தின் இயக்குனர் வாசுதேவன் இந்திய ஹைகமிஷன் அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றார். ஹைகமிஷனர் ரவீந்திரநாதனுடன் சிறிதுநேரம் அளவளாவிவிட்டு பண்பாட்டுக் கேந்திரத்துக்கு நானும் வாசுதேவனும் விரைந்தோம். ஃபீஜி ரேடியோக்காரர்களும் பத்திரிகைக்காரர்களும் என்னைப் பேட்டி காணக் காத்திருந்தார்கள். ரேடியோவுக்காக ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் வெவ்வேறு நபர்கள் பேட்டி கண்டார்கள்.

ஃபீஜியில் ரேடியோ மிக முக்கியமானது. 332 தீவுகளை உள்ளடக்கிய நாட்டின் பல பகுதிகளில் தபால் போக்குவரத்து கிடையாது. ரேடியோவைத்தான் செய்தி அனுப்பும் சாதனமாகப் பயன்படுத்துகிறார்கள். எனவே ரேடியோ கேட்கும் வழக்கம் எல்லோருக்கும் இருக்கிறது. நான் ஃபீஜியை அடைந்த அன்றே, இந்தியாவிலிருந்து ஒரு தமிழ் எழுத்தாளர் வந்திருப்பதைப் பற்றிச் செய்தியில் அறிவித்தார்கள். கடைக்காரர்கள், ஹோட்டல் சிப்பந்திகள், பஸ் டிரைவர் போன்ற எல்லாத் தரப்பினருக்கும் என்னைப் பற்றித் தெரிந்திருந்தது! கடிதம் போக முடியாத இடத்துக்குச் செய்தி அனுப்ப வேண்டுமானால் ரேடியோவில் விஷயத்தைத் தெரிவிக்கிறார்கள். இதற்குச் சிறு கட்டணம் வசூலிக்கிறார்கள். ஜனத்தொகை குறைவானதால் அங்கே பட்டணங்களில் கூட வீட்டில் தபால் பட்டுவாடா செய்யும் வழக்கமில்லை. தபாலாபீஸில் ஒவ்வொருவருக்கும் தனித்தனிப் பெட்டிகள் உள்ளன. தினமும் அவரவர் ஒரு நடை வந்து கடிதங்களை எடுத்துப் போகிறார்கள். காரில் வருகிறார்கள்!

அன்று மாலை இந்திய பண்பாட்டுக் கேந்திரத்தில் ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்தது. "உங்களைப் பற்றி, உங்கள் எழுத்தைப் பற்றிப்





• நெஞ்சை அள்ளும் 'ஆர்க்கிட்'

பேசுங்கள்'' என்று வாசுதேவன் கொடுத்திருந்த கலபமான தலைப்பில் நான் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் ஆங்கிலத்தில் அடித்த தம்பட்டத்திற்குப் பிறகும் சோர்ந்து போகாமல் வந்திருந்தவர்கள் ஆர்வத்துடன் பல கேள்விகள் கேட்டது உற்சாகமாக இருந்தது! மறுநாளைக்கு தெற்கு பஸிஃபிக் சர்வகலாசாலையில் என் சொற்பொழிவு இருந்தது. பல தேசத்தைச் சேர்ந்தவர்கள் அங்கு பேராசிரியர்களாக இருக்கிறார்கள். அங்கு ஒரு தயாரித்த பேச்சைப் படிக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். என்னை சர்வகலாசாலைக்கு அழைத்துப் போக வந்திருந்த டாக்டர் முரளீதர் அரண்டு போனார். "அப்படியெல்லாம் செய்து விடாதீர்கள். நேற்று நீங்கள் குறிப்பே இல்லாமல் இயல்பாகப் பேசியதை நாங்கள் வெகுவாக ரசித்தோம். இங்கும் அதே மாதிரி பேசுங்கள்" என்றார். சுமார் அறுபது பேராசிரியர்களுக்கு முன்னால் நின்று பேசத் தயக்கமாகத்தான் இருந்தது. அதை உதறி விட்டுத் தைரியத்தைத் திரட்டிக் கொண்டு, ''இன்றைய உலகச் சூழலில் எழுத்தாளனின் கடமையும் பங்கும்'' என்கிற தலைப்பில் சில கருத்துக்களைக் கூறினேன். பேச்சை ரசித்துக் கைதட்டிய பேராசிரியர்கள் தொடர்ந்து கேள்விகள் பலகேட்டதால்வெறும்உபசாரத்துக்குப் பாராட்டவில்லை என்றும் இந்திய இதிகாசங்கள், பண்பாடு, இலக்கியம், நாடகம் முதலியவற்றில் பரிச்சயம் கொண்ட ஒருவரின் இந்தியக் கண்ணோட்டத்தில் இன்றைய உலகைப் பார்ப்பதில் அவர்களுக்கு ஆர்வம் இருந்தது என்றும் புரிந்தது.

மாறுதல்வேண்டும்என்கிறமுன்யோசனையுடன்ஃபீஜியபண்பாட்டுக்கேந்திரம்என்கிற திறந்தவெளி கலைக்கூடத்துக்கும் ஆர்க்கிட் வளர்ப்புக்காகவே உருவாக்கப்பட்ட ஆர்க்கிட் தீவு என்ற செயற்கைத் தீவுக்கும் சங்கம் அன்பர்கள் என்னை அழைத்துச் சென்றார்கள். ஃபீஜியர்கள் சிறந்த கலைஞர்கள் என்பதை அவர்களது நாட்டியத்தின் சுத்தமான அசைவுகளிலும் சுருதி பிசகாத சங்கீதத்திலும் கைவினைஞர்கள் உருவாக்கிய கலைப் பொருள்களிலும் கண்டேன்.

ஸுவாவிலிருந்து மறுநாள் காலை அவர்களது உள்நாட்டுச் சின்ன விமானத்தில் வனுவா லெவுத் தீவின் பிரதான நகரான லம்பாஸாவுக்குப் பயணமானேன். விமானம் மிகக் குறைந்த உயரத்தில் பறந்தது; அதனால் ஃபீஜி தீவுகளின் பல முக்கிய இடங்களை ஒரு பறவைக் கண்ணோட்டத்தில் காண முடிந்தது.

லம்பாஸாவில் நான் சந்திரசேகர் தம்பதியுடன் தங்கியிருந்தேன். அவர்கள் அளித்த ஒரு விருந்தில் ஃபீஜி எதிர்க்கட்சியைச் சேர்ந்த சுப்ரமணி பசவய்யாவைச் சந்தித்தேன். இவர் மிக சுவாரஸ்யமான மனிதர். பெற்றோர்கள் ஆந்திர மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் (கூலிகளாக வந்தவர்கள்) என்பதால் பசவய்யா ஆந்திராவுக்கு வந்து தங்கி, தெலுங்கில் பி. ஏ. பரீட்சைக்குப் படித்துத் தேறியிருக்கிறார். சுந்தரத் தெலுங்கு பேசுகிறார். அழகாக ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் உரையாடினார். தீர்க்கமான சிந்தனையாளர் என்பதை, மறுநாள் தன் தொகுதியிலிருக்கும் மிதக்கும் தீவுக்கு என்னைத் தம் காரில் அழைத்துக் கொண்டு போன போது அவரது பேச்சிலிருந்து புரிந்து கொண்டேன்.

''நீங்கள் இந்தியாவுக்குப் போய் தெலுங்கு படிக்க வேண்டும் என்று உங்கள் தந்தை விரும்பினாரா? என்று நான் அவரைக் கேட்டேன்.

''இல்லை. அது நானாக ஆசைப்பட்டுச் செய்த காரியம். என்னுடைய அப்பா தன் சொந்த ஊரின் பெயரைச் சொல்லக் கூட மறுத்துவிட்டார்!''

ஏன் அப்படி?'' என்றேன் நான் வியப்புடன்.

பசவய்யா சொன்னார்: ''இந்தியாவிலிருந்து இங்கு வந்த நிறைய ஆண்களை ஏதோ ஒரு குற்ற உணர்வு அழுத்தியிருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. தன் பால்யத்தைப் பற்றி அப்பா பேசவே மாட்டார். ஜாதிக் கட்டுப்பாடுகள் அந்த காலத்தில் இந்தியாவில் மிகக் கடுமை. சமுத்திரத்தைக் கடப்பதே குற்றமாகக் கருதப்பட்ட காலம் அது. 'லைன்'களில் (கூலி வேலைக்காரர்கள் தங்கிய வரிசை அறைகள்) கட்டுப்பாடில்லாத ஒரு வாழ்க்கை முறையை நடத்த வேண்டிய நிர்ப்பந்தம் வேறு. இவையெல்லாம் ஒரு கலாசார அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்க வேண்டும். என்னுடைய அப்பா உயர்ந்த ஜாதியைச் சேர்ந்தவராம். இங்கு கீழ் ஜாதியைச் சேர்ந்த என் தாயை மணந்தார். இந்தியாவில் தன் வீட்டவர்களுக்கு இந்த விஷயம் தெரியக் கூடாது என்கிற தீவிரத்துடன் அவர் சாகும் வரை இருந்தார். பொருளாதார ரீதியில் நாங்கள் முன்னேறி விட்டாலும் அவருக்கு இந்தத் தாழ்வு மனப்பான்மை போகவில்லை!

பேசிக் கொண்டே மிதக்கும் தீவுகளை நெருங்கி விட்டோம். "மிதக்கும் தீவு ஒரு தீவல்ல. இன்று மிதக்குமா என்று சந்தேகம். அது உங்கள் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது. காற்றைக் காணோம்'' என்றார் பசவய்யா. எனக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. பசவய்யா விளக்கினார்.

உண்மையில் மண்ணில்லாத வெறும் வேர்களும் பலரகப் பாசிகளும் சேர்ந்து திட்டாக ஒரு தீவாக உருவாகியிருக்கிறது. ஆனால் அதன் மேலே மரங்களும் செடிகளும் வளர்ந்திருக்கின்றன. நிலத்தின்கனமில்லாததால் அந்தத் தீவு மிதக்கிறது. பலமான காற்றடிக்கும் போது அதன் மரங்களின் திசை மாறும். கிழக்கே உள்ள மரம் தெற்கே அல்லது வடக்கே இடம் மாறிக் காணப்படும்!

அரை மணி நான் அங்கிருந்த நேரத்தில் எதுவும் திசை மாறவில்லை. ஆனால் அந்தத் தீவில் நிற்கும் ஆசையுடன் முன்னேறும் போது நிலத்தில் நடக்கிறாற்போல் காலை அழுத்தி வைக்க, 'சொதக்'கென்று சில விநாடிகள் இடுப்பு வரை புதையுண்டு போனேன்! அங்கு பசவய்யாவும் மற்றவர்களும் இல்லாதிருந்திருந்தால் சமாதியாகியிருப்பேன்!

(தொடரும்)



# நெருப்பாக நீ

"ஏதாவது வசிய மருந்து வச்சிருக்கியா இன்பா?"

— நந்தகுமாரின் கேள்விக்கு – இன்பா, கலீரெனச் சிரிக்கிறாள்.

"ஐயோ, நானா.. என் கிட்ட தலைவலி மருந்து கூட கிடையாதுபா..."

"பின்னே ஏன், அந்த ஆட்டுத்தாடி அச்சுதன்லேயிருந்து – ஃபர்ஸ்ட் இயர் ஸ்டுடண்ட் பால்ராஜ் வரைக்கும் உன்னைப் பார்த்தா இந்த வழிசல் வழியறாங்க..."

இன்பா, மாலை நேர வெயிலில் கண்களை இடுக்கிக் கொண்டு, அவனைக் குறும்பாகப் பார்க்கிறாள்.

"ஏன், அந்த லிஸ்ட்லே உன் பேரை விட்டுட்டே...."

இந்தக் கேள்வியால் தாக்குண்ட நந்தகுமார், தடுமாறிப் போனவனாய் அவளைப் பார்க்கிறான்.

"ஒவ்வொரு மனுஷனும் காதல்லே விழறச்சே, தன்னை அம்பிகாபதியாகவும், மஜ்னுவாகவும் கற்பனை பண்ணிக்கிட்டுத்தான் பேசறான்... ஆனா, அவன் எவ்வளவு அசடு வழியறான்னு – அவனுக்குத் தெரியாது. மத்தவங்களைக் கேட்டாத்தான் தெரியும்..."

"அம்பிகாபதியும், மஜ்னுவும் மாத்திரம் அசடு வழியாமத்தான் காதலிச்சாங்களா... உனக்குத் தெரியுமா...?"

இன்பா, 'பிடிவாதம் பிடிக்கும் எட்டு வயசுச் சிறுவனை, அவனது தாய் பார்ப்பது போல் – கனிவாய்ப் பார்த்துப் புன்னகைக்கிறாள்.

"நந்து, காதல்ங்கறதே ஒருவித அசட்டுத்தனம்தான்... வாழ்க்கையில் ஒவ்வொருத்தனுக்கும் – இல்லே – ஒவ்வொருத்திக்கும் – ஒரு துணை வேண்டியிருக்கு.. ஆரம்ப காலத்துல – அறுடமியிலே மயங்கறதைக் காதல்னு சொல்றோம்..., கடைசி காலத்துல – அஃபெக்ஷன்லே ஒருத்தரை விட்டு இன்னொருத்தர் பிரிய முடியாத நிலையை தாம்பத்தியம்னு சொல்றோம்...

"எப்படியோ, வாழ்க்கையே அறுடமியில ஆரம்பிக்கறதுங்கிறதையாவது ஒத்துக்க இன்பா..."

நந்துவின் விரல்கள், 'ஸ்கெட்ச் பேட்'டில் – இன்பாவின் உருவத்தை சிறைப் பிடிக்க முயன்று கொண்டிருக்க...

இன்பா – தொலைவில் மரத்தடியில் அமர்ந்து தனது குழந்தைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருக்கும் – சற்று முன் மாடலாக உட்கார்ந்திருந்த பெண்ணையே உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

அது என்னவோ, அந்தக் காட்சிதான் நிஜமான வாழ்க்கை போல இன்பாவுக்குத் தோன்றுகிறது.

இந்த ஓவியக் கல்லூரியில் மாடலாக நிற்க எத்தனையோ ஆண், பெண், வாலிப, கிழ, குழந்தைகள் வருவார்கள்தான்.

வாங்குகிற பணத்துக்காக – ஓவியர்கள் சொன்ன மாதிரியெல்லாம் நின்று உட்

சார்ந்து, படுக்கும் இவர்களைப் பார்க்கும் பொழுது பரிதாபமாக இருக்கும் அவளுக்கு.

இதோ — இந்த மரத்தடிப் பெண் கூட — குழந்தைக்குப் பால் கொடுப்பது போலத் தான் அரை மணி நேரத்துக்கு முன் வரையில் ஓவியத்துக்கு மாதிரியாக அமர்ந்திருந்தாள். ஆனால் குழந்தை, தாயிடம் ஒரு வாய் பால் கூட அப்பொழுது அருந்தவில்லை... அவளும், குழந்தையை வற்புறுத்தவில்லை... சும்மா, குழந்தையை மார்புடன் அணைத்தவாறு அமர்ந்திருந்தாள்.

அந்த நேரத்தில் அவள் முகத்தில் — 'நம் பிழைப்பு இப்படியாகி விட்டதே' — என்கிற வேதனைதான் மிஞ்சியிருந்தாற்போல... அம்மாவின் நிலைமை புரிந்துதானோ என்னவோ — குழந்தையும், அவள் மார்போடு ஒட்டி, கண்மூடிக் கிடந்தது...

இதோ — இப்பொழுது......

அவர்கள் யதார்த்த உலகில் வாழ்கிறார்கள்... குழந்தை அளவுக்கு மீறிய பசியில், முடிந்தால் — அம்மாவையே தன் சின்ன வாய்க்குள் அடக்கிக் கொண்டு விட வேண்டும் என்கிற ஆவேசத்தில் பால் குடிக்க...

தாய் — 'உனக்காக உயிரையே கொடுப்பேண்டா' என்பது போன்ற பூரிப்பில் கண் செருக உட்கார்ந்திருக்க...

இது வாழ்க்கை. மற்றவர்கள் பார்வைக்காக வாழாமல் தனக்காக மட்டுமே வாழ்கிற வாழ்க்கை....

இன்பா, நந்தகுமாரை திரும்பிப் பார்க்கிறாள். அவன், இன்னமும் அவளை வரைவதிலேயே முனைப்பாக இருக்கிறான்.

''அருடமி கொஞ்ச நாள்லே அலுத்துப் போயிடும் நந்து. பசிக்குத்தான் சாப்பிடணுமே தவிர, ருசிக்காகச் சாப்பிடக் கூடாது...''

நந்து, கையிலிருந்த பென்சிலை தூக்கி எறிகிறான்.

''நீ மகா இமிர் பிடிச்சவ. உன்னைப் போய் நான் ஆசைப்பட்டேன் பாரு. என் புத்தியப் பிய்ஞ்ச செருப்பாலேதான் அடிச்சுக்கணும். உனக்கு, உன்னைச் சுத்தி நாலு பேர் உருகி உருகி வளைய வர்றதுல ஒரு கர்வம். பசி, ருசின்னு பேசறதெல்லாம் வெறும் ஹம்பக். இத்தனை பேசறவ, ஏன் மத்தவங்க கண்ணைக் கவர்ற மாதிரி டிரஸ் பண்ணிக்கறே... கண்ணாடி வச்ச தச்ச ஸல்வார் கம்மீஸ்... காதுல முழ நீளத்துக்குத் தொங்கட்டான்.... தலைய ஷாம்பூ போட்டு பிரிச்சு விட்டு — ஸைடுல ஒத்தை ரோஜா... ஆர் யூ சீட்டிங்...?''

இவன் கத்துவதை நாலைந்து மாணவர்கள் நின்று பார்க்க, இன்பாவிற்கு 'நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போல இருக்கிறது.

அவள், அவனையே ஒரு கணம் இமைக்காமல் பார்க்கிறாள்.

''வீட்டுக்குப் போய் பேசலாம் வா...''

''நான் வரல்லே.''

அவன் முறுக்கிக் கொண்டு நிற்க, அவள் தன் கடைசி அஸ்திரத்தை பிரயோகிக்கிறாள்.

''நான் உன் கூட ஊருக்கு வரணுமா வேண்டாமா?''

''........''

''என்ன பார்க்கறே? எங்க அப்பாகிட்ட ஏற்கெனவே சொல்லியாச்சு. இத்தனை நேரம் அவர், என் துணி மணிங்கள எடுத்துப் பெட்டியில வச்சிட்டிருப்பார். என்னதான் நான் கேட்டாலும், நீயும் ஒரு வார்த்தை இன்பாவை எங்க ஊருக்கு அழைச்சிட்டுப் போயிட்டு வரட்டுமா சார்'ன்னு கேட்க வேண்டாமா?''

அவன் விட்டெறிந்த பென்சிலை எடுத்து முனை உடைந்துவிட்டதா என்பது போலப் பார்க்கிறான்.



அவளது உதட்டில் கீற்றாகப் புன்னகை.

''என்ன இருந்தாலும் இந்த நிமிஷம் வரைக்கும் நான் அவர் சொத்து இல்லையா, இந்தக் காலத்துல மாப்பிள்ளைகளே மாமனார்கிட்ட, தன் பெண்டாட்டிய அழைச்சிட்டுப் போக பர்மிஷன் கேட்கிறாங்க. நீ கேட்கலையின்னா எப்படி?''

''உன்னை என்னாலே புரிஞ்சுக்கவே முடியலே.''

அவன் உதட்டுக்குள் முணுமுணுத்தபடியே அவளுடன் நடக்கிறான்.

'என்னையே என்னாலே புரிஞ்சுக்க முடியலையே......'

இன்பா இதை வாய் விட்டுச் சொல்லவில்லை. மனத்துக்குள் நினைத்துக் கொள்கிறாள்.

அவள், ஓவியக் கல்லூரியில் அடியெடுத்து வைத்ததுமே முதல் அறிமுகம் இந்த நந்தகுமார்தான்.



அப்பொழுது இவன் மூன்றும் வருட மாணவன். கலர் கலராய் ஜிப்பாவும், இன்னும் விநோதமான உடையலங்காரங்களும், கலைந்த தலையும், மூக்குக் கண்ணாடிகளும், முகத்தில் அனேகமாய் ஒரு வாரத்துக்கு குறையாத தாடியும், தோளில் மாட்டிய ஜோல்னாப் பையிலிருந்து எட்டிப் பார்க்கும் தூரிகைகளும், சிகரெட்டில் இன்னதென்று இனம் பிரிக்க முடியாத மழுங்கலான அந்நிய நெடியுமாய்த் தெரிந்த மாணவர்களிடையே—

இவன் 'பளிச்' சென்று சுத்தமாய், ஒரு மெடிகல் ரெப்ரஸன்டேடிவ் மாதிரி, உடையலங்காரத்தில் மிருந்த கவனமெடுத்துக் கொண்டவனாய் இருந்ததால் மட்டுமல்ல....

சினேகிதன் ஒருவனை கன்னம் பழுக்க அறைந்த ஆவேசத்திலும் வித்தியாசமான வனாகத் தெரிந்ததால்....

இன்பாவின் கவனத்தைக் கவர்ந்தான்.







"பொறுக்கி ராஸ்கோல்! அந்தப் பொம் பிளேகிட்ட என்னடா சொன்னே? சொல்லு என்ன சொன்னே?"

"ஏயேய் விடுடா.... போயும் போயும் ஒரு சேரிப் பொம்பிளே சொல்றதை நம்பிட்டு என்னே அடிக்க வந்துட்டான். எனக்கென்ன இத்தனும் பெரிய மெட்ராஸ்லே பொண்ணு கிடைக —"

"பளார்!"

இவன் கொடுத்த அறையில், அவன் கன்னத்தை அழுந்தப் பிடித்துக் கொண்டு உட்கார.....

"லேடீஸ்கிட்ட மரியாதை கொடுக்க கத்துக்கிட்டு அப்புறமா பிரஷ்ஷைப் பிடிக் கக் கத்துக்கடா.... இவனெல்லாம் வரைய வந்துட்டான். போஸ் கொடுக்க வர்றவங்க எல்லாம் நீ நினைக்கிற மாதிரி, பணத்தை அதிகமாக் கொடுத்தா எதுக்கும் பணிஞ்சுட மாட்டாங்க. இங்கே வரைய வர்றப்பவே, மனசுல இருக்கற வக்ரத்தை டெட்டால் போட்டு கழுவிவிட்டு வரணும். போய், அவ கிட்ட மன்னிப்பு கேளு போ...."

இதற்குள் இவர்கள் இருவரையும் பிரிக்க, மாணவர்கள் கட்சி கட்டிக் கொண்டார்கள்.

மறுபடியும் நந்தகுமாரை இவன் பார்த்தது.... இரண்டு நாட்கள் கழித்து, ஒரு வகுப் பிலிருந்து இன்னொரு வகுப்புக்கு மாறிய பொழுது.....

வெட்டவெளியில்,சிலமாணவர்களோடு அமர்ந்து, தன்முன் நிறுத்தி வைக்கப்பட் டிருந்த கேன்வாஸில், பரபரவென கோடு களைக் கிழித்துக் கொண்டிருந்தான் அவன்.

அப்பொழுதே அவனிடம் நின்று நாலு வார்த்தைகளாவது பேச வேண்டும் போல இருந்தது அவளுக்கு.

என்னவோ, அவனுடன் காலம் கால மாய்ப் பழகியது போன்ற உணர்வு.

இத்தனை நாட்களும் இவனைத்தான் தேடிக் கொண்டிருந்தாற்போல மனத்துக்குள் ஒருவித சந்தோஷம்...

இதையெல்லாம் இப்பொழுது நந்தகுமா ரிடம் சொன்னால் — 'இதற்குப் பெயர்தான் காதல்' என்பான்.

அவளுக்கோ — ஒரு சினேகிதனைப் பல வருடங்களுக்குப் பிறகு பார்த்த பரவசம்...

இன்பா வலுவிலே போய்த்தான் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

"ஐயாம் இன்பா..."

"சந்தோஷம்... என் பேரு நந்தகுமார்.."

"தெரியும்... விசாரிச்சுத் தெரிஞ்சுக்கிட் டேன்..."

"ஓ......"

"நான், என் பேரு இன்பான்னு சொன்னே னில்லே?"

"ஆமா."

"இது என்ன புதுப் பேருன்னு கேட்கவே யில்லையே..."

"பேருல என்ன இருக்கு? ஏதோ ஒரு பேரு — காமாட்சி, மீனாட்சின்னு சாமி பேரா வைக் காம, ஏதோ ஒரு பேரை உங்க அப்பா வச் சிருக்காரு..."

"எல்லாரும் கேட்கிற மாதிரி நீயும்தான் கேளேன்..."

அவன் அதிர்ந்தான்.

''என்ன நீ... கொஞ்சம் இடம் கொடுத்தா, 'வாடா போடா'ன்னு கூப்பிடுவே போல இருக்கே...''

''ஸோ வாட்? நீயும் இங்கே ஸ்டூடண்ட் தானே... என் கிளாஸ்லே படிக்கிற பையன், ஃபைனல் இயர் பையனே 'வாங்க சார்'னு கூப்பிடறுன்? நான் மட்டும் எதுக்காகக் கூப்பிடணும்...?''

இப்படிச் சொன்னவள், உடனே குரலைத் தழைத்துக் கொண்டு, அவன் காதுக்கு மாத்திரம் கேட்கும்படி சொன்னுள்:

''வாங்க போங்கன்னு கூப்பிட்டா — ரொம்ப விலகி நிக்கிற மாதிரி இருக்கு. யு நோ... எனக்கு — இந்த லேடீஸ் அவங்க புருஷனே, 'வாங்க, என்னங்க'ன்னு கூப்பிறடறது கூடப் பிடிக்காது... எங்கே மரியாதை இருக்கோ — அங்கே நெருக்கம் ரெண்டாம் பட்சம்தான்.... நான், உன்னே ஒரு நல்ல ஃப்ரெண்டா நினைக்கிறேன்...''

''ஃப்ரெண்டாத்தானே... ஷூ...''

''என் பேரைப் பத்தி கேட்கவே இல்லையே...''

''இது வேற வம்பா?''

''வம்பா இல்லே... இன்பா... எங்க அப்பாவும் அம்மாவும் பதினேழு வருஷங்களுக்கு முன்னுடி சிலோன்லேயிருந்து இங்கே வந்து செட்டிலானவங்க... ஒரு காலத்துல இலங்கையில இன்பவல்லீன்னு ஒரு ராணி இருந்தாளாம்... அவ கடைசி மட்டும் சந்தோஷமாகவே வாழ்ந்துட்டுப் போனுளாம்... என்ன பார்க்கறே... கதையில்லே... நிஜம்... ஆதாரம் வேணுமா... ஏதோ ஒரு படத்துல சந்திரபாபு கூட பாடியிருக்காரு... 'இலங்கை நகரத்துல இன்பவல்லீயிருந்தால் — இந்து மகா சமுத்திரத்தை இங்கிருந்தே தாண்டிடுவேன்'னு... எப்பவும் சிரிச்சிக்கிட்டே இருக்கணும்னு தான் எங்க அம்மா, எனக்கு இந்தப் பேரை வச்சாங்களாம்...''

''இதுக்கு மேல என்னே அறுத்தியானு — இந்த நிமிஷமே உன் அம்மா ஆசையைப் பொய்யாக்கிடுவேன். நான் அறையற அறையிலே ஆயுசு முழுக்க அழுவே!''

''ஸாரி... ஆனு எனக்கு ஒரு ஹெல்ப் வேணுமே!''

''தெரியும்... நீ சுயபுராணம் படிக்க ஆரம்பிச்சப்பவே நினைச்சேன்... என்ன வேணும்? சொல்லித் தொலை...''

''இந்த பென்சில் எல்லாத்தையும் சீவித் தர்றியா... ஷார்ப்னர் வச்சு சீவக் கூடாதாம். பிளேடாலே சீவணுமாம்... விரலை வெட்டிப்பேனுன்னு பயம்மா இருக்கு...''

''நீதான் ஆர்ட் படிச்சு குப்பை கொட்டப் போறியா?''

''படம் வரையணும்னு ஆசை இருக்கு... ஆனு, ரத்தக் காயத்தைப் பார்த்தா, தலை சுத்தி மயக்கம் வந்துடும்...''

அவன், புன்னகையை அடக்கியபடி பென்சிலே சீவத் தொடங்க... அவள், நிஜமான பயத்துடன் சொன்னுள்:

''பிளேடால விரலை வெட்டிகிட்டா — என்னவோ கழுத்து அறுபட்ட தலைய பார்க்கற மாதிரி தோணும் எனக்கு!''

அவள் பயத்தைப் புரிந்து கொள்ளாமல் அவன், கடகடவெனச் சிரித்தான்...

(தொடரும்)



பருவத்தின் எல்லையில் என் பாசத்துக்குரிய மகள். சங்கடமான இந்தக் காலகட்டத்தில் அந்த இளம் உள்ளம் படும் வேதனை, தாயாகிய எனக்குத் தான் புரியும்.

# "என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித் தர நான் முடிவு செய்தது ஏனென்றால்"...

ஒரு சிறுமியின் வாழ்க்கையில் அவள் வயதுக்கு வரும் காலகட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும். பயமும், வெட்கமும், தவிப்பும் நிறைந்து, உடலளவில் மட்டுமின்றி மனத்தளவிலும் அவள் பாதிக்கப்படும் நேரமும் அதுதான்.

நான் ஒரு தாய். இந்தக் காலகட்டத்தை அனுபவித்தவள். அதன் சிரமங்களை நன்கு உணர்ந்தவள். குறிப்பிட்ட அந்த ஐந்து நாட்களும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்படும் சங்கடமும் தொல்லையும் எனக்கு நன்றாகவே தெரியும்.

**இத்தனை வருடங்களாக, சானிடரி பாதுகாப்புக்குத் தேவையானதை நான் வீட்டிலேயேதான் தயாரித்துக் கொள்வேன். அது மிகவும் தர்மசங்கடமான வேலைதான்!**

மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்காக நன்றாகத் துவைத்து, காயப்போட்டு... போதும் போதும் என்றாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கூட நமது 5 நாள் பிரச்னை விளம்பரப்படுத்தப்பட்டு விடும். இத்தனை அவஸ்தைப் பட்டாலும்,

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

---

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

---

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடி துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருக்கிறது...படிப்பு விஷயத்திலும் சரி, இதர வேலைகளிலும் சரி, நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

---

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

---

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




*கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்.*

**தனியாகவும் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ் 10 உள்ள பேக்கில்**

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்—பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு—மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.*

Johnson & Johnson

OBM/6746/R/TAM

உலகெலாம் உணர்ந்து ஓதும் ஒளிப் பிழம்பு, உயிரெலாம் கரம் கூப்பித் தொழும் கிழக்குத் திசையில், எழுவண்ணப் புரவி பூட்டி, அலகில் ஜோதியாம் அம்பலத்தாடு வான் போன்று அக்கினி நடம் புரிய ஆயத்த மாகிறான்.

அவனது மலர்ச் சிலம்படியை வாழ்த்தி வணங்குவது போலப் புள்ளினங்கள் பூரித் துப் புறநீர்மைப் பண்பாடி ஆர்ப்பரிக்கின் றன.

சோறு வளம் படைத்த சோழ நாடல் லவா?

எங்கும் பச்சைப் பசேல் என்ற மரகதப் போர்வை. மாடமெல்லாம் கருங்குவளை; வயலெல்லாம் நெருங்குவளை.

பாய்புனல் வந்தலைக்கும் பழம்பெரும் காவிரியாள் — கங்கையை நிகர்த்த காவிரி யாள் ஒருபுறம்...

அவளது நீரின் நீரான, உடன் பிறந்த சகோதரியான கொள்ளிடத்தாள் மறுபுறம்...

கொள்ளாத இடமுண்டோ தமிழகத்தில்? இதோ நான் கொள்ளிடமாகவே இருக்கி றேன் என்று குதூகலித்துப் பாய்ந்தோடும் கொள்ளிட நதியைக் கடந்து ஐந்து புரவி களில் ஆரோகணித்த தூதுக் குழுவினர், ஆவேசமாகச் சீறிப் பாய்ந்து வருகின்றனர்.

அதோ...

சோழர் தலைநகரங்களுள் சுந்தரத் தலைநக ராய் விளங்கும் கங்காபுரி எனும் கங்கை கொண்ட சோழபுரம் தெரிகிறது.

கொள்ளிடத்துக்கு ஆறு காத தொலைவி லிருக்கும் அந்தத் தலைநகரை உருவாக்கிய வர், உலகமா வீர புருஷர்களுள் ஒருவரான முதலாம் இராசேந்திரச் சோழமாமன்னர். அங்கே வெற்றித் திருமகள் வீரதாண்டவம் புரிந்து கொண்டிருந்தாள்.

இந்தத் தூதுக் குழுவுக்குத் தலைமை யேற்றுச் சென்று திரும்பிக் கொண்டிருந் தவன், குலோத்துங்க சோழன் என்கிற பெயரையே தனது பெயருடன் கொள்கிற அளவுக்கு ராஜவிசுவாசியான குலோத் துங்க சோழ யாத்வராயன்.

தூதுவை வெற்றிகரமாக முடித்துத் திரும்பு வேன் என்கிற பெருநம்பிக்கையுடன் சூளு ரைத்துப் புறப்பட்டவன்.

இப்போது...

குதிரைகளின் வாய் நுரைத்ததுதான் மிச்சம் என்கிற அவநம்பிக்கையுடன் திரும்பிக் கொண்டிருக்கிறான். அவலம் அவனது முகத்தில் அல்லாட்டமிட்டுக் கொண்டிருந்தது.

எங்கு சென்றான் யாதவராயன்?

தொண்டை நாட்டு இருபத்து நான்கு கோட்டங்களுள் புண்ணிய கோட்டம் புலியூர்க்கோட்டம்.

எத்தனையோ ஊர்களைக் கொண்ட இக் கோட்டம், சத்தனைய வளநாடாம் குன்றத் தூரைக் கொண்ட கோட்டமல்லவா?

குன்றாத நம்பிக்கையுடன் குன்றத்தூ ருக்குத்தான் சென்றான்.



# மாண்புமிகு முதலமைச்சர்

ஏன் சென்றான் யாதவராயன்?

'தொண்டை நாடு சான்றோருடைத்து' என்று பிற்காலத்தில், அண்டை நாடெல்லாம் ஆச்சரியத்தில் மூழ்கச் செய்யவிருக்கும் சேக்கிழார் மரபில் வந்து, சேக்கிழாராகவே உருவாகப் போகும் செந்தமிழ்ப் பனுவல் வல்லார் இராமதேவரைக் காணச் சென்றான்.

'இராம' என்கிற மராமர மந்திரத்து மகத்துவப் பெயரைப் பெற்றிருந்தாலும், 'சிவனையன்றி எவனையும் வணங்கேன்' என்று சீரிய வஞ்சினம்கொண்ட சிவமணிச் செல்வராயிற்றே இராமதேவர்!

எதற்காகச் சென்றான் யாதவராயன்.

அப்போதைய சோழ நாட்டு நிலை...

சீரும் சிறப்பும் செம்மாந்து காவல் நின்றாலும், பேரும் பொறுப்பும் பெரிதளவில் களைகட்டி நிற்க, காத்து நிற்க ஒரு முதலமைச்சர் தேவைப்பட்டார்.

சோழ அரசில் பலர் இருந்தும் பயனில்லை. ஒரு மாண்புமிக்க மானுடம் தேவைப்பட்டது.

அறிவும் ஆற்றலும் செறிவும், செயல் திறனும் மிக்க ஓர் அரசியல் ஞானி தேவைப்பட்டார்.

அவைக் குரவரும் அநபாய (இரண்டாம்) *குலோத்துங்க சோழ மாமன்னனுடைய ஆசானுமான கவிராட்சஸர் ஒட்டக்கூத்தர் இருந்தும்...

"எனக்கும் அரசியலுக்கும் ஏழாம்பொருத்

## கோவி. மணிசேகரன்

* கி. பி. 1133 — 1150.



## தவத்திரு குன்றக்குடி அடிகளார் வாழ்த்துரை



தமிழ்நாடு புண்ணியமும் புகழும் பூத்துப் பொலிவெய்திய வரலாற்றுப் பெருமையுடையது. தமிழ் — சைவம், சமுதாயம் — இவை ஒன்றை ஒன்று தழுவிய நிலையில் வளர்ந்து கால் கொண்டன. பழந்தமிழக அரசியல் வரலாறு உலக நாடுகளின் வரலாற்றோடு முற்றிலும் முரண்பட்டது. இன்றைய மக்களாட்சி முறையில் மக்கள் அனுபவிக்கும் உரிமைகளை அன்றே பெற்றிருந்தனர்; மகிழ்வுடன் வாழ்ந்தனர். அரசின் அமைச்சர்களாக விளங்கியவர்கள் தமிழறிஞர்களாகவும் சைவத் தொண்டு செய்பவர்களாகவும்விளங்கினுர்கள். உலகு புகழ் திருவாசகம் தந்த மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டின் முதலமைச்சர். சைவக் காப்பியமாகவும் செழுந்தமிழ் வழக்கின் அரணுகவும் விளங்கும் பெரிய புராணத்தை இயற்றித் தந்தவர் சோழ நாட்டின் முதலமைச்சராக விளங்கிய சேக்கிழார் பெருமான்.

முதலமைச்சர்கள் தமிழக வரலாற்றைச் சிறப்புற இயக்கிய வரலாற்றை 'எழுத்து வேந்தர்' கோவி. மணிசேகரன் எழுதப் போகிருர்.

தமிழ் மணம் கமழும்; சைவ நெறியின் மாண்புகள் நிறைந்திருக்கும்; மாண்பமைந்த மானுடத்தின் நல்லியல்புகள் தெரியும்.

படிப்பதற்கும் பயன்படுவதற்கும் ஆயத்தமாக இருப்போமாக!

தம்!'' என்று கூறிவிட்டாரே!

இறுதியாக அந்தத் தமிழ் ஞானம் கண்ட முடிவுதான், குன்றத்தூரில் வசிக்கும் மாண்பு நிறைந்த அரசியல் ஞானியான இராமதேவரை அழைத்து வர உத்தரவிட்டது.

ஆனுல் நடந்தது?

ஓ... எத்துணை நம்பிக்கையுடன் சென்றுன் யாதவராயன்!

நட்பு நலம் பயக்கும் என்று நம்பியது...

தூதுக்குழுவினர் தலைநகரின் கிழக்கு வாசலில் நுழைகிருர்கள்.

நான்கு வாசல்களிலும் எல்லைத் தெய்வமாக மிகப் பெரிய காளி சிலைகள்.

புரவியை நிறுத்திக் காளி சிலையைக் கவனிக்கிருன் யாதவராயன்.

''ஏ, எல்லைத் தெய்வமே! இதுவோ உன்னை வேண்டிச் சென்றதன் பயன்?' — மனத்தின் மறுகிய முனகல்!

அரண்மனை நோக்கிப் புரவிகள் செல்கின்றன.

தூதுவர்கள் வந்துவிட்டார்கள் என்கிற செய்தி கேட்டு அரண்மனை அதிகாரிகள் பரபரத்துக் காணப்படுகிருர்கள்.

அவைக் குரவர் ஒட்டக்கூத்தர், அவசர அவசரமாக விரைந்து வருகிருர். வயதானுலும் அவரது உடலில் வசந்த தமிழின் வாலிபம் இருந்தது.

அரண்மனையின் ஆலோசனைக் கூடத்தில் அதற்குள் அனைவருமே குழுமிவிட்டனர்.

சற்றைக்கெல்லாம்....

குவலயங்கள் முற்றப்புரக்கும் முகில் வண்ணனுன கொற்றக் குலோத்துங்க சோழ மாமன்னன் வருகைதரும்செய்தியை அறிவிப்பாளன் அறிவிக்கிருன்.

சர்வக்ஞ கவியான ஒட்டக்கூத்தரைத் தவிர அனைவரும் எழுந்து நிற்கிருர்கள். அவர்களுடைய கண்கள் இராசகேசரி குலோத்துங்கன் என்ருல், இதயம் சோழ சாம்ராஜ்யம்.

* கார் வண்ண நிறமும், தேரன்ன ஒப்பனையும், பார்முழுதும் காணப் பரபரக்கும் தோள்களும், 'யாரெனை எதிர்ப்பார்? எதிர்ப்பவரும் உண்டோ?' எனக் கேட்கும் கூரன்ன வாளும் கோதிலாத் தோற்றமுமாக வருகை தருகிருன் குலோத்துங்க சோழ மாமன்னன்.

ஆசானை வணங்கி, தானும் அமர்ந்து, அனைவரையும் அமரச் செய்கிருன்.

யாதவராயன் எழுந்து நின்று வணங்கி, தூது சென்ற செய்தியை அறிவிக்கிருன்:

''சோழப் பெருமானே! சூளுரைத்துச் சென்றேன்; மிஞ்சியது...''

''மிஞ்சியது?''

''இராமதேவர் மறுத்து விட்டார்.''

''என்ன காரணம்?''

நீண்ட பெருமூச்சுடன் மீசையை நீவி விட்டுக் கொள்கிருன் சோழமாமன்னன்.

யாதவராயன் விளக்கினுன்:

''கவிராட்சஸரான ஒட்டக்கூத்தர் பெருமான், வீற்றிருக்கும் அவையில், நான் முதலமைச்சராக இருப்பதா? புவிராட்சஸரான சோழமாமன்னருக்குக் கவிராட்சஸரே மாண்புமிக்கவர்! அவரே முதலமைச்சராக இருப்பது சாலப் பொருத்தம் என்று சொல்லுங்கள் என்று சொல்லிவிட்டார். நான் எவ்வளவோ எடுத்துக் கூறினேன். நட்பை முன் வைத்துக் கெஞ்சினேன். கிடைத்த மறுமொழி? 'சிவோகம்' என்று கூறி உதிர்த்த ஒரு தமிழ்ச் சிரிப்பு. அவ்வளவே!''

அமைதியில் ஆழ்ந்தது ஆலோசனைக் கூடம்.

தொண்டையைச் செருமி மெல்ல அமைதியைக் கலைத்தார் ஒட்டக்கூத்தர். அவரது ஒளி

* கொற்றக் குலோத்துங்க சோழன், குவலயங்கள், முற்றப்புரக்கும்முகில்வண்ணன்.—ஒட்டக்கூத்தரின் குலோத்துங்க சோழனுலா.

நிறைந்த கண்கள் அநபாயனை நோக்குகின்றன. "அபயா! உனக்கு அபயமளிக்க இப்போது நான் வஞ்சினம் மேற்கொள்கிறேன். எப்படியும் இராமதேவரை அழைத்துவர ஏற்பாடு செய்வேன். இச்சபதத்தைக் கூத்தபிரானாகிய சிவபெருமானை வணங்கி மேற்கொள்கிறேன்."

குலோத்துங்கனும் உடன் சேர்ந்து சொன்னான்: "நானும் தங்களுடன் சேர்ந்து தில்லையம்பலவனை வேண்டிக் கொள்கிறேன்! இராமதேவர் இந்த மாண்புமிக்க முதலமைச்சர் பதவியை ஏற்று, சோழப் பேரரசைச் சொர்க்கபுரியாக்குவாரேயானால் தில்லைப் பேரம்பலத்துக்குப் பொன் வேய்ந்து சிறப்பிப்பேன்!"

கங்கை கொண்ட சோழேச்சுரத்து உதய கால வழிபாட்டு ஆலய மணி ஒலிப்பது கேட்கிறது.

இராமதேவர், முதலமைச்சர் பதவி ஏற்கச் சம்மதிக்கவில்லை என்கிற செய்தியை மோப்பம் பிடித்துவிட்ட பாண்டிய நாட்டு ஒற்றர் இருவர், மதுரை நோக்கி வேக வேகமாக விரைகிறார்கள்.

மங்காத் தமிழ் வளர்த்த மாமதுரையை அணைத்துப் பொய்யாக் குலக்கொடியான வைகைப் பெருநதி மங்கிய நிலையில் பாய்ந்தோடுகிறது.

ஒரு காலத்தில் 'ஓகோ' என்று கொடி கட்டிப் பறந்த பண்டு புகழ் பாண்டிய நாடு, முதலாம் இராசராச சோழ மாமன்னர் காலத்துக்குப் பிறகு, சோழநாட்டுப் பிடியில் சோர்ந்து திரை செலுத்தத் தொடங்கியது.

இப்போதைய பாண்டிய அரசன் மாறவர்மன் சீவல்லபன்.

பாண்டிய நாடு எப்போது விடுபடும்? எந்நேரம் எடுபடும்? — என்று ஏங்கி, ஒவ்வொரு நாளும் ஓராயிரம் கனவில் ஆழ்ந்து சிந்திக்கிறான், சிந்திக்கிறான்....

அரசியல் ஞானமும் தமிழ்ஞானமும் ஒருங்கே பெற்ற குன்றத்தூர் இராமதேவர் மட்டும் கிடைத்துவிட்டால்?

அரசும் அழகுறும்; தமிழ்ச் சங்கமும் மீண்டும் தலைதூக்கும்.

இதற்கிடையில்தான் இராமதேவரை முதலமைச்சராக்கச் சோழ நாடு முனைவதாக அறிய நேர்ந்தது. அது எவ்வளவு தூரத்துக்கு உண்மை என்பதை அறியவே ஒற்றர்கள் சென்றிருந்தனர்.

ஒற்றர்கள் கொண்டு வந்த செய்தியறிந்து மகிழ்ந்து போனான் மாறவர்மன் சீவல்லபன்.

அருகிலிருந்தசேனாதிபதிசொல்விளங்கும் கருணாதாசனை நோக்குகிறான் பாண்டிய அரசன்.

"நாம் முயன்று பார்க்கலாமே சேனாதிபதி?"

"அரசே! சோழப் பேரரசுக்குப் பணியாத இராமதேவர், நமக்கா ஒப்புக் கொள்ளப் போகிறார்?' நம்பிக்கையில்லை. ஆனால்குயுக்தியால் இதனைச் சாதிக்கலாம்."

"எப்படி? சொல் விளங்கும்படி சொல்!"

"நமது நாட்டுக்குட்பட்ட தேனூர் ஆடலரசி ஜோதியை அறிவீர்கள் அல்லவா?"

"நன்கு அறிவேன். அரச அவையில் ஆட அழைத்தபோது, கம்பீரமாக மறுத்துவிட்ட கலைச் செல்வி; சிவநேயச் செல்வி!"

"அந்தக் கம்பீரத்தால்தான் இன்னொரு கம்பீரத்தைவீழ்த்தமுடியும்! அந்தச்சிவநேயத்தால்தான் இன்னொரு சிவநேயத்தை ஆட்கொள்ள முடியும்."

"இன்னும் விளங்கச் சொல்லலாம்!"

"பிறகு சொல்கிறேன். பயணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்."

அன்றே பாண்டிய அரசன் மாறவர்மன் சீவல்லபன், சேனாதிபதி சொல்விளங்கும் கருணாதாசனுடன் தேனூர் நோக்கிப் பயணமானான்.

தேனூர் என்கிற பெயரைப் போலவே அந்தத் தேனூர் எனும் கிராமமும் தேனாய் இனித்தது.

ஆடலரசி ஜோதி வசிக்கும் வீட்டை விசாரித்துச் செல்கிறார்கள்.

ஓடு வேய்ந்த வீடு; ஆனால் அதில் பீடு வேய்ந்த பெருமை நிரம்பிக் காணப்பட்டது.

பாண்டிய அரசர் வந்திருக்கிறார் என்கிற செய்தி கேட்டு அந்தக் கிராமமே திரண்டு விட்டது.

ஜோதியின் தாயாரான மீனலோசனியம்மாளும் நட்டுவனார் நாகசாமியும் ஓடோடி வந்து வரவேற்கிறார்கள்.

அரசனே வீடு தேடி வந்ததில் பெரு

கோல்கொண்டா கோட்டை

சரித்திரப்புகழ் பெற்றது. ஹைதராபாத்திலிருந்து 10 கி. மீ. தூரத்திலுள்ளது. இந்தக் கோட்டையின் வாயிலில் குறிப்பிட்ட இடத்தில் இருந்து கைதட்டினால் கோட்டையினுள் எங்கோ இருக்கும் அரசவையில் ஒலி கேட்கிறது. இது இன்றைய நவீனக் கட்டிட வல்லுநர்களையே திகைக்க வைக்கிறது.



மையோ, பெருமை.

ஆசனங்களில் அரசனும் சேஞதிபதியும் அமர்ந்திருந்தனர்.

தன்னை ஒருவாறு அலங்கரித்துக்கொண்டு, தோழிப் பெண் வல்லரசியுடன் வந்து நின்று வணங்குகிருள், காவியக் கருவோ, ஓவியத் திருவோ எனக் கண்டோர் வியக்கும் பேரழகி ஜோதி.

''ஜோதி! நலமா?''

''பிறைசூடிய பெருமான் அருளால் யாவ ரும் நலம்.''

''எனது அவையில் ஆட அழைத்த போது ஏன் மறுத்தாய்? மறுத்ததற்கான காரணம்?''

''பல காரணங்கள் உண்டு. அரச அவை யில் ஆடத் தொடங்கினுல், பிறகு அரசரின் அந்தரங்கத்தில் ஆடும்படியான சோதனை நேரலாம். பொருள் கொடுத்து என் நாட்டி யத்தைப் பெறச் சம்மதிப்பேன்; என்னைப் பெறச் சம்மதியேன். அதனுல்தான் எவர் நடனத்துக்கு ஏற்பாடு செய்தாலும் சிவன் கோயில் முன் செய்ய வேண்டுவது. சிந்தனை யில் சிதறல் இருக்காதல்லவா?''

ஓ... இவள் கற்பில் ஜோதியாகவும் பிரகா சிக்கிருள்.

''ஜோதி! உனது லட்சியத்தை நான் மதிக் கிறேன். உன்னுல் ஒரு செயல் நிறைவேற வேண்டும். நிறைவேற்றித் தந்துவிட்டால்... இந்தத் தேனூரரையே தானமாகத் தரு வேன்!''

''தேனூரரையே தானமாகவா...?'' தாயார் மீனலோசனி மருண்டே போனுள்.

அரசனே மீண்டும் பேசினுன்.

''இது எனக்குச் செய்யும் உதவியல்ல; பாண்டிய நாடு தழைக்கச் செய்கிற உதவி! நீ பிறந்த நாடு நிலை பெற்றுத் தழைக்க வேண்டு மல்லவா?''

நியாயமான வேண்டுதல் என்பதை யுணர்ந்த ஜோதி, ''என்ன உதவி அரசே?'' என்ருள்.

''தொண்டை நாட்டுக் குன்றத்தூரில் தமிழ்ச் சான்ருேரான இராமதேவர் இருக் கிருர். அவர் மட்டும் நமது பாண்டிய நாட் டுக்கு முதலமைச்சராக வந்துவிட்டால், அந்த அரசியல் ஞானியால், அரசு பேரரசு ஆகி விடும்.''

இராமதேவர்......

என்னே பொருத்தம்...!



நம் ஊரில் ஜிராக்ஸ் கடைகளில், பிரதி ஒன்றுக்கு ஒரு ரூபாய் வாங்குகிருர்கள். ஆனுல் ஆந்திராவிலோ ஐம்பது காசு தான் வாங்குகிருர்கள். நிறைய பிரதி கள் எடுக்க வேண்டியிருந்தால் சலுகை உண்டு. அப்போது பிரதிக்கு 40 காசு தான்.

அவள் வசந்தத்தை இதழ்களில் விரித்துத் தென்றலாய்ச் சிரிக்கிருள்.

''ஏன் சிரிக்கிருய் ஜோதி?''

''ஒரு பொருத்தத்தை எண்ணி! நானே நாளை குன்றத்தூர் நோக்கிப் புறப்படுவதாய் இருக்கிறேன். சிவனை நினைந்து ஆடுவது மட்டுமல்லாது, சிவத்தொண்டர்கள் வர லாற்றையறிந்து ஆட முடிவு செய்திருக்கி றேன். சுந்தரமூர்த்தி நாயனுர் திருவாக்கால் திருத்தொண்டர்களைப் பற்றி ஒரு வரியில் அறிவேன்; நம்பியாண்டார் நம்பியின் திரு வாக்கால் ஒரு பாடலில் அறிவேன். ஆனுல் தெளிவாக அறிய இராமதேவரை நாடிச் செல்கிறேன். இராமதேவர் தமிழ்த் தவசி; அரசியல் ஞானி; அத்துடன் வரலாற்றுப் பேராசான். எனவேதான்!''

மாறவர்மன் சீவல்லபனின் முகத்தில் நம்பிக்கை ஒளி படருகிறது.

ஜோதியே தொடர்ந்து சொன்னுள்:

''அரசே! நான் எந்தவிதமான வாக்குறுதி யையும் இப்போதைக்குத் தருவதற்கில்லை. தேனூர் கிடைக்கிறதே என்பதற்காகத் தேனனைய எனது லட்சியத்தைப் பாழ்படுத் திக் கொள்ள மாட்டேன். கேட்டுப் பார்ப் பேன்; ஆனுல் வலியுறுத்த மாட்டேன்; அந்தத் தகுதியும் எனக்கில்லை.''

''நீ நினைத்தால் நிச்சயம் இதனைச் சாதிக்க லாம். பாண்டிய நாடு உன் நாடல்லவா?''

''இல்லை; யாதும் ஊரே; யாவரும் கேளிர்!''

''உனது பரந்த எண்ணத்தைப் பாராட்டு கிறேன், ஜோதி! ஆனுலும் அரசனே உன் வீடு தேடி வந்து கேட்கிருன். நிறைவேற்றி வைப்பாயேயானுல் நீ வெறும் ஜோதி யல்ல; அலகில் ஜோதி!''

''சாகசம் புரியச் சொல்கிறீர்களா?''

''சத்தியமாக நான் அப்படிச் சொல்ல வில்லை. நீ நினைத்தால் முடியும் என்றுதான் சொன்னேன். காரணம் உன்னிடமுள்ள சிவ மோகம்! சிவ யாகம்! சிவ தாகம்!''

''நீங்கள் நினைப்பது போல நான் ஒன்றும் துறவியல்ல. ஆசாபாசங்களுக்கு அடங்கிய வள்தான். அது வெளிப்படவில்லை; வெளிப் பட மறுக்கிறது; நல்லது; அரசே! அந்தச் சிவபெருமான் திருவருள் எப்படியோ, அதன் படி முயல்வேன். ஆனுலும் ஒன்று சொல் வேன், என் கதை எந்த நாட்டில் எப்படி எழுதப் பெறுமோ? நானறியேன். உங்களுக் காக முயல்வேன். ஆனுல் எனக்காகத்தான் வாழ்வேன்!''

தோழிப் பெண் வல்லரசி, பழச்சாறு கொண்டு வந்து வைக்கிருள்.

பாண்டிய அரசன் எழுந்து கொண்டான்:

''ஜோதி! நான் இந்தப் பழச்சாற்றை எதிர் பார்க்கவில்லை; குன்றத்தூர் அமுதத்தை எதிர்பார்க்கிறேன். என்னை விஷமாக்கி விடாதே!''

மாறவர்மன் சீவல்லபன், மனக்குமைச்ச லுடன் புறப்பட்டான்.

(தொடரும்)

# Durga brand
# The powerful Cement



growing from strength to strength
building up a reputation for high quality
sturdiness and durability with

**DURGA**
**BRAND** **Solid strength for your buildings and bunglows**






The Andhra Cement Company Limited
[illegible] Sarojini Devi Road
Secunderabad 500 003

**Andhra Cement - 50 years buttressed in golden growth.**

# வேத வைதீக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

நாகராக்ஷரம் — (Devanagari Script)

1. ரிக்வேத ஸம்ஹிதா — 10 மண்டலங்கள் — விலை ரூ. 160/—

2. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் — 3 பாகங்கள் — விலை ரூ. 210/—

முதல் பாகம் — தாண்டியம், ஷட்விம்சம், திருவிசநல்லூர் மஹா மஹோபாத்யாய ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகளால் இயற்றப்பட்ட ஸாமவேத உத்கர்ஷம், ஸாமவேத ஸ்வரமாத்ராதி தத்வவிலாஸம், மன்னார்குடி மஹா மஹோபாத்யாய ராஜு சாஸ்திரிகளால் இயற்றப்பட்ட ஸாமவேத ஸ்வர விமர்சம்.

இரண்டாம் பாகம் — ஸாமவிதான பிராம்மணம், ஆர்ஷேய பிராம்மணம், ஸாமஸ்வரவிமர்சம், பாணினீய சிக்ஷா, நாரதசிக்ஷா, லோமச சிக்ஷா, கௌதம சிக்ஷா, ஸாமகான சாஸ்த்ரீய ஸம்ப்ரதாயக்ரமம்.

மூன்றும் பாகம் — தேவதாத்யாயம், ஸம்ஹிதோபநிஷத், சாந்தோக்ய மந்த்ரோபநிஷத், வம்சப்ராம்மணம், உத்ஸர்ஜன கர்மதேவ தர்ப்பணம், காம்யப்ரயோகங்கள்.

3. ஸாமவேத ஸம்ஹிதா (ஸ்வரத்துடன்), 2 பாகங்கள் — விலை ரூ. 110/—

பூர்வபாகம் — ரிக் இல்லாமல் ஆக்னேய ஐந்த்ர கானங்கள் மட்டும்.

இரண்டாம் பாகம் — பாவமான ஆரண சுக்ரீய கானங்கள் மட்டும்.

4. மனுசேச்லோக & ராமமந்த்ராசேச்லோக — விலை ரூ 9/—

(மஹாராஷ்ட்ர பாஷையில் ஸமர்த்த ராமதாஸ் இயற்றியது. ஸ்ரீ பீமராவ் கோஸ்வாமி அவர்களின் அருமையான தமிழ் உரையுடன்.

5. ஸ்ரீ ராதாக்ருஷ்ண பூஜா விதானம் — விலை ரூ 10/—

பல புராணங்களிலிருந்து எடுத்து எழுதியது. ராதா கல்யாணம் செய்வோருக்கு அவசியம் தேவையானது.

6. நளோ தந்தம் (நைஷத காவ்யத்தின் சுருக்கம்) — விலை ரூ 9/—

7. வேத பாட வழிமுறை (Syllabus) (ரிக், யஜுர், ஸாம) — விலை ரூ 8/—

வித்யார்த்திகளுக்கு அவரவர்களின் வேதத்தில் எந்த அளவு கற்பிக்கலாம் என்ற விளக்கத்துடன் கூடியது.

நாகராக்ஷரம் — நாகர பதத்திற்கு தமிழ் அர்த்தத்தோடு.

1. ஸ்ரீமத் பாகவதம் — 5 Volumes விலை ரூ. 415/—
2. ஸுந்தர காண்டம் — விலை ரூ. 80/—
3. ஸ்ரீ நாராயணீயம் — விலை ரூ. 55/—

க்ரந்தாக்ஷரம் — (Grantha Script)

1. ஸாமவேத ஸம்ஹிதா (ஸ்வரத்துடன்) — 2 பாகம் — விலை ரூ. 235/—

பூர்வ பாகம் — ரிக், ரிக்பதம், ஸ்தோபபதம், ஆக்னேய, ஐந்த்ர, பாவமான ஆரண, சுக்ரீய கானங்கள்.

இரண்டாம் பாகம் — உத்தர ரிக், ஊஹ ரஹஸ்ய கானங்கள் மற்றும் சாஸ்த்ரீய ஸம்ப்ரதாய கான விளக்கங்களுடன்.

2. சாந்தி குஸுமாகரம் — 2 பாகம் — விலை ரூ. 75/—

3. யாஜுஷ மந்த்ர ப்ரச்னம் — ஏகாக்னி காண்டம் — விலை ரூ. 8/—

க்ரந்தாக்ஷரத்தில் ஸ்வரத்துடன் மணக்கால் பிரம்மஸ்ரீ முத்து ச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்:

1. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் — விலை ரூ. 65/—
2. போதாயன பூர்வாபர ப்ரயோகம் — விலை ரூ. 70/—
3. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் — விலை ரூ. 60/—
4. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் — விலை ரூ. 25/—

V.P.P.யில் அனுப்புவதில்லை. பூராத்தொகையையும் M.O. (or) Draft மூலம் அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம்.

மேலும் விபரங்களுக்கு: அத்வைத வித்யாசார்ய மஹா ராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி, D – 76, மூன்றாவது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் — 612 001.



# "பாலு வந்தாச்சா... ரெகார்டிங் முடிஞ்சிடும்!"



இந்தியாவின் முக்கியமான மொழிகளில் பாடி, சினிமா பின்னணிப் பாடகர்களில் நம்பர் ஒன்னாக இருக்கும் எஸ். பி. பாலசுப்ரமணியம், ஆந்திர மாநிலச் சிறப்பிதழுக்காகத் தமது பிஸி ஷெட்யூல்களுக்கு இடையே கொஞ்ச நேரம் ஒதுக்கினார். அவருடைய இனிய குரலிலே பாடுவது மட்டுமென்ன, பேசுவது கூடச் சுகானுபவமாகத்தான் இருந்தது!

"தமிழ், மலையாள, கன்னட, தெலுங்கு சினிமா பாடல்களிலே எது உங்களைக் கவர்ந்தது...?"

"இதிலே இரண்டு விஷயம் சொல்லணும். முதல்ல தமிழ் தெலுங்கு மலையாளம் கன்னடம்னு பிரிக்க முடியாது. எல்லாமே தென்னாட்டு கர்நாடக இசையை அடிப்படையாகக் கொண்டவைதான்.

"ஆனால் பாடல்கள் என்று வரும்போது ரொம்ப வருத்தத்தோடு சொல்ல வேண்டியதாகத்தான் இருக்கிறது. அருமையான இசை கொப்புளிக்கும் பாடல்கள் குறைந்து விட்டன. அதற்குக் காரணம் சினிமாவின் கதை அமைப்பு அப்படி.

"பிரபல சினிமா ஸ்டார்களை மக்கள் தேவதூதனைப் பார்ப்பது போலப் பார்க்கிறார்கள். ஸ்டார் தன் இமேஜைக் காப்பாற்றிக் கொள்ள சில விநோதங்களைச் செய்ய வேண்டியதாக இருக்கிறது. அவர் இமேஜைக் காப்பாற்ற அவருக்காகவே கதை பின்னப்படுகிறது. ஒரு டூயட், ஒரு சண்டை, ஒரு கிளப் டான்ஸ் இப்படி....

"கதாநாயகன் டாக்டராக இருப்பான். முதல் காட்சியில் மிக நாகரிகமானவனாக இருப்பான். அடுத்து பாட்டு சீன் வரும். டப்பாங்குத்து ஆட்டமும், அசிங்கமான அசைவுகளும் செய்ய வேண்டிய கட்டம். இசையமைப்பாளர்தான் என்ன செய்ய முடியும்? பாடுகிறவர்தான் என்ன செய்ய முடியும். இப்படி இருக்கிறது நம் திரைப்படத் துறை.

"பொதுவாக நான் பார்க்கிற வரையில் கன்னடப் படங்கள் நல்ல பாடல்களைத் தருவதில் முதலிடம் வகிக்கின்றன. அடுத்தது தமிழ். அப்புறம் மலையாளம். அப்புறம் தான் தெலுங்கு..."

"பழைய பாடல்களை இன்றைக்கும் கேட்டுக் கொண்டே இருக்கலாம் போலிருக்கிறது. ஆனால் இப்போதெல்லாம் அந்த மாதிரி வருவதில்லையே..."

"இன்றைக்கும் அற்புதமான பல பாடல்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன. அந்தக்காலத்தில் வருஷத்திற்கு ஆறு படங்கள் வரும். மொத்தம் முப்பது பாடல்களையே வருஷம் முழுவதும் மீண்டும் மீண்டும் கேட்டார்கள். அது அப்படியே மனத்தில் பதிந்தது. ஆனால் இன்றைக்கு வருஷத்திற்கு 150 படங்கள் தயாராகின்றன. நல்ல பாடல்கள் வந்தாலும் மனத்தில் பதிவதற்குள் மேலே மேலே பாடல்கள் வந்து விழுந்து கொண்டே இருக்கின்றன."

"ஹிந்தியில் வாணி ஜெயராமுக்கு ஏகப்பட்ட தடை. நீங்கள் நிலைத்துவிட்டீர்களே..."

"அவர்களுக்கு என்ன பிரச்னை என்று தெரியவில்லை. ஆனால் தென்னகத்திலிருந்து போகும் என்னை, ஜேசுதாஸை எல்லாம் ரொம்பப் பாராட்டுகிறார்கள். நாங்கள் இங்கு வேகமாக வேலை செய்வது வழக்கம். ஒரு நாளைக்கு ஆறு ரெகார்டிங் கூட இருக்கும். அங்கு அப்படி இல்லை. நினைத்த போது ரெகார்டிங் வைத்துக் கொள்வார்கள். அந்த மாதிரி நிலையில் அவர்கள் கேட்பதற்கு முன்பே நான் நாலு சங்கதிகளைப் போடும் போது ஆச்சரியப்படுகிறார்கள். 'பாலு வந்தாச்சா? ரெகார்டிங் முடிஞ்சுடும்!' என்று தான் பேச்சு."

"இவ்வளவு டைட் ஷெட்யூலில் சிக்கி இருக்கிறீர்களே... 'மூடு' அது இதுவென்று ஒன்றும் தேவையில்லையா?

"முன்னணிக்கு வந்துவிட்டால் அதையொன்றும் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. பழக்கமாகி விட்டது. மேலும் முன்பெல்லாம் நூறு வாத்தியக் குழுக்காரர்கள் அடுத்த ரெகார்டிங்கில் காத்திருப்பார்களே என்று டென்ஷனாக இருக்கும். இப்போது மியூஸிக் ட்ராக் ஸிஸ்டம் வந்துவிட்டது. அவர்கள் இசையை முதலிலேயே பதிவு செய்துவிடுவார்கள். எனவே அந்த அளவிற்கு டென்ஷன் இல்லாமல் செய்ய முடிகிறது.

# தரிசிக்க வேண்டிய தலங்கள்



திருப்பதி

ஏழு மலையானை, திருவேங்கடவனைத் தரிசிக்காத தமிழருண்டோ? ஒரு நாளைக்கு 20,000 பக்தர்கள் வந்து குவியும் இந்தத் திருத்தலத்திற்கு, பக்தர்களுக்காக தேவஸ்தானம் பல வசதிகளைச் செய்து தருகிறது. புதிதாக கியூ வரிசையில் டி. வி. வைத்து வசதியாக் வேங்கடேசுவரனைத் தரிசிக்க வைக்கிறார்கள்.



காளஹஸ்தி

திருப்பதிக்குப்
போகத் தவறாம
எழுப்பப்பட்ட
தூரத்திலுள்ளது

பக்த ராமதா
புகழ்பெற்றது.
புனிதமாக இ

அஹோபிலம்

அஹோபில மடம் ஆஸ்திகர்களிடையே மிகப் பிரசித்தம். இங்குள்ள ஒன்பது நரசிம்ம மூர்த்தங்கள் மிகவும் விசேஷம். இது நந்தியாலிலிருந்து 49 கி. மீ. தூரத்தில் உள்ளது.

அன்னவரம்

ரத்னகிரி பம்பா நதிதீரத்தில், விசாகப்பட்டினம் போகும் வழியிலுள்ளது அன்னவரம். வீரவேங்கட சத்ய நாராயண கோவில் பக்தர்களுக்கு ஒரு வரப் பிரசாதம்.

நாகலாபுரம்

சிற்பக்கலைக்குச் சிறந்த வேதநாராயண சுவாமி கோவில் திருப்பதியிலிருந்து அறுபத்தைந்து கி. மீ. தொலைவில் உள்ளது.



லேபா
16
ஓவிய
கோவி
புருக்
ஆர்வ







## மந்த்ராலயம்

துங்கபத்ரா நதிதீரத்தில் அமைந்துள்ள இந்தப் புனித ஸ்தலத்தை அறியாதவர்கள் யார்? இங்கு சமாதி யான ராகவேந்திர ஸ்வாமிகள் இன்றைக்கும் பக்தர் களிடையே அற்புதங்களை நிகழ்த்திக் கொண்டிருக் கிறார்!

போகும் சிவ பக்தர்கள் காளஹஸ்திக்குப்
ட்டார்கள். வாயுபகவான் தொழுவதற்கு
இக்கோயில் திருப்பதியிலிருந்து 36 கி. மீ.

## பத்ராசலம்

வர் கட்டிய சீதாராமச்சந்திர சுவாமி கோயில்
இங்கு மதுவிலக்கு அமுல்படுத்தப்படுகிறது.
த இடம் காக்கப்படுகிறது.



## க்ஷி

ம் நூற்றுண்டைச் சேர்ந்த அற்புதமான வர்ண
ங்கள், விஜய நகர வேலைப்பாடுகளுடன் கூடிய
ல். பெரியநந்தி, வீரபத்ரசுவாமி குடிகொண்
நிறார்கள். புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள்
ம் காட்டும் இடம். அனந்தப்பூர் மாவட்டம்.







தெலுங்குக் கதை: சலஸானி பிரஸாத ராவ்

# அப்பாராவ்

"உட்காருங்கள்" — மானேஜர் எதிரே இருந்த நாற்காலியைச் சுட்டிக்காட்டிச் சொன்னார்.

வேலைக்கு விண்ணப்பித்திருந்த அப்பாராவால், அவர் பேசிய தோரணையில் தொனித்தது கட்டளையா அல்லது வேண்டுகோளா என்று தீர்மானிக்க முடியவில்லை.

இருப்பினும், அவர் சுட்டிக் காட்டிய நாற்காலியில் உடனே உட்கார்ந்து கொண்டான்.

மானேஜர் அவனை ஏற இறங்கப் பார்த்தார். அப்பாராவ் அவர் பார்வையின் தீர்க்கத்தைத் தாள முடியாமல் நெளிந்தான். அவனை அப்படி அவஸ்தைப் படுத்துவதில் மானேஜர் ஒருவித்க் குரூர திருப்தி அடைந்ததாகத் தோன்றியது. அவர் முகத்தில் புன்னகையின் சாயல் தோன்றி மறைந்தது. அப்பாராவுக்குப் புதுமணப் பெண்ணைப்போல் வெட்கம் பிடுங்கித் தின்றது.

"உங்கள் பெயர்?" — கேள்வி வெளிப்பட்டதும் அப்பாராவ் ஒரு கணம் தயங்கினான்.

மானேஜர் ஒரு நிமிடம் மௌனம் சாதித்தார். அப்பாராவும் ஒரு முழு நிமிடத்திற்கு வாயைத் திறக்கவில்லை.

"உம்... உங்கள் பெயர் என்ன?" — மீண்டும் கேட்டார் மானேஜர்.

இந்த முறை அப்பாராவ் இன்னும் அதிகமாகத் தயங்கினான். ஒரு வழியாக தைரியத்தை வரவழைத்துக் கொண்டு "அப்ளிகேஷனில் இருக்கும், பாருங்கள் ஸார்!" என்றான்.

கைக்குட்டையின் மடிப்புகளுக்குள் முகத்தை மறைத்துக் கொண்டபடி சிரிப்பை வெளிப்படுத்தாமல் முணுமுணுத்தார் மானேஜர். "இங்கே என்ன எழுதியிருக்கு...?"

"அது வந்து ஸார்... என் பெயர் அப்பாராவ் என்று எழுதியிருக்கேன்" என்றான் அப்பாராவ்.

"அப்படியா? நீர் எப்போதும் உண்மையைத்தான் சொல்வீர் போலிருக்கிறது!" மானேஜரின் குரலில் சந்தேகத்துக்கு இடமின்றி, கேலி தொனித்தது. அப்பாராவின் முகத்தை ஏளனத்துடன் ஏறிட்டுப் பார்த்தார்.

ஆனால், அப்பாராவ் தான் எதைச் சொன்னாலும், எழுதினாலும் அது உண்மையாகத்தான் இருக்கும் என்று ஒரு குழந்தையின் உற்சாகத்துடன் உத்திரவாதம் கொடுத்தான்.

அவனைச் சீண்டி வேடிக்கை பார்க்கும் மனநிலையில் இருந்த மானேஜர் கேட்டார்: "உண்மையைப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் இடையே ஏதேனும் வித்தியாசம் இருக்கிறதா என்ன?"

அப்பாராவ் மனப்பூர்வமாய்ப் பதில் சொன்னான்: "அது வந்து ஸார்... நாம் கையால்தான் எழுதுகிறோம்; ஆனால், பேசுவதோ வாயால்."

. மிகப் பெரிய, சிக்கலான உண்மை தெளிவாக்கப்பட்டதுபோல் மானேஜர் "ஓ! அப்படியா?" என்றார்.

அவர் கிண்டலைப் புரிந்து கொள்ளாத அப்பாராவுக்குப் பரீட்சையில் கேட்கப்பட்ட ஒரு மிகக் கடினமான கேள்விக்குப் பதில் சொல்லிய திருப்தி ஏற்பட்டது.

"நீ வெகு சாமர்த்தியசாலி, இல்லை?" என்று மானேஜர் கேட்டதும், 'இவர் நம்மைப் புகழ்கிறாரா? வைகிறாரா?' என்று அப்பாராவுக்குத் திரும்பவும் சந்தேகம் வந்துவிட்டது. ஆனால் அதை ஒரு புகழுரையாகவே கருதத் தீர்மானித்து அவன் பதில் சொன்னான்: "பொதுவாக எல்லாரும் அப்படித்தான் ஸார் நினைக்கிறார்கள்."

"பொதுவாக எல்லோரும் என்ன நினைக்கிறார்கள்?" — அவன் சொன்னதைப் புரிந்து கொள்ளாததுபோல் நடித்த மானேஜர் கேட்டார்.

அவர் புருவங்கள் நெரிவதைக் கவனித்தான் அப்பாராவ். அதிருப்தியின் மிகத் தெளிவான அடையாளம் அதுதான். அதனால் சற்றுத் தயங்கியபடி பதில் சொன்னான்: "நீங்களே சற்றுமுன் மனமுவந்து சொன்னீர்களே ஸார், நான் புத்திசாலி என்று... அதைத்தான் பொதுவாக எல்லோரும் நினைக்கிறார்கள்... ஆனால், ஸார்..." — இழுத்தான் அப்பாராவ்.

"ஆனால் என்ன?"

"என் மாமா இருக்கிறாரே ஸார்... அவருக்குத்தான் என்னிடம்



திருப்தியே இல்லை. எப்போதும் ஏதாவது குற்றம் கண்டுபிடிப்பார்.'' — அப்பாராவ் தன் மாமாவைப் பற்றி மானேஜரிடம் புகாரே செய்துவிட்டான்.

''அப்படியா! உன் மாமா உன்னைப் பற்றி என்ன சொல்கிறார்?''

அப்பாராவ் தன் வெளிப்படையான பேச்சால் மானேஜரைத் திணறடித்தான்: ''அது வந்து ஸார்... எனக்கு ஒரு பொய் கூடச் சொல்லத் தெரியவில்லை என்பது என் மாமாவுக்கு ரொம்பக் குறை. அலுக்காமல் சலிக்காமல் இதைச் சொல்லிக் காண்பித்துக் கொண்டே இருப்பார். என் நன்மைக்காகக் கூட என்னால் பொய் பேச முடியாததால் நான் வாழ்க்கையில் முன்னேறத் தெரியாதவன் என்கிறார் அவர்...'' அப்பாராவ் தொடர்ந்தான்: ''நான் கையாலாகாதவனை இருப்பதாலேதான் ஒரு நல்ல வேலையை இழந்துட்டு நிற்கிறேன் என்று சொல்கிறார்: நான் பொய் பேச மறுப்பதால் நான் ஒரு சுத்த உதவாக்கரை என்று திடமாக நம்புகிறார் ஸார்!''

''அப்படியானால் நீங்கள் இதற்கு முன் வேறு வேலையில் இருந்தீர்களா?'' சற்றே திடுக்கிட்டுப் போய்க் கேட்டார் மானேஜர்.

''ஆமாம் ஸார்'' என்று பெருமிதத்துடன் சொன்னான் அப்பாராவ்.

''பின் எப்படி அந்த வேலை போயிற்று?'' அப்பாராவைச் சந்தேகத்துடன் பார்த்தபடி கேட்டார் மானேஜர்.

அப்பாராவ் தொண்டையைக் கனைத்துக் கொண்டு வெளிப்படையாகச் சொன்னான்: ''மானேஜர் என்னைப் போகச் சொல்லி விட்டார் ஸார்.''

''யார் அந்த மானேஜர்?'' — அடுத்த கேள்வி உடனே வெளிப்பட்டது.

''அதுதான்... வெற்றிலை பாக்கோடு எப்போதும் புகையிலையை மெல்வாரே ஸார், அவர்தான் ஸார்'' என்றான் அப்பாராவ், அந்தவிளக்கத்தின்மூலம் ஆளை அடையாளம் காட்டிக் கொடுத்துவிட்ட திருப்தியுடன்.

''சரி, சரி! ஆனால் அவர் எந்த நிறுவனத்துக்கு மானேஜர்?'' — மானேஜர் மிகப் பொறுமையாகக் கேட்டார்.

''நான் இதற்கு முன்னால் வேலை செய்த கம்பெனிக்கு ஸார்!'' — அப்பாராவ் வெகுளியாய்ப் பதில் சொன்னான்.

''அப்படியா? உங்களை ஏன் வேலையை விட்டு நீக்கினார்?''

''அது வந்து ஸார்.... நான் ஒரு உதவாக்கரையாம்; அதனாலேதான்...'' அப்பாராவ் புகார் செய்தான்.

''ஏன்? நீங்கள் அந்த வேலைக்கு லாயக்கற்றவராக இருந்தீர்களா, என்ன?''

''இல்லவே இல்லை ஸார்! நான் ரொம்ப சுறுசுறுப்பு... என் மாமாவுக்குக் கூட அது தெரியும்.''

''அப்ப ஏன் உங்களை வேலையை விட்டுப் போகச் சொன்னார்கள்?''

''அதாவது ஸார்... என்னைப் பொய்க் கணக்கு எழுதச் சொன்னார்கள். நான் அந்தத் தில்லுமுல்லுக் காரியமெல்லாம் செய்ய மாட்டேன் என்று சொல்லிவிட்டேன்.'' அப்பாராவ் உண்மையை ஒப்புக் கொண்டான்.

''அதனால்...?'' மானேஜர் கேட்டார்.

''உன்னால் எங்களுக்கு உபயோகம் இல்லை' என்று சொல்லி அனுப்பிவிட்டார்கள் ஸார்!'' — அப்பாராவ் வருத்தத்துடன் புகார் செய்தான்.

''அப்படியென்றால் நீங்கள் ரொம்ப நாணயமானவர் என்று சொல்கிறீர்களா?'' — மானேஜரின் குரலில் ஒலித்த ஏளனம் அப்பாராவைத் திடுக்கிடச் செய்தது.

மானேஜர் திரும்பவும் கைக்குட்டையால் முகத்தை மூடிச் சிரிப்பை ஒளித்துக் கொண்டு முணுமுணுத்தார்: ''சரி நீங்கள் போகலாம்.''

''எங்கே ஸார் போகணும்?'' — அப்பாராவ் குழந்தைத்தனமாகக் கேட்டான்.

''அங்கே!'' — பொறுமையிழந்தவராய் அறைக் கதவைச் சுட்டிக் காட்டினார் மானேஜர்.

அப்பாராவ்தன் இருக்கையைவிட்டு எழுந்திருக்காமல் அவர் சுட்டிக்காட்டிய திசையில் திரும்பிப் பார்த்தான். கதவின் மறுபக்கத்தில் இன்னும் பதின்மூன்று பேர்கள் நேர்முகத் தேர்வுக்குக் காத்திருந்தார்கள்.

''ஏன் ஸார் என்னைப் போகச் சொல்றீங்க?'' என்றான் அப்பாராவ்.

''ஏனா? ஏனென்றால் இங்கே நீங்கள் செய்யக்கூடியதுஒன்றும்கிடையாது. அதனால்தான். உம்... வெளியே போறீங்களா?''

''ஆனால்... ஆனால்எனக்குப்போகவிருப்பமில்லையே, ஸார். நான் இங்கே வேலை செய்ய விரும்புகிறேன்'' என்றான் அப்பாராவ்.

''இங்கே உங்களுக்கு வேலை கிடையாது!'' — முகத்தில் அறைந்த மாதிரி சொல்லிவிட்டார் மானேஜர்.

அப்பாராவ் திடுக்கிட்டுப் போனான். உணர்ச்சி ததும்பிய குரலில் பேசினான்: ''உங்கள் ஆபீஸில் வேலை காலியாக இருக்கிறது என்று விளம்பரம் செய்திருந்தீர்களே. நான் அதைப் பார்த்துவிட்டுத்தானே வேலைக்கு விண்ணப்பித்தேன்?''

மானேஜர் பொறுமை இழந்து கொண்டிருந்தார். ''நாங்கள் பிஸினஸை இழுத்து மூட வேண்டும் என்பதுதான் உங்கள் ஆசையோ?'' — கோபமாகக் கேட்டார்.

''இல்லவே இல்லை ஸார். எனக்கு அந்த நோக்கமே கிடையாது.'' அப்பாராவ் அடித்துச் சொன்னான். அவனுடைய ஆத்மார்த்தமான கவலையைக் கண்டு மானேஜர் சற்றே நெகிழ்ந்து போனதாகத் தோன்றியது. ''இதோ பாருங்க தம்பி! நாங்கள் செய்வது வியாபாரம். இதற்கு உங்களைப் போன்ற மனச்சாட்சியுள்ள ஆட்களையெல்லாம் வேலைக்கு வைத்துக் கொண்டால் எங்களுக்குக் கட்டுப்படி ஆகாது.''

''ரொம்ப உண்மை ஸார்! அதைத்தான் என் மாமாவும் சொன்னார்'' என்றான் அப்பாராவ்.



# அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதனால்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் • மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை, அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேடமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது, மூவழிகளில் செயல்படுகிறது.


வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.


சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேட மருந்துக் கலவை கொண்டது.


சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையாகவும் வைத்துக் கொள்கிறது, அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM



''அப்படி என்னதான் சொன்னார் உங்கள் மதிப்பிற்குரிய மாமா?''

மானேஜர் சிரமப்பட்டுப் பொறுமையை இழக்காமல் கேட்டார்.

''அது வந்து ஸார்... நீங்கள் சொன்னபடி நான் தவறாமல் நடந்து கொள்ள வேண்டும் என்று ரொம்பத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார் என் மாமா. நான் அப்படியே நடந்து கொள்வேன் ஸார்.''

''ஆனால், நீங்கள்தானே எந்தச் சந்தர்ப்பத்திலும் பொய்யே பேச மாட்டேன் என்று சொன்னீங்க?'' — திரும்பவும் பொறுமையை இழக்க ஆரம்பித்துவிட்டார் மானேஜர்.

''அதெல்லாம் நடந்து முடிந்த கதைஸார்!'' அப்பாராவ் சமாதானமாகச் சொன்னான். ''இனிமேல் சொன்னபடியெல்லாம் செய்வேன். சோம்பல்படாமல் உழைப்பேன்.''

மானேஜர் சற்றுப் பரிவாகக் கேட்டார்: ''சரி, நீங்க என்ன படிச்சிருக்கீங்க?''

''மெட்ரிக் பாஸ் பண்ணப் போகிறேன் ஸார்!'' — அப்பாராவ் அப்பாவித்தனமாக உத்திரவாதம் அளித்தான்.

''இனிமேல்தான் பாஸ் பண்ணணுமா? ஏன்? ஒருமுறை எழுதி ஃபெயில் ஆகிவிட்டீர்களா?''

''வந்து ஸார்... நிச்சயமாக வருகிற செப்டம்பரில் பாஸ் பண்ணிவிடுவேன். என் மாமா கூட தீர்மானமாகச் சொல்றார், நான் பாஸ் பண்ணிடுவேன் என்று...''

மானேஜரின் பொறுமை திரும்பவும் கட்டவிழ்ந்து போய்க் கொண்டிருந்தது. ஆனால் அப்பாராவின் ஆவல் ததும்பும் முகத்தை ஏறிட்டுப் பார்த்தவர் மனம் இளகிப் போனது. தம்மைச் சுதாரித்துக் கொண்டார். ''நீங்கள் இப்போது போகலாம்'' என்றார் மெதுவான குரலில்.

''ஏன்...? நான் உங்களுக்கு வேலை செய்யத்தானே வந்திருக்கேன் ஸார்?''

''ஏன்! ஏன்! வெளியில் காத்திருக்கும் பதின்மூன்று பட்டதாரிகளின் விண்ணப்பங்கள் என்னிடம் வந்திருக்கு. தெரியுமா? அத்தனை பேரும் பட்டதாரிகள்!''

மானேஜர் பேசிய இந்த வார்த்தைகளின் முக்கியத்துவம் அப்பாராவின் அறிவுக்கு எட்டவேயில்லை. அவன் இன்னும் பிடிவாதமானான். குரலைச் சற்று உயர்த்திப் பேசினான்: ''என் அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரைக் கொடுத்தால் போய்விடுகிறேன் ஸார்.''

மானேஜர் அதிர்ந்து போய்க் கேட்டார்: ''என்ன அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர்?''

''இங்கே வேலையில் சேர்வதற்கான ஆர்டர்தான், ஸார்! அதை வாங்காமல் இந்த இடத்தை விட்டு நகரக் கூடாது என்று என் மாமா சொல்லி அனுப்பியிருக்கிறார்!''

''நீயும் உன் மாமனும் நாசமாய்ப் போக!'' — கத்தினார் மானேஜர். அப்பாராவை வெளியே அனுப்ப பியூனைக் கூப்பிட எண்ணி, மணி அடிக்கக் கையை நீட்டினார்.

''யாரைய்யா உன் மாமன்?'' — கோபமாகக் கேட்டார்.

''என் மாமா 'நாசமாய்ப் போகட்டும்' என்றீர்களே ஸார். அவரும் அதையேதான் ஸார் சொன்னார்'' என்றான் அப்பாராவ். 'உனக்கு வேலை தராவிட்டால் அந்த மானேஜர் நாசமாய்ப் போவான்' என்றார் ஸார். உங்களுக்குத்தான் என் மாமாவைத் தெரியுமே ஸார். நேற்றுக் காலை பத்து மணி சுமாருக்கு உங்களுக்கு ஃபோன் பண்ணினாரே, அவர்தான் ஸார் என் மாமா. உங்களிடம் பேசிய பிறகுதான் நீங்கள் எனக்கு வேலை கொடுப்பீங்கன்னு தீர்மானமாகச் சொன்னார் ஸார். 'அப்படி அவன் உனக்கு வேலை தராவிட்டால் நாசமாய்ப் போவான்; அதுக்கு நான் பொறுப்பு' என்றார் ஸார்! நீங்க இப்போ உபயோகித்த அதே வார்த்தைகளைத்தான் அவரும் உபயோகித்தார்!''

முதல் நாள் நடந்த டெலிஃபோன் உரையாடலை நினைவுபடுத்திக் கொள்ள மானேஜருக்கு ஒரு நிமிடத்திற்கும் குறைவான நேரமே தேவைப்பட்டது. அவர் முகம் வெளிறிப் போயிற்று. நடுங்கும் விரல்களால் கோட்டின் மேல் பாக்கெட்டிலிருந்து டைரியை எடுத்தார். அதிலிருந்த ஒரு குறிப்பைப் படித்த போது அவர் குரல் நடுங்கியது: ''அவர் உங்கள் மாமாவா? இதை ஏன் நீங்கள் முன்னமேயே சொல்லவில்லை?''

''உங்களுக்குத் தெரியும்னு நினைத்தேன் ஸார்...'' — அப்பாராவ் சொல்லி முடிப்பதற்குள் ஹெட் கிளார்க்கின் முன் கொண்டு நிறுத்தப்பட்டான். ஒரு சில நிமிடங்களுக்குள் அப்பாய்ன்ட்மெண்ட் ஆர்டர் டைப் ஆகி, கையெழுத்திடப்பட்டு அவன் கைக்கு வந்தது.

அதை அழகாக மடித்துத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு மாமாவிடம் தகவல் சொல்லக் கிளம்பினான் அப்பாராவ்.

மானேஜரின் அறையை ஒட்டியவாறு இருந்த வராந்தாவை அப்பாராவ் அடைந்த போது அங்கு பன்னிரண்டு பேர் மட்டுமே இண்டர்வியூவுக்குக் காத்திருந்ததை அவன் கவனிக்கவில்லை. பதின்மூன்றாவது நபர் மானேஜரின் தனியறையில், இண்டர்வியூ என்ற பெயரில் அவருடன் ஒரு வெட்டியான உரையாடலில் ஈடுபட்டிருந்தார்.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: சீதா ரவி

* ஆந்திர பிரதேச அரசு, முழுக்க முழுக்க, ஆந்திராவிலேயே படப்பிடிப்பு நடத்தப்படும் திரைப்படங்களுக்கு ஒரு லட்சம் ரூபாய் நிதி உதவி அளிக்கிறது. இதற்குக் காரணம் இப்போது பெரும்பாலான தெலுங்குப் படங்கள் சென்னையில்தான் தயாராகின்றன. இதை ஆந்திராவுக்கே மாற்றுவதற்காகத்தான்.



V.V.D

கற்பனை பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவைப் பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை.
செல்லமாக வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்
அக்கூந்தலுக்கு
வி.வி.டி. தேங்காய் எண்ணெய்...




VVD-10/86

**வி.வி.டி. தேங்காய் எண்ணெய்**
*இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்*

V.V.D

# சொர்க்கத்தின் கதவுகள்

## 23

அருணாவின் முகம் அழுதழுது சிவந்து போயிருந்தது. "நாம் தோற்றுப் போய்விட்டோமே" என்ற ஆத்திரத்தில் ஆவேசமாகக் கூக்குரலிட்டு அவளது குரல் கம்மிப் போயிருந்தது.

கணேசன் அதற்குமேல் ஆடிப் போய்விட்டிருந்தார். ஒன்றுமே நடவாத விஷயம் என்று எண்ணித் தூசு போல் தட்டிவிட்டிருந்த விஷயம் இப்போது பூதாகாரமாக அவரையே விழுங்கி விடுமளவுக்கு உருவெடுத்து விட்டதே.

தாம் உண்டு, தம் வேலை உண்டு என்று ஓடிக் கொண்டிருந்தவருக்கு, மகனும், மகளும் புதுக் குழப்பங்களை உண்டு பண்ணியது சினத்தை மூட்டியது.

"பார்த்தேளா, பெத்தவ நான் குத்துக் கல் மாதிரி இருக்கேன். இவனுக்கு நேத்து வந்தவ ஒஸ்தியா போயிட்டா. அவளையும் அழைச்சிண்டுவந்துபெரியப்பாவீட்லபோய் உட்கார்ந்துண்டிருக்கான்." அருணா அழுகையும், ஆங்காரமுமாக வெடித்த போது கூட அசட்டையாக இருக்க முயன்றார் கணேசன்.

ஆனால், முதல் நாள் அவரைக் 'கிளப்'பில் சந்தித்த ஜட்ஜ் ஆராவமுது கேட்ட போதுதான் உலக நினைப்பு அவரை ஆட்கொண்டது.

"ஏன் மிஸ்டர் கணேசன்? உங்க மகனுக்கு பெண் பார்த்திட்ட விவரம் சொல்லவே இல்லே. கங்கிராட்ஸ். பெண்-ரொம்ப ஸ்வீட் லுக்கிங். ஒங்க ஸன் ரொம்ப லக்கி" என்று கைகுலுக்கியதும், அதிர்ச்சியை வெளிக் காட்டாமல் விழுங்கிக் கொண்டார் கணேசன்.

ஆடிட்டர் கனகராஜ், "ஹலோ மிஸ்டர் கணேசன். எப்ப கல்யாணச் சாப்பாடு? அஸ்வத்தையும், அவனோடு ஓர் அழகான பெண்ணையும் முந்தாநாள், மருந்துக்கடை வாசல்லேபார்த்தேன்" என்றதும், கணேசன் சிறிது அசைந்து கொடுத்தார்.

"எங்க கிளப்லே, தலைகாட்ட முடியலே" அருணா அழுகையுடன் குலுங்கினாள். "நான் ஏதோ சொல்லாம மறைச்சிட்டதா என் சிநேகிதிகள் பேசிக்கிறா."

மாதம் ஒரு முறை கணேசன், வியாபார வெற்றிக்காகக் கொண்டாடும் 'பார்ட்டி'களைக் கூட ரத்து செய்தார். நல்ல நிலையில் இருக்கும் போதே, 'ஆயிரம் வம்புகளை அலசும் கும்பல்கள் அவரது நண்பர் குழாம். உள்ளே தண்ணீர்' இறங்கியதும், அவரது குடும்ப விவகாரத்தை அலசிப் பிழிந்துவிட மாட்டார்களா?

மாதா மாதம், ருசிகண்ட பூனையாக அவர்கள் வீட்டு 'பார்ட்டி'க்கு அலையும் 'அமுதா இண்டஸ்ட்ரீஸ்' கோவிந்தன் கூடக் கேட்டு விட்டார். "என்ன மிஸ்டர் கணேசன்? ஒரேயடியாகக் கல்யாணச் சாப்பாடு போட்டாப் போதும்னு வச்சிட்டீங்களா? ஆனா, அதிலேயும் 'டிரிங்க் பார்ட்டி' இல்லாட்டி விட மாட்டோம்!"

கணேசன் தலைகுனிந்து போய்விட்டது.



தோளுக்கு மேல் தோழுனாக வளர்ந்துவிட்ட பிள்ளை. பிறந்தது முதல் பெரியப்பா, பெரியம்மாவிடம் ஒட்டிக்கொண்டு வளரவிட்டது அவரது தப்பல்லவா? இப்போது தும்பை விட்டு வாலைப் பிடிக்கிற கதையாக மகனைத் தேடும்படி ஆகிவிட்டது. போதாத குறைக்கு ஐஸ்வர்யாவின் கதை வேறு!

சஞ்சலத்தில் தவித்தவராய் அருணாவை ஒரு முறை பார்த்தார். இந்தக் குடும்பத்திற்கு அவர் என்ன குறை வைத்தார்? ஓயாது ஓடி ஓடி உழைத்தார். பணம், பணம்... அதை அடைவது எப்படி என்ற ஆத்திரத்தில் ஒரு கண்மூடித்தனமாக வேகம்... வீடு, பணம், அந்தஸ்து, உயர்ந்தமனிதர்களின் தோழமை... கிளப், பார்ட்டி... எதற்காக? யாருக்காக?

ஐஸ்வர்யாவின் திருமணமும் அவருக்கு உடன்படாத ஒன்றாக இருந்தது. பிறகு மாப்பிள்ளை அமெரிக்கா போய்விட்டான் என்ற பெருமையில் சிறிது நிமிர்ந்து கொண்டார். அஸ்வத்தின் மூலமாகத் தலைநிமிர வேண்டும் என நினைத்தவருக்கு இது ஒரு அடிதான். அத்துடன் ஐஸ்வர்யாவின் விவகாரம் மற்றும் ஓர் அடி.

காரணமின்றி அவருக்கு அண்ணாவின் மீது கோபம் பீறிட்டது. குடும்பத்தையே பிரித்து நாசப்படுத்திவிட்டவர் என்ற ஆத்திரம். அலுவலகத்தில் இருக்கிற நெருக்கடி. கணேசன் பல்வேறு உணர்ச்சிகளால் பாதிக்கப்பட்டிருந்தார்.

எத்தனைதான் கோபம் என்றாலும், அவளது மகன் அஸ்வத், தன்னிடம் இப்படி பாராமுகமாக இருப்பது அருணாவின் மனத்தில் துயரையும் எழுப்பியது. "நான் கத்தினதைக் கூட லட்சியம் செய்யாம அங்கே ஓடியிருக்கான்" என்று குமுறிக் கொண்டே இருந்தாள்.

கடந்தசிலதினங்களாகமகளும்அவளிடம் பேச்சு வார்த்தையின்றி நடமாடி வருவது



பெண்கள் முட்டாள்கள் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் ஆண்டவன் அவர்களை ஆண்களுக்குச் சரிநிகர் சமானமாக அல்லவா படைத்துள்ளான்?

— ஜியார்ஜ் எலியெட்

— காயத்ரி

அவளை குத்திக் குதறியது. வீட்டின் இறுக்கமான சூழ்நிலை. வெளியே தலைகாட்ட முடியாமல் தடுமாறிப் போயிருந்தாள். "இந்தப் பெண் இப்படிச் செய்துவிட்டு வந்து நிற்கிறாள். அவனானால் அந்தப் பெண்ணையும் கூட்டிண்டு வந்து..." அருணாவிற்கு 'ஓ'வென்று அழத்தான் முடிந்தது.

"அருணா!" கணவனது குரலைக் கேட்டதும், அதுகாறும் நின்றிருந்த அழுகை அவள் கன்னங்களை நனைத்தது. "ஐஸ்வர்யாகிட்ட, 'உன் பங்குக்கு அப்பாவுக்குத் தலை குனிவு ஏற்படுத்தறியா'ன்னு கேட்டுட்டேன்."

"நீ கேட்டு என்ன பிரயோஜனம்? குழந்தை முதலே பிடிவாதம் அவளுக்கு. சாக்லேட் பார் முழுசும் திங்கணும்னா, தின்னு தீர்ப்பாளே. தெரிஞ்சதுதானே."

"அதுக்கில்லே. பிடிவாதமா, காதல் கல்யாணம்னு விழுந்தாச்சு. இப்ப வந்து எனக்கு அவனைப் பிடிக்கலேன்னா" அருணா விசும்பினாள்.

அருணாவின் அருகில் கணேசன் நெருங்கி அமர்ந்தார். "இத பாரு அருணா! இப்ப நாமதான் ஒரு முடிவு எடுத்தாகணும். அழுது எதையும் சாதிக்க முடியாது" என்றார் கரகரத்த குரலில்.

"உண்மைதான். அத்தனை கெஞ்சியும் அஸ்வத் கேக்கலை. எத்தனை அழுது புலம்பினேன். ஐஸ்வர்யா மசியவே இல்லே. கோவிச்சுக் கொண்டு, பெரியப்பா வீட்டுக்குப்போறேன்னு போய்ட்டாளே" — அங்கலாய்ப்புடன் பெருமூச்சு விட்டாள்.

"நானும் பலமா யோசிச்சுப் பார்த்துட்டேன்..." கணேசன் சிந்தனை வயப்பட்டவராய் ஆரம்பித்தார்.

"இந்த வீடு, அந்தஸ்து எல்லாம், யாருக்காகப் பாடுபட்டு உருவாக்கினோம்? நம் மகன்; நம் மகள்; நம்ம குடும்பம்னு ஒரு வட்டம் போட்டுக் கொண்டு வாழ்ந்திட்டோம். இந்த வட்டத்துக்கு வெளியேயும் ஓர் உலகம்; மனுஷாள் எல்லாரும் இருக்கான்னு நாம புரிஞ்சுக்கவே இல்லே. அதனாலதான் நாம மனசு கஷ்டப்படறோம்னு நினைக்கறேன்..."

அருணா அழுகையை நிறுத்திவிட்டுக் கணவனை நிமிர்ந்து பார்த்தாள். "அதுக்காக இப்ப அங்கே போய் கெஞ்சிண்டு நிக்கணும்னு எதிர்பாக்கறேளா?"

"கெஞ்ச வேணாம். நம்ம உரிமையை விட்டுக் கொடுக்க வேண்டாம். பேசாம அஸ்வத் கல்யாணத்துக்கு ஓ. கே. சொல்லிவிடலாம்."

அருணா சீற்றத்துடன் எழுந்தாள். "நீங்க வேணா போங்கோ. நான் வரலை. கடைசியில நீங்களும் உங்கண்ணா கட்சின்னு மாறிட்ட பிறகு, எனக்கு இனிமே என்ன வேலை?"

கணேசன் அவளை உறுத்துப் பார்த்தார். "போ. உன் இஷ்டத்துக்குப் புறப்பட்டு போயிடு. அப்புறம் ஊரே சிரிக்கட்டும். பிள்ளை கல்யாணத்திலே இஷ்டம் இல்லே. அதனால அப்பா, அம்மா ரெண்டு பேரும் பிரிஞ்சு போனா. பொண்ணும் அதே கதி



## தாய்ப்பால் ஊட்டுவது உங்களது குழந்தைக்கு ஆகாரச்சத்தைவிட அதிக சத்தை அளிக்கிறது. குழந்தைக்கு உணர்ச்சி பூர்வ பாதுகாப்பையும் தருகிறது.



தாய்ப்பால் ஊட்டுவது தாய்க்கும் குழந்தைக்கும் உள்ள பாசப் பிணைப்பை நேச உணர்வை மேலும் வலுவாக்குகிறது. ஆம்! இயற்கையாகவே தாய் அன்பை வெளிப்படுத்தும் வழியே இதுதான். அதனால் குழந்தை மன நலத்தோடும் மகிழ்வோடும் வளர்கிறது.

தாய்ப்பால் குழந்தைக்கு ஏற்ற சரிவிகித உணவாகும். அதில் குழந்தைக்கு தேவையான பாதச்சத்துக்கள் அனைத்தும் தேவையான விகிதத்தில் அடங்கியுள்ளது.

தாய்ப்பால் ஊட்ட தவறாதீர்கள். இயற்கையின் நியதி அது. உங்கள் குழந்தையின் விருப்பமும் அதுவேதான். தவிர்க்க முடியாத காரணங்களால் தாயின் உடல் நலம் பாதிக்கப் பட்டாலோ அல்லது தாய்ப்பால் குறைந்து விட்டாலோ—விஜயா ஸ்ப்ரே பயன்படுத்துங்கள், பரிசோதிக்கப்பட்ட மற்றும் நம்பகமான குழந்தை உணவு.

விஜயா ஸ்ப்ரே அடைக்கப்பட்டுள்ள டின்களில் உங்கள் குழந்தைகளின் உடல் நலம் காக்கும் ஆலோசனைகள் தரப்பட்டிருக்கின்றன. அவற்றை கவனத்தில் கொண்டு குழந்தையின் உடல் நலத்தை பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

குழந்தைகளின் நலனில் அக்கறை கொண்டு வெளியிட்டோர்:
விஜயா ஸ்ப்ரே தயாரிக்கும் ஆந்திர பிரதேஷ் டெய்ரி டெவலப்மெண்ட்
கோ ஆப்பரேடிவ் பெடரேஷன் லிமிடெட்.

AKSHARA 227 86 APD (Tam)



# திறந்த வெளி அரங்கம்

* ரொம்ப கறுகறுப்பாய், பிலிமோத் ஸவ் சமயத்தில் கட்டப்பட்ட திறந்த வெளி அரங்கமான தெலுங்கு லலித கலா தோரணம் அரங்கில், இனி ஞாயிறு தோறும் மாலே பொது மக்க ளுக்கு இலவசமாய்ச் சினிமா காட்டப் போகிருர்கள்.

தான். குடும்பமே அப்படின்னு பேசுவா. பேசட்டுமே'' — அவர் குரல் உயர்ந்து கொண்டே போயிற்று.

இதுநாள்வரை, அருணு அதட்டிப் பேசி ஞல் அடங்கிப் போகும் இயல்பு படைத் தவர், திடீரென மாறிப் போய்...? அருணு வியப்புடனும் ஏளனத்துடனும் அவரைப் பார்த்தாள்.

''என்ன இது? திடீர்னு ஞானேதயம் ஏற் பட்டிருக்கு?'' என்ருள் அதட்டலாக.

''ஆமாம். உன் பேச்சுக்குத் தலையாட்டி ஒவ்வொருத்தரா இழந்தாச்சு. அருமையா வளர்த்த அண்ணு. அன்போடு பாதுகாத்த மன்னி. என் உயிராயிருந்த குழந்தைகள். இனிமே நீதானே. போயேன். எதுக்குப் பயமுறுத்தறே?''

''பிள்ளேப் பாசம் கண்ணே மறைக் கிறதோ?'' அருணு கிண்டலாகக் கேட்கவும் கணேசன் சீற்றத்துடன் எழுந்தார்.

''ஊர் உலகத்தில நியாயம் என்ன தெரி யுமோ? தகப்பன்தான் பிள்ளேயோட வாழ் வுக்கு முட்டுக்கட்டை போடுவான். தாய், மகனுக்காகப்போராடுவாள். ஆனு,இங்கே... ஹூம்! நீயெல்லாம் அம்மான்னு சொல் லிக்கறதுக்குக் கூட அருகதை இல்லாதவ. அதுதான் பசங்க, பிய்த்துக் கொண்டு போயி டுத்து'' வார்த்தைகளே நெருப்பாகக் கக்கி ஞர்.

அருணு துடித்துப் போனுள். அஸ்வத் கல்யாண விஷயத்தில் அவள் மறுப்பும், கசப்பும் தெரிவித்தது உண்மை. குடும்ப கௌரவம் என்ற நினேப்பில் அவள் மகனேக் கண்டித்ததும் உண்மை. ஏன் ஐஸ் வர்யா, கல்யாணம் அவளுக்குப் பிடிக்காமல் நடந்ததுதான். ஆனுல் குடும்ப கௌரவம் என்று வந்ததும் அவளேயும் கண்டித்தாளே! கடைசியில் அவளது கணவரே அவளேக் குற்றவாளியாக்கிக் கூண்டில் நிறுத்திக் குற் றம் சாட்டுகிருரே?

''நான் அம்மாதான். குழந்தைகளுக்கு என் மேலே பாசம் இல்லாமப் போயிட்டா லும், என் வழியில நான் அவாளுக்கு அம்மா என்கிற நினேப்போடத்தான் அதிகாரம் செய்யுறேன். அவாளுக்கு நல்ல வாழ்வு அமையணும்னு போராடறேன். ஏன் இதை நீங்க கூடப் புரிஞ்சுக்கலே?'' — அருணுவிற்கு ஆத்திரமும் அழுகையும் நெஞ்சை அடைத் தன.

கணேசன் அனுதாபத்துடன் அவளே ஒரு கணம் கூர்ந்து நோக்கிஞர். ''அருணு! நீ அம்மாதான். ஆனுல், அன்புக்காக ஏங்கும் குழந்தைகளுக்கான அம்மா இல்லே. நான் தான் இந்த அழகான, அறிவாளியான குழந்தைகளோட தாய்னு டமாரம் அடிச்சுக் கொள்ள நினேச்சே. என் மகள் சந்தோஷம் என் சந்தோஷம்னு நினேச்சயா? என் மகன் விருப்பம்தான் என் விருப்பம்னு சம்மதிச் சயா? இல்லேயே. அதுதான் நீ செய்த தவறு. நான் அம்மா. நான் சர்வாதிகாரி. நான் சொல்றபடிதான் நீங்க பணிஞ்சு நடக்க ணும்னு இந்தக் காலத்து இளேய தலேமுறை களே அடக்குமுறையால் கையாள முடியா துன்னு புரிஞ்சு கொள்ளணும். இல்லேன்ன நீ அம்மா இல்லே; கம்மா.''

அருணு அழுகையுடன் ''போதும் நிறுத்துங்கோ. நான் அம்மாதான். அஸ்வத் என் மகன். ஐஸ்வர்யா என் மகள்.'' என்று வெடித்தாள்.

''அப்பப் புறப்படு.''

''எங்கே?''

''அண்ணு வீட்டுக்குப் போய், அவர் களேக் கூட்டிண்டு வரலாம்,'' அழுத்தமான குரலில் கூறிஞர் கணேசன். அவர் மனம் இந்த முடிவிஞல் இலேசாகிப் போயிருந் தது.

''நானு?'' தயக்கத்துடன் கேட்டாள் அருணு.

''எங்கண்ணுவைப் பத்தி உனக்குத் தெரி யாது. அருணு. விடு தேடி வந்தவர்களே அவர் அவமதிக்க மாட்டார். மத்தவங்களுக்காக வாழ்கிறவர் எங்கண்ணு'' என்ற கணேச னின் கண்களில் நீண்ட நாட்களுக்குப் பிறகு கண்ணீர் மல்கியது.

(தொடரும்)

# மனங்கவர்ந்த விலையில் உளங்கவர்ந்த வெண்மை...




அல்ஃபாஓலெஃபின்
கொண்ட
ஒரே
டிடர்ஜெண்ட் பவுடர்
விலை
கிலோ ஒன்றுக்கு
ரூ. 7.65
(உள்ளூர் வரிகள் தனி)

இதன் ரகசியம்? அதி அற்புத அல்ஃபாஓலெஃபின்—பெஸ்டோவில் மட்டுமே உள்ள சக்திவாய்ந்த விசேஷப் பொருள். காட்டன் துணியானாலும் சரி, சாட்டினாக இருந்தாலும் சரி, சின்தடிக் ஆனாலும் சரி, பட்டுத் துணியானாலும் சரி, எல்லா ரகத் துணிகளின் உண்மைத் தன்மையை பெஸ்டோ பாதுகாத்து நீடிக்கச் செய்கிறது. உங்கள் கைகளின் மென்மையையும் பாதுகாக்கிறது.

பெஸ்டோ வின் தும்பைப்பூ துவைப்பைப் பாருங்கள். குறைந்த விலை பெஸ்டோ, மலிவான பவுடர்களைத்தூக் கியடிக்கும். வெளிக்கும் வெண்மையிலே விலையுயர்ந்த பவுடர்களின் தரத்தை வென்று காட்டிவிடும்.

கோத்ரேஜ் தரும்

புதிய

-பெஸ்டோ-

ப்ளூ டிடர்ஜெண்ட் பவுடர்

CHAITRA-B G 356 TAM

# போரா?

**ராஜீவ் போர்ப் படைகளை அனுப்ப வேண்டும்:**

இனப் படுகொலைக்கு நீதிமன்றம் மூலமா கவா பரிகாரம் தேட முடியும்? அதோடு இலங்கை — பாகிஸ்தான் ராணுவக் கூட்டு வேறு இந்தியாவுக்கே ஓர் ஆபத்தான நிலை மையைத் தோற்றுவித்துள்ளது. இதனால் ராஜீவ் இலங்கைக்குப் போர்ப்படைகளை அனுப்புவதே அறிவுடைய செயலாகும்.

— வி. பி. சுந்தரம், வேலூர்.

ஆண்டாண்டு காலமாகச் சிறுபான்மை யினருக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன; உரி மைகள் மறுக்கப்பட்ட இவ்வினத்தின் மீது ராணுவத்தை ஏவி, அதனைக் கொன்று குவித்து வருகிறது இலங்கை அரசு. சமா தானத் திட்டங்களைத் தந்திரமாகத் தட்டிக் கழிக்கிறது. இத்தகைய அரசு பேச்சு வார்த் தைகள் மூலம் ஒரு காலும் நல்ல முடிவுக்கு வரத் தயாராக இருக்காது.

— சகுந்தலா கந்தசாமி, சென்னிமலை.

பாக்லண்டில் ஆடு மேய்த்த சுமார் முந்நூறு ஆங்கிலேயர்களைக் காக்க பிரிட்டிஷ் அரசு அர்ஜெண்டைனா மீது போர் தொடுத் தது. 1983 இல் இலங்கையில் கலவரம் மூண்ட போது, ஆஸ்திரேலியா இலங்கை யில் வசித்த தனது நாட்டு மக்களின் உயிருக்கு உத்தரவாதம் கோரி இலங்கை அரசை எச்ச ரித்தது. ஆனால் நம் நாட்டு மக்களின் உழைப்பை மட்டும் பிழிந்து எடுத்துக் கொண்டு இப்போது 'வேண்டாதவர்கள்' ஆகிவிட்டதால் கொலை செய்வது எந்த விதத்தில் நியாயம்?

— கி. காளிதாஸ், ராஜதானி.

எடுத்தஎடுப்பிலேயே 'போர்' என்று தோள் தட்டுவது தர்மமல்ல என்பதால் கண்ணன் தூது போனது போல் இந்தியாவும் மிகப் பொறுமையாக இலங்கைக்குத் தூது அனுப்பிப் பார்த்தாகிவிட்டது. இனியும் பொறுமையாக இருப்பது ஈழத் தமிழர் களுக்குச் சமாதி கட்டுவதற்குத் துணை போவ தற்கு ஒப்பாகும்.

— எம். பர்வதவர்த்தினி, ஓமலூர்.

தவறு செய்பவர்களை ஒருமுறை சொல்லித் திருத்த முயற்சி செய்யலாம். அல்லது இரண்டாவது முறை முயன்று பார்க்கலாம். அதற்கெல்லாம்மசியாவிட்டால்வன்முறைப் பிரயோகம்தான் பலன் அளிக்கும்.

— கே. சம்பத், நசியனூர்.

1,25,000 தமிழர்கள் இலங்கையிலிருந்து விரட்டி அடிக்கப்பட்டு இன்று தமிழ்நாட்டில் அகதிகளாகத் தஞ்சம் புகுந்துள்ளனர். இலங்கை அரசோ, சற்றும் இரக்கமின்றி இனப் படுகொலைகளைத் தொடர்கிறது. சமாதான முறைகளில் நம்பிக்கை இல்லாத ஜெயவர்த்தன அரசுக்கு உடனடியாக அறுவை சிகிச்சை செய்வதுதான் தகும்.

— கே. வைத்யநாதேஸ்வரன், நெய்வேலி.

# பேச்சு வார்த்தையா?




**ராஜீவ் பேச்சு வார்த்தைகளைத் தொடர வேண்டும்.**

இலங்கை நாட்டுப் பிரச்னையை இந்திய நாட்டுப் பிரச்னையாகக் கருதுவது சரியல்ல. நம் நாடே மொழிவாரி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு,துர்திர்ஷ்டவசமாக்நாம்இந்தியர்கள் என்ற உணர்வே ஏற்படாமல் உள்ளது. எனவே இலங்கை வாழ் தமிழர்கள் அந்த அரசாங்கத்துடன் ஓர் உடன்பாட்டுக்கு வருவதே நல்லது. இத்தருணத்தில் போர்ப் படைகளை அனுப்பி வைப்பது மிக்க விபரீதத்தை விளைவிக்கும்.

— என். எஸ். ஜகன்னாதன், சென்னை—24

புரட்சியால் தோன்றிய எந்த ஆட்சியும் நிலைபெற்று நின்று மக்களுக்கு மனநிறைவைத் தந்ததாகச் சரித்திரம் சொல்லவில்லையே!

— ஏ. குலாம் மைதீன், சென்னை—11.

போர்ப் படைகளை அனுப்பி, பரணி பாடி, சுதந்திர ஈழத்தை யார் கையில் ஒப்

படைப்பார் ராஜீவ்? TULF PLOT, LTTE, EROS — இதில் எதனிடம் தரப்படும் ஈழம்? மேலே ஆகாயம், கீழே பூமி என்ற நிலையிலேயே தங்களுக்குள் டுமீல் டுமீலில் ஈடுபட்டுள்ளவர்கள் சுதந்திர ஈழம் கிடைத்துவிட்டால் தினமும் தீபாவளிதான் கொண்டாடுவார்கள்! சந்தேகமேயில்லை! எனவே ராஜீவ் அரசியல் தீர்வை மட்டுமே நாட வேண்டும்.

— வே. மீனு, திருச்செந்தூர்.

நாம் தமிழ்த் தீவிரவாதிகளுக்கு ஆதரவாகப் படைகளை அனுப்பினால் காஷ்மீர், சீக்கிய தீவிரவாதிகளுக்கு ஆதரவாகப் பாகிஸ்தான் படைகளை அனுப்புவதும் நியாயமாகிவிடுமே! எனவே இலங்கைக்கு எதிராக உலகநாடுகளின் கருத்தைத் திரட்டுவதில் இந்தியா தீவிரமாக ஈடுபட வேண்டும். இலங்கைக்குப் பொருளாதார நிர்ப்பந்தங்களை ஏற்படுத்துவதன் மூலம் பேச்சு வார்த்தைக்கு இறங்கிவரச் செய்யலாம்.

— எஸ். கருணையானந்தம், உசிலம்பட்டி.

இலங்கைப் பிரச்னை இன்னமும் ஓர் உள்நாட்டுப் பிரச்னையாகத்தான் இருந்து வருகிறது. இலங்கை அரசிடமும் சரி, ஈழத் தமிழர்களிடமும் சரி, தவறுகள் இருக்கின்றன. இத்தவறுகளைக் களைந்து இரு சாராரையும் இணைப்பதுதான் இந்தியாவின் வேலையாக இருக்க வேண்டுமேயொழிய போர்ப் படைகளை அனுப்புவதல்ல. போரினால் சிக்கல்கள் அதிகரிக்கத்தான் செய்யும். அண்டை நாடுகளுடன் விரோதம் ஏற்படும்.

— பி. மீனு, சென்னை—15.

எவ்வாறு 'காலிஸ்தான்' பிரிவினை கோரிச் சீக்கியத் தீவிரவாதிகள் போராடுவதை இந்திய அரசு எதிர்க்கிறதோ, அவ்வாறே தனி ஈழம் கோரிக்கையை இலங்கை அரசு எதிர்க்கிறது. ஆகவே இந்தியப் படைகளை இலங்கைக்கு அனுப்பினால் நாம் பிரிவினைக்குத் துணை போவதுபோல் ஆகும்.

— இராஜகாளி, குளித்தலை.

ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

என். எஸ். ஜகன்னாதன்,
65, ரங்கராஜபுரம் ரோடு,
கோடம்பாக்கம்,
சென்னை—600 024.





* கிரிக்கெட் ஸ்டார் அசாருதீனுக்கு ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் ஒரு ஹைதராபாத்-கிளையில் ஆபீஸராய் உத்தியோகம்.

* சிதாரா — சினிமா வார இதழ்
அன்னதாதா— விவசாய மாத இதழ்
சதுரா — தெலுங்கு மாத நாவல் இதழ்
விபுலா—சிறுகதைகள் மட்டும் இடம் பெறும் பத்திரிகை
நியூஸ் டைம் — ஆங்கில தினசரி
ஈநாடு — தெலுங்கு தினசரி (நாலு பதிப்புகள். விற்பனை நாலரை லட்சம்.)

இத்தனையும் நடத்தி வருபவர் ராமோஜி ராவ். இது தவிர அரை டஜன் சினிமாக்களும் எடுத்திருக்கிறார். வயது சுமார் 40 தான் ஆகிறது இவருக்கு.





# "ஒரு பிரார்த்தனை போல ஆந்திராவுக்குப் போகப் போகிறேன்!"



ஆந்திராவின் முன்னணி நடிகர்களில் ஒருவராக இருந்து விடியோ விவகாரத்தால் திடீரென்று சிறையில் அடைக்கப்பட்ட சுமன் இப்போது மீண்டும் படப்பிடிப்புகளில் கலந்து கொள்கிறார். செங்கல்பட்டில் போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகிலே குடியிருந்து கொண்டு தினமும் சென்னை வரை வர மட்டுமே அவருக்கு அனுமதி.

"இந்த நிலைமை உங்களுக்குக் கஷ்டமாக இல்லையா? நாலு பேரைப் பார்த்துப் பேச, நீங்கள் சங்கடமாக உணரவில்லையா?" என மெதுவாகக் கேட்டோம்.

விரக்தியாகச் சிரித்தார். "முதலில் கொஞ்சம் கஷ்டமாக இருந்தது. இப்போது பழக்கமாகிவிட்டது. ஆனால் என்னை யாரும் தர்ம சங்கடத்தில் ஆழ்த்தவில்லை. இப்போதும் கூட பலரும் நட்புடன்தான் பழகுகிறார்கள்..."

அவர் கூறியது உண்மை என்று நிதர்சனமாகக் கண்டோம். பெயரிடப்படாத ஒரு தெலுங்குத் திரைப்பட ஷூட்டிங் ஏ. வி. எம்மில் நடந்து கொண்டிருந்தது. 'சுமன் காரு' என்று மரியாதையாகத்தான் குறிப்பிடுகிறார்கள். நிழல்கள் ரவி வெகு நேரம் அந்நியோன்னியமாகப் பேசிக் கொண்டிருந்தார். என்ன பேசினார்கள்? ம்ஹூம், நம் காதுக்கு எட்டவில்லை.

மறுபடி சந்தர்ப்பம் கிடைத்தபோது, "இந்த நிலைமைக்கு அப்புறம் வெளிவந்த உங்களுடையபடங்களுக்குவரவேற்புஎப்படி இருந்தது...?" என்று கேட்டோம்.

"நான் கைதான பிறகு வெளிவந்த அத்தனை படங்களும் ஸூபர் ஹிட்தான். அதற்காக நான் ஆந்திர மக்களுக்கு ரொம்பவும் கடமைப்பட்டு இருக்கிறேன். அந்தத் தைரியத்தில்தான் கையில் இருக்கிற பதினெட்டு படங்களையும் முடித்துக் கொண்டு இருக்கிறேன்..."

"சில வங்காள, ஹிந்தித் திரைப்படங்களைப் போல தெலுங்குப் படங்கள் பேரும் புகழும் பெறவில்லையே?"

"ஏனில்லை, சங்கராபரணம், சப்தபதி போன்ற அற்புதமான படங்கள் வெளிவந்திருக்கின்றனவே. ஆனால் பெரும்பாலான படங்கள் சராசரிதான். இது எந்த மொழிக்கும் பொருந்தக் கூடியதுதானே? பொதுவாக ஆந்திர மக்கள் மிகவும் வெளிப்படையானவர்கள். மனத்தில் எதையும் வைத்துக் கொள்ள மாட்டார்கள். பேசுவதே சத்தமாக சண்டை போடுவது போலிருக்கும். அந்த வகையிலேதான் பெரும்பாலான படங்களும் இருக்கின்றன..."

"உங்களுக்குப் பெண் விசிறிகள் அதிகமாயிற்றே. இந்தக் குற்றச்சாட்டுக்குப் பிறகு எப்படி...?"

"இப்போதும் கூட நிறைய பெண்களிடமிருந்து வருத்தப்பட்டு, அனுதாபப்பட்டு அதிகமாகக் கடிதங்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன. என்னுடைய 'இமேஜ்' கெடவில்லை. நான் இதற்கெல்லாம் ஆந்திர மக்களுக்கு மிகவும் கடமைப்பட்டு இருக்கிறேன்.

"எல்லாம் நல்லபடியாக முடிந்து நான் சுதந்திரமாக வெளிவந்தவுடன் ஒரு பிரார்த்தனை போல ஆந்திராவின் எல்லா மாவட்டங்களுக்கும் போகப் போகிறேன். என்னுடைய அன்பு ரசிக, ரசிகைகளைப் பார்த்து மகிழப் போகிறேன்..."

''சந்ரு.''
'' ......
''சந்ரு... எழுந்திரு.''
கம்ப்யூட்டர்த்தனமான குரலின் தொல்லை பொறுக்க முடியாமல் எழுந்தான்.
''சனியனே... என்ன வேணும்?''
''கோச்சுக்காதே சந்ரு. நேரம் இப்போப் பத்து மணி... இன்னிக்கி டயரியிலே நான் என்ன பதிவு பண்ணணும்னு சொல்ற நேரம்!''
''முதல் காரியமா நாளேலேர்ந்து இப்படி எழுப்பக் கூடாதுன்னு உனக்குக் கட்டளை எழுதப் போறேன்.''
பச்சை. ஆரஞ்சு என்று விளக்குகள் கண் சிமிட்டி வாக்கியம் பதிவாயிற்று.
''அவ்வளவுதானா?''
''ஆமாம். போய்த் தொலை.''
''சரி'' என்றது. பர்ரென்று பேப்பரில் வாக்கியத்தை எழுதி வெளியில் துப்பியது. ''இந்தா உனக்கு ஒரு பிரதி.''
கசக்கி எறிந்தான்.
ரோபோ வருத்தம் பூசிய வார்த்தைகளை உதிர்த்தது. ''நீ என்னை வாங்கியிருக்க வேண்டாம் சந்ரு. பக்கத்து வீட்டு எழுத்தர் ரோபோ இப்படியா இருப்பேன்னு என்னோட காலியான டேப்பைப் பார்த்துப் பெருமூச்சு விடுது.''
''நீ போகப் போறியா இல்லியா?''
''போறேன். அதுக்கு முன்னால உனக்கு ஞாபகப்படுத்த வேண்டிய விஷயங்கள்: இன்னிக்கு மனைவியை அழைத்துவரப் போகிறேன். அவளால் ஒரு பரிசோதனை ஆக வேண்டியிருக்கிறது.
''என் கடவுளே! எப்படி மறந்தேன் இதை... நன்றி உனக்கு! ஞாபகப்படுத்தினாய்.'' போர்வையையும் தூக்கத்தையும் உதறி விலகினான்.

பரிசோதனைச்சாலைக்குள் சந்ரு செல்வதற்கு முன்னால் இன்னும் சில தினங்களில் அவன் தயாரித்து ஒளிபரப்பாகவிருக்கும் ஒரு தொலைதூர நிகழ்ச்சி அடங்கிய 'ஒளித் தட்டை'ச் சுழல விடலாம்.
திரை முழுக்கச் சந்ருவாகி...
'வணக்கம். என் பெயர் சந்திரராமன். எல்லோருக்கும் நான் சந்ரு. உலகப் பல்கலைக் கழகத் தேர்வில் உடலியல் மற்றும் பௌதிகத்திலும் இரண்டாவதாக வந்தவன்... நமது உலகத்திற்குநான் தயாரித்து அறிமுகப்படுத்தவிருக்கும்...

# அவநம்பிக்கையுடன் தங்கள்...

ஹெச்.என்.ஹரிஹரன்



சட்டென்று சந்ரு விலகிப் போக புள்ளி யில்லாத கம்ப்யூட்டர் கோலங்கள் நிறம் நிறமாய் நெளிய, அதன் பின்னணியில் காமிரா நெருங்கி ஓர் இயந்திரத்தைத் தொட்டது. திரை முழுக்க இயந்திரம் விசுவரூப மெடுக்கக் காமிரா இன்னும் நெருங்கி அதன் பெயரைப் படித்தது.

'இன்வெஸ்டி.'

நா ளியங்கிக் கதவுகள் விலகின. குளிர்ச்சி உடலை ஊடுருவியது. சந்ரு காலடி எடுத்து வைத்ததும் மெதுவாக நகர்ந்த தரைக் கம்பளம். தொலைதூரத் திரையில் பார்த்த அதே இயந்திரம் அருகில் நின்றது.

சந்ரு அன்போடு இன்வெஸ்டியை வருடினான்.

"தொடாதே என்னை. உன் கைச்சூடு என்னைப் பாதிக்கும் அளவிற்கு இருக்கிறது."

"ஏய் சின்னப்பையா. என்கிட்டேயே சட்டம் பேசுகிறாயா?"

"நான் என்ன செய்ய? நீதானே என்னைக் கண்டுபிடித்தாய்! கொஞ்சம் புதிதான மாடலில் என்னை உருவாக்கியிருக்கக் கூடாதா?"

"அவசரப்படாதே. உனக்குப் பதிவு எண்



வாங்கியபின் எல்லாம் யோசிக்கலாம்."

"சரி... என்னை வைத்து என்ன செய்வதாய் உத்தேசம்?"

.... ரூ லையில் தபால்தலை உருவில் சந்ரு ஒளிர்ந்தான்.

'இதுதான் நான் கண்டுபிடித்திருக்கும் இயந்திரம் இன்வெஸ்டி. இதன் மூலம் ஒரு பெண் எந்த விநாடியில் கர்ப்பமடைந்தாள் என்பதை மிகத் துல்லியமாகக் கண்டுபிடிக்க வியலும். இது எதற்கு என்று உயர்த்தும் உங்கள் புருவங்களைத் தயவு செய்து இறக்கி வைத்துக் கொள்ளுங்கள். உதாரணமாகக் கற்பழிக்கப்பட்டுக் கர்ப்பமடையும் பெண்களை இந்த இயந்திரத்திற்கு உட்படுத்தினால் சரியான நேரம் கிடைக்கும்; அதன் மூலம் குற்றவாளிகளைப் பிடிக்க உலகக் காவலர்களுக்கு வேலை எளிதாகும். மேலும் பொதுவாகப் பெண்கள் கர்ப்பமுறும் நேரத்தைப் புள்ளியியல் மூலம் கணக்கெடுத்து அதற்கேற்றாற்போல் அரசாங்கம் நடவடிக்கை எடுத்து ஜனத்தொகையைக் குறைக்க முயற்சி செய்யும். இதற்காக இந்த இயந்திரத்திற்குத் தேவைப்படுவது கருவைச் சுற்றி அதனைத் தாங்கித் தேங்கியிருக்கும் நீர்தான். அதில் ஒரு சி. சி. எடுத்து இதோ இப்படி..."

தயாராய் இருந்த ஓர் ஊசிக் குழாயில் ஏற்றி வைத்திருந்த திரவத்தை இயந்திரத்தினுள் செலுத்தினான். கட்டளைப் பொத்தான்களை அமுக்கினான்.

பத்து விநாடிகள் கழிந்தன.

பச்சை விளக்குகள் எரிந்தன.

"பொய் சொல்லாதே சந்ரு... இது வெறும் குடிதண்ணீர்" என்று குரல் ஒலித்தது. சந்ரு திரை அளவு இறங்கி வந்து கண்ணடித்துச் சிரித்தான். "ஆல் தி பெஸ்ட்" என்றபடி மறைந்து போனான்.

•

எ ல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டும் என்று மனசு துடிக்கிறது இன்வெஸ்டி" என்றபடி சந்ரு தொலைபேசிப் பித்தான்களை அழுத்தினான்.

"ரேகா புதுதில்லி எண்: RE 45969."

"அவளைப் பார்த்துக் கொண்டே பேச வேண்டுமா?"

"ஆமாம்."

"அப்படியானால் கூடுதலாக ஐந்து உலக டாலர்கள் ஆகும்."

"தெரியும்... சீக்கிரம் தொடர்பு கொடு."

"இதோ..."

திரையில் "ரேகா" என்று பெயர் மினுக் மினுக்கென்று எரிந்து அணைந்து கொண்டிருந்தது.

சடாரென்று திரையை நிறைத்து ரேகா தெரிந்தாள்.

"சந்ரு நீயா?"

"ஆமாம்... நானேதான் டார்லிங்... உடனே நீ டெலிப்ளேனில் ஏறி இங்கே வர முடியுமா?"

"என்ன விஷயம் சந்ரு?"

"ரொம்பவும் அந்தரங்கம். சீக்கிரம் வா."

வெட்கமாய்ச் சிரித்தாள்.

"உனக்குச் சிரிப்பா... சொன்னதைச் செய்... காத்திருக்கிறேன்." சட்டென்று

தொலைபேசியை வைத்தான். பத்து உலக டாலர்கள் என்று பில் அச்சடித்து வெளியில் விழுந்தது.

வாசலில் காத்திருந்தான் ரேகாவிற்காக.

பத்து நிமிடங்கள்.

ரேகா காரிலிருந்து இறங்கினாள்.

சந்ரு முகம் பிரகாசித்தான்.

''டெலிப்ளேன் முப்பது செகண்டு தாமதம் சந்ரு...''

''பரவாயில்லை ரேகா... அரசாங்கத்தில் அந்த விமானியை நன்றாய்த் தண்டித்துவிடுவார்கள்...''

பரிசோதனை அறைக்குள் அழைத்துப் போனான்.

''வா என் கண்ணே.''

உள்ளே நுழைந்ததும் பிரமித்துப் போனாள்.

''சந்ரு என்ன இது?''

''போனில் சொல்லவில்லை? அந்தரங்கமான விஷயமென்று.''

''என்ன இயந்திரம் இது சந்ரு?''

''நீ சந்திப்பது என் கண்டுபிடிப்பு ரேகா... பெயர் 'இன்வெஸ்டி.' 'இன்வெஸ்டி! இது என் மனைவி ரேகா.

''ஸ்கிரீனில் பார்த்ததைவிட நேரில் இன்னமும் அழகு, உன் மனைவி!''

''வாயை மூடு சின்னப்பையா.''

''சந்ரு எதுக்கு இது?''

''வா என்னோடு.'' அவளை அணைத்துச் சென்றான்.

''இதைப் பார் உனக்குப் புரியும்'' அவன் கையில் 'ஒளித்தட்டு.'

''வணக்கம். என் பெயர் சந்திரராமன்...''

''இதுக்கும் என்னைக் கூப்பிட்டதுக்கும் என்ன சம்பந்தம் சந்ரு?''

''முட்டாளே... உன்னுடைய ஐ. க்யூவைக் கணக்கு பார்க்காமல் காதலித்தது என் தவறுதான்... என் அன்பான முட்டாளே... இதில் நான் முதன் முதலாக பிரயோகிக்கப் போகிற பெண் நீதான்...''

ரேகா மேடிட்டிருந்த தன் அடிவயிற்றைத் தடவிக் கொண்டாள்.

''மன்னித்துவிடு சந்ரு... உன்னோட முட்டாள்தனமான கண்டுபிடிப்புக்கு நான் உடன்படமாட்டேன்... இது என்னோட கற்பு நிலையைச் சோதிக்கிற மாதிரி இருக்கு...''

''புரிஞ்சுக்கோ... உன்னோட நான் பகிர்ந்துக்கிட்டிருக்கிற நாட்களையும் என்னோட டயரி எழுதற ரோபோ பதிஞ்சு வெச்சிருக்கு. இப்ப இன்வெஸ்டி சொல்லப் போற முடிவையும் அதை வெச்சு ரோபோ சொல்லப் போற அந்த நாளையும் குறுக்குச் சோதனை பண்ணிணு, இன்வெஸ்டி எவ்வளவு திறமைசாலின்னு எளிதாய் முடிவு பண்ணிடலாம்... தயவு செய்து எனக்குச் சம்மதம் தா...''

யோசித்தாள்.

''தயவு செய்து ரேகா...''

''சரி... உனக்காகச் சம்மதிக்கிறேன்.''

''நன்றி ரேகா!'' அவளைத் தூக்கி மேஜையில் கிடத்தினான்..

நடுங்கும் விரல்களில் ஒரு சி. சி. திரவத்தை ஊசிக் குழாயில் உறிஞ்சினான். வலி தாங்க முடியாமல் ரேகா நெளிந்தாள்.

''மன்னித்து விடு கண்ணே...''

''இன்வெஸ்டி! உன் முதல் பரிசோதனை ரெடி... நீ தயாரா?''

''ம்... சரி...''

''கொஞ்சம் பொறு சந்ரு... நான் வெளியில் போய்விடுகிறேன். இன்வெஸ்டியின் திறமையை உன் வாயால் அறிவித்தால்தான் எனக்கு நிம்மதி வரும்...'' தரையில் நகர்ந்து போனாள்.

''அப்படியே ரேகா... தயவு செய்து என்னுடைய டயரி ரோபோவை அனுப்பிவிடு.

''கட்டாயம் சந்ரு'' திரும்பி வந்து அவனை முத்தமிட்டு விலகினாள். ''ஆல் தி பெஸ்ட்.''

திரவத்தை இயந்திரத்தினுள் செலுத்தினான். கட்டளைப் பொத்தான்களை அமுக்கினான். இதயம் லப்டப் தாளம் விலகி வாசிக்க அவன் திரையையே பார்த்தவண்ணமிருந்தான்.

பச்சை விளக்குகள் எரிந்தன.

பின்னணிக்குரல் ஒலிக்கத் திரையில் எழுத்துக்கள் பிறந்தன.

''17.3.2028

இன்றோடு சரியாக 144 நாட்கள்.''

அந்த நாள் எது?'' என்று கேட்டான் சந்ரு.

''25.10.2027. இரவு 9.26 மணி.''

பர்ரென்ற ஒலியுடன் அவை அச்சாகி வெளியில் விழுந்தன.

''நன்றி இன்வெஸ்டி.''

பின்னால் ஒலி கேட்டது.

''கூப்பிட்டாயா சந்ரு...'' — டயரி.

''ஆமாம்... 25.10.2027 அன்று பதிவாகியிருக்கிற குறிப்புகளை எனக்குத் தா.''

உள்ளே காந்த நாடாக்கள் சுழன்றன. அப்படியும் இப்படியும் அசைந்து ஓரிடத்தில் நின்றன. உள்ளிருந்து சந்ருவின் குரல் வெளிப்பட்டது.

''என்ன அழகான ஊர் பெங்களூர். விமானத்திலிருந்து பார்க்கும்போதே பச்சை தெரிகிறது. ஊரெங்கும் புதிதாய் மரங்களை விதைத்திருக்கிறார்கள். இன்றைக்கு எல்லா விடங்களுக்கும் நடந்தே போனேன். தெருவில் நான் மட்டும் நடப்பதற்குப் பயமாயிருந்தது. தலைதெறிக்க ஓடும் கார்களிலிருந்து யாராவது இறங்கி வந்து சேர்ந்து நடக்க மாட்டார்களா என்று மனம் ஏங்குகிறது. போகிற ஊர்களில் எல்லாம் இப்படி எதிர்பார்க்க முடியுமா? இருந்தாலும் இனிமேல் எங்கு போனாலும் ரேகாவையும் அழைத்து வரவேண்டும் என்று முடிவு செய்துவிட்டேன்...''

''நிறுத்து. மறுபடி வாசி...''

மறுபடி அதே வாக்கியங்கள் ஒலித்தன.

''என்னைக் குழப்புகிறாய்... எந்தத் தேதியில் நடந்தது இது?''

''என்ன சந்ரு... நீ சொன்ன அதே 25.10.2027 தான். வேண்டுமானால் அச்சடித்துத் தருகிறேன்...'' பேப்பரில் அச்சிட்டு வெளியில் துப்பியது.

''குழப்பாதே...'' நகர்ந்து இன்வெஸ்டியிடம் போனான்.

''இன்வெஸ்டி... உன்னிடம் ஏதாவது தவறா?''

''இல்லை சந்ரு... தவறு செய்ய நான் மனிதன் இல்லையே... நீ சொன்னபடிதான் எல்லா

# உண்மையிலேயே பாதுகாப்பை விரும்புவோருக்கு!

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(சென்னை)

**A LEADING HIRE PURCHASE FINANCIERS**

குறைந்த பட்ச டெபாசிட் ரூ. 5000/- ஏற்றுக் கொள்ளப்படும்.
ரூ.10,000/-க்கு மேல் டெபாசிட் செய்யும் ஒவ்வொரு டெபாசிட்தாரர்களுக்கும் ஊக்க போனஸாக 1% கூடுதல் வட்டி வழங்கப்படும்.

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

| | |
|---|---|
| 1-வருடம் | 18% |
| 2-வருடங்கள் | 19% |
| 3-வருடங்கள் | 20% |
| 5-வருடங்கள் | 22% |

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

| | | |
|---|---|---|
| சென்னை | | 39, நடேசன் தெரு (2வது மாடி)<br>சிவா-விஷ்ணு கோயில் அருகில்<br>உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017.<br>போன் : 442218/447186 |
| பெங்களூர் | | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)<br>மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003.<br>போன் : 366971 |
| திருச்சி | : | 22, மதுரை ரோடு (முதல் மாடி)<br>ராஜா தியேட்டர் அருகில<br>திருச்சிராப்பள்ளி-620 008.<br>போன் : 29772/31376 |
| பாண்டிச்சேரி | : | 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்)<br>2வது மாடி, பாண்டிச்சேரி-605 001.<br>போன் : 6493 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ.கனல் ரோடு,<br>தஞ்சாவூர்-613 001. போன் : 1626 |
| திருவண்ணாமலை | : | 14/A. ஆனைக்கட்டி தெரு,<br>திருவண்ணாமலை-606 601. போன் : 2483 |
| பட்டுக்கோட்டை | : | 121, தலையாரி தெரு. (முதல் மாடி)<br>பட்டுக்கோட்டை-614601. போன் : 453 |
| கோயமுத்தூர் | : | 666, ராஜா தெரு (முதல் மாடி)<br>கோயமுத்தூர்-641 001. போன் : 34369 |
| மதுரை | : | 41, வடக்கு வெளி வீதி (முதல் மாடி)<br>மாடர்ன் லாட்ஜ் ஸ்டாப்பிங், மதுரை-625 001 |

JAY ADTS JF-101 86 Tam




# வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

## வெயில் வீணாக ஒரு வழி!

**போட்டி: 50**

கோடை விடுமுறை வந்துவிட்டது. குழந்தைகளுக்கு. வெயிலில் வெளியே சுற்றாமல் வீட்டுக்குள்ளேயே இருக்குமாறு அவர்களை இழுத்துப் பிடித்து வைப்பது எப்படி? போரடிக்கிறது என்று அவர்கள் முணுமுணுக்காதிருக்கச் சென்ற ஆண்டுகளில் அவர்கள் விரும்பி ஏற்கிற மாதிரி என்ன வேலை கொடுத்தீர்கள்? என்ன ஹாபி அல்லது விளையாட்டை அறிமுகப்படுத்தினீர்கள்? நீங்களும் அதில் பங்கு கொண்டீர்களா? ரசமான சம்பவம் ஏதும் உண்டா? கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுவதுமாகக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கலில் வி.ஐ.பி. ஸூட்கேஸ். உறை மீது ''வெயில் வீணாக ஒரு வழி!''

**முடிவு தேதி: 28.4.86**

**மூன்றே வாய்ப்புக்கள்! மூன்றே ஸூட்கேஸ்கள்! மூன்றே முயற்சிகள்! மூன்றிலும் பங்கு பெறுங்கள்!**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

வற்றையும் நிறைவேற்றியிருக்கிறேன். திரவத்தின் தன்மையை ஆராய்ந்தால் நான் சொன்ன 144 நாட்கள் கணக்குச் சரியாக வருகிறதே...''

''அப்படியானால்...''

''......என்று என்னை ஏன் கேட்கிறாய்? முதலில் மறுத்த உன் மனைவியை விசாரி. அவளைப் பார்த்தால் எனக்கே ஆசை வருகிறதே.'' பக்பக்கென்று ஒலியெழுப்பிச் சிரித்து விளக்குச் சிமிட்டியது.

சந்த்ரு முகம் சிவந்தான்.

''ரேகா என்னை வஞ்சித்துவிட்டாயே சண்டாளி'' என்றபடி மேஜையிலிருந்த வெடிப்பியை உருவினான்.

பரிசோதனைச் சாலை திறந்தது.

''ரேகா...'' குரல் அழைத்தது.

சிரிப்பாய் முகம் திரும்பினாள். ''வெற்றியா சந்த்ரு?''

சந்த்ரு பேசவில்லை. வெடிப்பியின் குதிரையை விரட்டினான்.

தோட்டாக்கள் வரிசையாய் ரேகாவின் வயிற்றில் புதைந்தன.

''சந்த்ரு... என்னாயிற்று உனக்கு?'' இரத்தம் சிதறக் கீழே விழுந்து புரண்டாள்.

சந்த்ரு பதில் பேசவில்லை. அவளையே பார்த்துக் கொண்டு நின்றான்.

டயரி புலம்ப ஆரம்பித்தது. ''ரேகாவை என்ன பண்ணப் போயிருக்கானோ தெரியவில்லையே.''

இன்வெஸ்டி சிரித்தது. ''கோபத்துல அவளைக் கொன்றிருக்க வேண்டும்.''

''சிரிக்காதே இன்வெஸ்டி. என்னுடைய காந்த நாடாக்களில் சுவையான இடங்களை இவர்கள் இருவரும் சேர்ந்து நிரப்பியிருக்கிறார்கள். சந்த்ரு வருமுன் நீ குறிப்பிட்ட 25 ந்தேதிக்கு அடுத்த நாளை வாசிக்கிறேன் கேளு.

— ''இன்றைக்கு வெகு சந்தோஷமாயிருந்தோம்... நேற்றைக்கு பெங்களூர் போய்விட்ட ஏக்கத்தில் நானும், என்னைப் பிரிந்த வருத்தத்தில் அவளும்... அதை இருவருமே உணர்ந்துவிட்டோம் என்று உடைந்து போன எங்கள் அறைக்கட்டில் சொல்கிறது (சந்த்ருவின் சிரிப்பு)'' —

டயரி சிறிது மௌனத்திற்குப் பிறகு திடுக்கிட்டது.

''இன்வெஸ்டி என்ன காரியம் செய்துவிட்டாய்?''

''அப்படியென்னாச்சு?''

''போன வருஷம் அக்டோபர் 26 ந்தேதியிலிருந்து இன்றோடு 144 நாட்கள் என்று நான் கணித்திருக்கிறேன்.''

''எப்படி.... எப்படி?''

''கணக்கைக் கேளு... போன வருஷம் அக்டோபர் ஆறு நாள், நவம்பர் முப்பது, டிசம்பரும் ஜனவரியும் முப்பத்தொரு நாள், பிப்ரவரி இருபத்தொன்பது, மார்ச் இன்றோடு பதினேழு.''

''அதெப்படி பிப்ரவரிக்கு இருபத்தொன்பது?''

''இந்த வருஷம் லீப் வருஷமாச்சே.''

''லீப்பா... அப்படின்னா என்ன?''

கதவு திறந்தது. வெடிப்பியோடு உள்ளே நுழைந்தான் சந்த்ரு.

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச் க்ரீம் (செவ்வின மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

# காந்தி கிராமம் தயாரிக்கும் தரமான வீட்டு மருந்துகள் மற்றும் டானிக்குகள்

## ஒவ்வொரு குடும்பத்திலும் கைவசம் இருக்க வேண்டியவை

### வீட்டு மருந்துகள்

**ஓமவாட்டர்** — அஜீரணத்தை முழுக்க குணப்படுத்துகிறது.

**இஞ்சி எலுமிச்சை சிரப்** — பசியைத் தூண்டுகிறது.

**இஞ்சி முரபா** — (ஜிஞ்சர் முரபா) (அதரக்) — ஜீரண சக்தியை அதிகரிக்கிறது.

**பாவன ஜீரகம்** — தலைச் சுற்றலை நிறுத்துகிறது. வாயு உபாதையை போக்குகிறது.

**பாவன கடுக்காய்** — ஜீரண அபிவிருத்திக்கும் மலச்சிக்கலைப் போக்கவும் பயன்படுகிறது.

**ஆயுர்வேத பற்பொடி** — தேர்ந்தெடுக்கப்பட்ட மூலிகைகளிலிருந்து தயாரிக்கப் படுகிறது. வலிமையான பற்கள், ஆரோக்கியமான ஈறுகளைத் தருகிறது. வாய் நாற்றத்தை போக்குகிறது.

**நீலி பிருங்காதி தைலம்** — (கூந்தல் எண்ணெய்) — இள நரையையும் முடி உதிர்வதையும் தடுக்கிறது.



### ஆரோக்கிய டானிக்குகள்

**குல்கந்து** — சிறந்த மலமிளக்கி. புதிய ரோஜாப் பூக்கள், சர்க்கரை, தேன் ஆகியவை கலந்து கொண்டு தயாரிக்கப் படுகிறது. கர்ப்பிணிகளுக்குச் சிறந்தது.

**அஸ்வகந்தா லேகியம்** — இரத்த சோகையைத் தடுக்கிறது. ரத்தத்தை சுத்தி செய்கிறது. உடலைத் தேற்றுகிறது.

**சௌபாக்கிய சுண்டி** — சிறந்த ஜீரண மருந்து. பிரசவத்திற்குப் பின் பயன்படுத்த மிக சிறந்தது.

**கருணை லேகியம்** — மூலத்தை தடுக்கிறது.

**தேத்தாங் கொட்டை லேகியம்** — நோயால் பாதிக்கப் பட்டவர்கள் உடல் தேற சிறந்த டானிக்.

**ரோஜாமொக்கு லேகியம்** — இரைப்பை புண்ணை ஆற்றுகிறது.

**கூஷ்மாண்ட லேகியம்** — பசியைத் தூண்டி ஜீரண சக்தியை அதிகரிக்கிறது. [illegible] போக்கவும் பயன்படுகிறது.



ஊட்டச் சத்து நிறைந்த புதிய சக்தி மால்ட் 4 வாசனைகளில் கிடைக்கிறது.

சமையல் பொடிகளும் தயார் செய்யப்படுகின்றன

காந்தி கிராமம் காந்தியின் லட்சியங்களின் வழியில் இயங்கி வருகிறது.



லெட்சுமி சேவா சங்[illegible]
காந்தி கிராமம் 624 [illegible]
அண்ணா [illegible]
தமிழ்நா[illegible]

கிடைக்குமிடம் : காந்தி கிராம அங்காடிகள் ([illegible]
(காந்தி கிராமம், மதுரை, திண்டுக்கல் [illegible]
பழநி, திருநெல்வேலி, பள்ளப்பட்டி, அம்பாசமுத்திரம்) காதி கிராமோதயோக பவன்கள், சர்வோதய சங்கங்கள், எல்லா (டிரக்கிஸ்ட் & கெமிஸ்ட்) பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கும்.

இவைகளைத் தவிர சித்த. ஆயுர்வேத மருந்துகள்
250க்கும் மேற்பட்டவைகள் தயாரிக்கிறோம்.

mas(s) 6325 TAM



# மகாசக்தி மாரியம்மன்

மு தலில் ஒட்டக்கூத்தர். ஒட்டக்கூத்தர்
மாரியம்மனின் அருள் பெற்றவர் என்று நிரு
பிக்க ஒரு கதை. கற்பனையோ புராணமோ
நல்ல வளம். ஜாதி பிரச்னை, கத்தி மேல்
நடை!

பிறந்த நாளும் அதுவுமாய் ஒட்டக்கூத்தர்
அன்னையின் மீது பாட்டெழுதத் துடிக்க,
காற்றில் பந்தம் அணைந்து போக, திடீரென்று
மாரியம்மனே வந்து பந்தம் பிடிக்கும் காட்சி,
சிலிர்க்கவைக்கிறது. அடுத்தது பிரம்மேந்திரர்
புராணம். அதில் சின்னக் கிருஷ்ணன்
நடக்க, காவி பிரம்மேந்திரர் தவழ அந்த
ஒரு காட்சிக்கு மட்டும் ஆயிரம் கண்கள்
வேண்டும்.

அப்புறம் கதை தடாரென்று புராணத்
திலிருந்து லௌகீக உலகிற்கு வந்து முத்து
அவன் காதலி, மாரியப்பன், முனியம்மா
என்று வட்டமடிக்க ஆரம்பிக்கிறது.

பின்கதைகள் இரண்டும் ஆதி பராசக்தி
காலத்திலிருந்தே பழக்கம் என்பதால்
கொஞ்சம் பழைய வாடை அடிக்கிறது. இருந்
தாலும் தேங்காய் சீனிவாசன் மாரியம்ம
னோடு நடத்தும் தகப்பன்—மகள் உரையாடல்
படு ஜோராய்த்தான் இருக்கிறது. பழைய
சாதத்திற்கு பச்சை மிளகாய்க் கடித்த மாதிரி.

ராஜேஷ், சந்திரசேகர், கே.ஆர். விஜயா,
இளவரசி, சுஜாதா, அனுராதா, சுமித்ரா—
லிஸ்ட் போட்டால் தாளாது. ஏகப்பட்ட நட்
சத்திரங்கள். அதனால் தனித்தனியாக தரம்
பிரிக்க முடியாவிட்டாலும், ஒட்டு' மொத்த
மாய்ப் பார்க்கும்போது யாரையும் குறை
சொல்ல முடியவில்லை.

பிரம்மேந்திரர், பிராம்மணன் மனைவியை
'அடியே அம்மா, இரும்புடி' என்று அன்பு
டன் அழைக்க, அந்த அம்மாள் இரும்ப, 'திக்
கென்று நெஞ்சில் அறைகிறது மாரியம்ம
னின் முகம். எதற்குச் சொல்ல வந்தோமென்
றால், அந்த சின்னக் கிருஷ்ணனுக்காகட்டும்,
மாரியம்மனுக்காகட்டும் மேக்கப் அபாரம்.

நிறைய சம்பவங்களைக் கோத்துக் கோத்
துக் கொடுத்திருந்தாலும் படம் ஆரம்பித்து
முடிவதற்குள் ஒரு நூற்றாண்டு கழிந்த மாதிரி
இருக்கிறதே என்று நினைக்காமல் இருக்க
முடியவில்லை.

பட்டிமன்றம் மூலம் மாரியம்மன் மகிமை
யைச்சொல்வதுஎன்றுமுடிவெடுத்தபின்னர்
எடுத்தோம் தொடுத்தோம் முடித்தோம்
என்று இருக்க வேண்டியதுதானே, கடைசி
யில் அந்தப் பட்டிமன்ற கோஷ்டியை
அப்படியா மாயமாய் மறைய வைப்பது?

செங்குந்தனுபாட்டும்,மகரந்தம்தானாறும்
பாட்டும் கேட்க, ரசிக்க.

கே.எஸ்.ஜி. தாய்மார்களை மனத்தில்
வைத்து எடுத்திருக்கிறார் போல. அவர் நம்
பிக்கை பொய்க்கப் போவதில்லை.

— ஜெயமன்மதன்

## தமிழ்நாடு சர்வீஸ் ஏஜண்டுகள் :

**திருமதி எல். ஜெயஸ்ரீ**
40, திருவேங்கடம் தெரு,
மந்தவெளி, இராஜா அண்ணாமலைபுரம்
சென்னை-600 028.

**திருமதி எஸ். சந்திரா**
87, ராதாநகர் மெயின் ரோடு,
குரோம்பேட்டை, சென்னை-600 044

**திருமதி ஏ. நாகலக்ஷ்மி**
2, திவான் இராமையங்கார் ரோடு,
பிளவர்ஸ் ரோடு, சென்னை-600 084.

**ஜெம் எக்விப்மெண்ட்ஸ்**
67, டாக்டர் ஜகன்னாதன் நகர்,
பீளமேடு, கோயம்புத்தூர்-14.
தொலைபேசி : 26932

**திரு. எஸ். குமரகுரு**
219, ராஜா தெரு, கோயம்புத்தூர்-1.
தொலைபேசி : 25759

**திருமதி கே. சகுந்தலா**
15, நாஞ்சாஹேப் தெரு,
பல்லடம்-638 664
கோயம்புத்தூர் மாவட்டம்

**முகுந்தராஜன் & கம்பெனி**
9-J/1, ஜவாஹர் தெரு,
எஸ்.எஸ். காலனி, மதுரை-16.

**திருமதி ராம்ஜோதி**
438, கே.கே. நகர், மதுரை-20,
தொலைபேசி : 41045

**திருமதி எஸ். செலின்**
6, செயிண்ட் ஜான் பிரிட்டோ ஷாப்பிங்
காம்ப்ளக்ஸ், சுப்ரமணியபுரம், திருச்சி-20.

**திரு. வி.பி.எஸ். சாந்தகுமார்**
124, பெரிய தெரு, கும்பகோணம்-1.
தொலைபேசி: 706, 598

**திரு. என். முருகன்**
அமுதா டூல்ஸ் சென்ட்டர்
68, மீனாட்சிபுரம், நாகர்கோயில்-1.
தொலைபேசி : 3883

**திரு. பி.ஆர்.கே. ஜெயராம ராஜா**
92-E, மதுரை ரோடு, தேனி-626 531.
தொலைபேசி : 2795

**திருமதி வசுமதி சுந்தர்ராஜன்**
திராம் நிவாஸ்
49A, டாக்டர் அன்சாரி தெரு,
பொள்ளாச்சி-1.

**திரு. கே.பி. குப்புஸ்வாமி**
மருதம் மெடிக்கல்ஸ்
1/7, மெயின் ரோடு,
சமத்தூர், பொள்ளாச்சி-642 123

**திருமதி முத்துமணி வரதராஜன்**
11-4-11-A, தெற்குத் தெரு,
வத்தலகுண்டு-624 202.

**வி.பி. ஏஜன்ஸி**
254, திருச்சி ரோடு, குகை,
சேலம்-6. தொலைபேசி : 64364

**திரு. கே.எஸ். சண்முகசுந்தரம்**
22, நெ. 2, புதிய திருச்சி கிளை ரோடு,
லைன்மேடு, சேலம்-6

**அசோக் ராயல் மார்க்கெட்டிங் சர்வீஸஸ்**
ஆர்.வி. காம்ப்ளக்ஸ், முதல் மாடி
7-B, டாக்டர் சுப்பராயன் ரோடு,
பாலஸ் தியேட்டர் எதிரில்
சேலம்-1. தொலைபேசி : 68343

**மிடில்மேன்**
தபால் பெட்டி எண் 255
சபாபதி பில்டிங், 1B-2, பி.என். ரோடு,
திருப்பூர்-638 602. தொலைபேசி: 20215

**திருமதி சி. ஜோசப் ரெட்டி**
26, ஏ.எல்.சி. காம்ப்ளக்ஸ்,
கடலூர்-607 001. தொலைபேசி : 1090

**திரு. கே. திருமங்கை**
சத்யம் ஏஜன்ஸீஸ்
14, எம்.ஜி. ரோடு,
பெருமாள் கோயில் தெரு ஜங்ஷன்
பாண்டிச்சேரி-1 தொலைபேசி: 3736

**திரு. ஆர். சந்திரசேகரன்**
16, மெயின் பஜார்,
பிளாக் 19, நெய்வேலி-607 803.
தொலைபேசி : 460, 260

**திருமதி பூமா ராகவன்**
39, ஸ்ரீனிவாசபுரம்,
பட்டுக்கோட்டை-614 601.

**திரு. ஜி.பி. நடராஜன்**
16, அண்ணாமலை முதலியார் தெரு,
கோபிச்செட்டிப்பாளையம்,
பெரியார் மாவட்டம்

**திருமதி விமலா ஆஞ்சநேயன்**
C/o கே. சுப்பிரமணியம் & கம்பெனி
ஆடிட்டர்
56, நேருஜி நகர், திண்டுக்கல்-624 007.
தொலைபேசி : 4118, 3838



**பே**சும்போது முகத்தில் கனல் வீசுகிறது. இந்த எளிய வீட்டில் இப்படியொரு அக்னிக்குஞ்சா என்றுதான் ஆச்சரியமாக இருக்கிறது. தென்னட்டி ஹேமலதா எனும் லதா — புகழ்பெற்ற முன்னணி ஆந்திர பெண் எழுத்தாளர்.

''தெலுங்கு இலக்கியம் இப்போது ஒண்ணும் சரிவர இல்லீங்க. எல்லாரையும் 'தெய்யம்' (பிசாசு) பிடித்து ஆட்டிக்கொண்டு இருக்கிறது. என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? பேய் பிசாசுக் கதைகளுக்குத்தான் ரொம்ப மவுசு இப்போது.

''கொஞ்ச நாளைக்கு முன்னாடி முக்கோணக் கதைகள் எழுதிக் கொண்டிருந்தார்கள். 'குடுகுடு குஞ்சம் குண்டே ராகம்' என்று (குண்டு சட்டியில் குதிரை ஓட்டுவது போல) திரும்பத் திரும்ப இரண்டு நாயகர்கள் ஒரு நாயகி. இல்லையென்றால் ஒரு நாயகன் இரண்டு நாயகிகள். இப்படியே எழுதிப் புகழ்பெற்றார்கள், சுலோசன ராணி, சீதா தேவி போன்றவர்கள் எல்லாம்.

''இவங்களால பெண்கள் ஆறடி ஹீரோ பற்றி கனவு காணுறாங்க. அம்மா, அப்பா ரொம்பக் கஷ்டப்பட்டுப் படிக்க வைப்பாங்க. இவங்களானா ஆறடி ஹீரோ குதிரையில வந்து தூக்கிக்கிட்டு போய்த் தன்னைக் கல்யாணம் செய்துக்குவான்னு கற்பனையில் ஆழ்ந்து போறாங்க. யதார்த்த நோக்குடன் வாழ்க்கையின் பிரச்னைகளைப் பார்க்கிறதில்லை.

''இந்த மாதிரி புண்ணிய காரியத்தை சினிமா, டி. வி. எல்லாமும் செய்கின்றன. புண்டு மீது ராஜபுண்டுதான்! (புண் மீதே ராஜபுண் வந்தாற் போல.)

''82லே எண்டமூரி வீரேந்திரநாத் வந்தார். ஒமன், எக்ஸார்ஸிஸ்ட் அப்போ ஆந்திராவில் வரலே. எனவே அந்த டைப்ல கதை பண்ணாரு. ஹிட்டாயிடுச்சு. இன்னி வரைக்கும் பேய், பிசாசுக் கதைகள்தான் ஆந்திரா முழுவதும்...''

''நீங்க என்ன மாதிரி கதைகளை எழுதுகிறீர்கள்?''

(ரொம்பக் கோபமாக): ''நான் இந்த மாதிரி சகதியை வாரித் தெளிக்கிறது இல்லே. பெண்களோட கஷ்டங்களை, அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளை எழுதுகிறேன். என் எழுத்துக்கள் கல்லூரிப் பெண்களுக்கு ரசனை கொடுப்பது இல்லே. ஆனால் படிப்பு முடிந்து வாழ்க்கையைப் புரிந்து கொள்ளும் போது நிச்சயமாக என்னை ஆதரிப்பாங்க.''

இதுவரை 105 நாவல்கள், 155 சிறுகதைகள், 600 ரேடியோ நாடகங்கள், கட்டுரைகள் எழுதியிருக்கிறார் லதா.

இவருடைய 'களிபடகலு நீடிபுட்கலு' எனும் முதல் நாவலே பெரிய புயலை ஏற்படுத்தியதாம். வழுக்கி விழுந்த ஆதரவற்ற பெண்களைப் பற்றிய இந்த நாவல் துர்க்காபாய் தேஷ்முக்கைப் பெரிதும் கவர்ந்ததாம்.

ஆந்திரா பல்கலைக்கழகம் இவருக்கு 'டாக்டர்' பட்டம் அளித்துக் கௌரவித்திருக்கிறது. ஆந்திரப் பிரதேச சாஹித்ய அகாடமியின் தேர்ந்தெடுக்கப்பட்ட உப தலைவர்.

யாரையும், எதையும் விமரிசிக்கத் தயங்காத இவர் பேச்சு முழுக்க ஒரே புயல்தான்!

# "பிசாசு பிடித்து ஆட்டுகிறது! -தெலுங்கு இலக்கியத்தை!"



ஸகல காரிய ஸித்தி அளிக்கும் தெய்வீகப் புத்தகங்களுக்கு முன்னேடியாகத் திகழும்

# லிப்கோ வழங்கும் புத்தகங்கள்

| | ரூ.காசு |
|---|---|
| 1. பத்திரங்களும் ரிஜிஸ்திரேஷனும் | 20.00 |
| 2. மஹாத்மாவின் மஹத்வம் | 3.00 |
| 3. வள்ளுவர் வாய்மொழி — திருக்குறள் மூலம் | 1.50 |
| 4. உங்கள் பிறந்த தேதியும் வாழ்க்கை ரகசியங்களும் | 3.50 |
| 5. உடல் மச்சங்களும் உங்கள் வாழ்க்கை ரகசியங்களும் | 2.50 |
| 6. ஆங்கில ஆசிரியன் | 19.00 |
| 7. தமிழ் — தமிழ் — ஆங்கில அகராதி | 30.00 |
| 8. குழந்தை வளர்ப்புக் கலை | 5.00 |
| 9. சமைப்பது எப்படி? | 6.00 |
| 10. இந்தி ஆசிரியன் | 9.00 |
| 11. ஸுந்தர காண்டம் — மூலம் ஸம்ஸ்க்ருதத்தில் | 14.00 |
| 12. ஸுந்தர காண்டம் — மூலம் தமிழில் | 11.00 |
| 13. ஸுந்தர காண்டம் — ஸ்ரீ C. R. S. தமிழ் வசனம் | 24.00 |
| 14. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம் — ஸ்ரீ C. R. S. தமிழ் வசனம் — பால காண்டம் முதல் யுத்த காண்டம் முடிய 2 பாகங்களில் 1800 பக்கங்கள் | 125.00 |
| 15. ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் — ஸ்தோத்ரமாலையுடன் | 10.50 |
| 16. ஸ்தோத்ரமாலை | 4.00 |
| 17. கம்ப ராமாயணம் — வசனம் | 11.00 |
| 18. ரகுவம்ச மஹாகாவ்யம் — 1 — 19 ஸர்க்கங்கள் — உரையுடன் | 55.00 |
| 19. குமாரஸம்பவம் — 1 — 8 ஸர்க்கங்கள் — உரையுடன் | 25.00 |
| 20. ஸ்ரீமத் பகவத் கீதை — மூலம் தமிழில் உரையுடன் | 11.00 |
| 21. மாங்கல்ய ஸ்தவம் | 1.50 |
| 22. ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ஹ்ருதயம் | 1.50 |
| 23. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் — மூலம் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் உரையுடன் | 10.00 |
| 24. கௌரி கல்யாணம் வைபோக்மே | 8.00 |
| 25. பன்னிரு ஆழ்வார்கள் | 2.00 |
| 26. நூற்றெட்டு ஸ்ரீவைஷ்ணவ திவ்ய தேச வைபவம் | 6.00 |
| 27. ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் — உரையுடன் | 48.00 |
| 28. ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள் — மூலம் — ஸம்ஸ்க்ருதத்தில் | 12.00 |
| 29. ,, மூலம் — தமிழில் | 5.20 |
| 30. ,, உரையுடன் | 60.00 |
| 31. ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகைகளும் ஸகல காரிய ஸித்தியும் | 3.00 |
| 32. பஞ்ச ஸூக்தங்கள் | 1.00 |
| 33. ஸ்ரீ குருவாயூர் அப்பன் ஸுப்ரபாதம் | 0.60 |
| 34. ஸ்ரீ முகுந்தமாலை | 1.50 |
| 35. பஜகோவிந்தம் | 1.50 |
| 36. ஸ்ரீ மஹா பக்த விஜயம் | 15.00 |
| 37. அபிராமி அந்தாதி — உரையுடன் | 2.00 |
| 38. ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ — மூலமும் உரையும் | 4.00 |
| 39. ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும் | 4.50 |
| 40. பெரிய புராணம் — சுருக்கம் | 2.00 |
| 41. திருவிளையாடற் புராணம் — சுருக்கம் | 2.00 |
| 42. ஸகல காரிய ஸித்தியும் சைவத் திருமுறைகளும் | 7.50 |
| 43. ஸ்ரீ ஸத்யநாராயண வ்ரதம் | 1.50 |
| 44. ஸ்ரீ லக்ஷ்மீ குபேர பூஜாக்ரமம் | 0.90 |
| 45. நவக்ரஹ க்ஷேத்ர புராணம் | 7.20 |
| 46. திருப்புகழ் மஞ்சரி | 2.50 |
| 47. ஆறுமுகனுக்குகந்த ஆறுபடை வீடுகள் | 7.50 |
| 48. இயற்கை தரும் இன்மருந்துகள் | 12.00 |
| 49. குழந்தைக்கு வீட்டு வைத்தியம் | 1.00 |
| 40. விரத பூஜா விதானம் | 9.00 |
| 51. குடும்ப ஜோதிடம் | 9.00 |
| 52. விவாஹ மந்த்ரார்த்த போதினி | 2.50 |
| 53. ஸ்ரீ த்யாகராஜ க்ருதி ராமாயணம் | 3.00 |
| 54. ஸ்ரீ சனிக்ரஹ சாந்தி பூஜா விதானம் | 2.50 |
| 55. Tamil Nadu General Sales Tax (English) | 35.00 |
| 56. Central Sales Tax (English) | 20.00 |

**விசேஷச் சலுகை:**

எல்லாவற்றிற்கும் தபால் செலவு பிரத்யேகம். ஆனால் 30.4.1986க்குள் இவ்விளம்பரத்தைக் குறிப்பிட்டு, ஒரே சமயத்தில் ரூ.50க்குக் குறையாமல் எமக்கு ஆர்டர் செய்தால், எங்கள் செலவிலேயே (இந்தியாவிற்குள்) புத்தகங்களை அனுப்பி வைக்கிறோம். பூராவும் முன் பணம் (மணியார்டர் அல்லது டிராப்ட் மட்டும்) அனுப்புக. V.P.P. இயலாது.

பதிப்பகத்தார்:



## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

43, ரங்கநாதன் தெரு, தபால் பை 1028
தியாகராயநகர், சென்னை — 600 017

போன்: 441538

58 ஆண்டுகளாகப் புத்தக உலகில் பெரும் புகழ்!

சந்திப்பு:

நாதெள்ள பாஸ்கர ராவ்

# "ஒரு சர்வாதிகாரி போல் என்.டி.ஆர். செயல்பட்டார்!"

ஹைதராபாத்தில் நாகேஸ்வர ராவின் அன்னபூர்ணா ஸ்டுடியோவைத் தாண்டிப் பணக்காரர்கள் வசிக்கிற பகுதியில் வீடு. முதல் கேட்டைத் தாண்டி, உள்ளே போனால் செக்யூரிட்டி. மறுபடி ஒரு கேட்.

மாலை ஆறு மணி. பெரிய பச்சைப் புல் வெளி. ஒரு பிரம்பு நாற்காலியில் சாய்ந்தபடி பாஸ்கர் ராவ். செக்கச் சிவந்த நிறம். தெலுங்கு மணம் கமழும் வேஷ்டி, ஜிப்பா. சுற்றிலும் சிலர் நாற்காலிகளில். கைகட்டிய படி ஒரிரு வேலைக்காரர்கள். பக்கத்தில் இரண்டு பூதாகாரமான நாய்கள்.

தெலுங்கு தேசம் உருவான கதையைக் கேட்டோம். சொன்னார்: "நானே சொந்தமாய் ஒரு கட்சி ஆரம்பிப்பது என்று முடிவு செய்தேன். வெளியிலே சொல்லவில்லை. மந்திரிசபையிலிருந்து விலகினேன். அந்தச் சமயத்தில்தான் என். டி. ஆர். எனக்குப் போன் பண்ணினார். "பிரதர்! நான் அரசியலுக்கு வந்து, மக்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும். என்ன பண்ணலாம்?" என்று கேட்டார். நான் இவரது பாப்புலாரிட்டியை புதுக்கட்சிக்குப் பயன்படுத்திக் கொள்வது என்று முடிவு செய்து, திட்டத்தை விளக்கினேன். உடனே அவருக்கு உற்சாகம் கிளம்பியது. அவுட் டோர் ஷூட்டிங்கிற்காக ஊட்டி போனவர் எத்தனை தடவை போன் பண்ணினார், தெரியுமா? ஊர் திரும்பியதும் நேரே விமான நிலையத்திலிருந்து என் வீட்டுக்குத்தான் வந்தார். என். டி. ஆரின் குடும்பத்தினர் புதுக்கட்சி ஆரம்பிக்க முழு ஆதரவு தரவில்லை.

"1982 மார்ச் 29ம் தேதி. பகல் இரண்டரை மணி. நான் தலைவர் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தேன்., அதுவரை கட்சிக்குப் பெயர் வைக்காததால், பலரும் சஜஸ்ட் பண்ணிய பெயர்களை அவரிடம் கொடுத்தேன். எல்லாவற்றையும் தூக்கிப் போட்டுவிட்டு, 'தெலுங்கு தேசம்' என்று பெயரிட்டார். எல்லாரும் சிரித்துவிட்டார்கள். ஆனாலும் அதுவே கட்சிப் பெயராய் ஏற்றுக் கொள்ளப்பட்டது. புதுக் கட்சிக்கு ஈநாடு தினசரி ரொம்ப பப்ளிசிடி தந்தது.

"கட்சித் தலைமை அவர் கைக்கு வந்தது தான் தாமதம். உடனே சர்வாதிகாரி ஆகிவிட்டார் என். டி. ராமராவ். தம் இஷ்டப்படி செயல்பட ஆரம்பித்துவிட்டார்.

"கொஞ்ச நாட்களில் தம் மருமகனைக் கட்சியில் திணித்தார். நான் எதிர்த்ததைப் பொருட்படுத்தவில்லை. நாளடைவில் நான் தான் கட்சியின் முக்கியமானவன்; ஆரம்பித்தவன் என்பதையே முழுமையாய் மறந்துவிட்டு, என்னை ஒரு வேண்டாதவன்போலப் பார்க்க ஆரம்பித்தார்.

"தேர்தல் வந்தது. இரண்டு பேரும்தான் சுற்றுப்பயணம் செய்தோம். மக்களின் அமோக ஆதரவால் பதவியைப் பிடித்தோம். ஆனால், என். டி. ஆரோ, கட்சியைத் தம் சொந்தச் சொத்து போல நினைத்துச் செயல்பட்டார். அவர் எடுக்கிற தப்பான முடிவுகளை நான் எதிர்த்தபோது, இந்த மனிதன் கட்சியில் இருப்பது தமக்கு ஆபத்து என்று நினைக்க ஆரம்பித்தார்.

"ஆபரேஷன் என்று சொல்லிவிட்டு, சும்மாவானும் அமெரிக்கா போனார். ஆபரேஷனும் பண்ணிக் கொள்ளவில்லை; ஒன்றும் பண்ணிக் கொள்ளவில்லை. அவர் அமெரிக்கா போயிருந்தபோது, என். டி. ஆரின் மீது அதிருப்தி கொண்ட எம். எல். ஏக்கள் பலர் என்னிடம் வந்து சொன்னார்



கள். என். டி. ஆருக்குத் தாங்கள் தந்து வரும் ஆதரவை வாபஸ் பெற்றுக்கொள்ளப் போவதாய்ச் சொன்னார்கள். நானும் அதன் தேவையை உணர்ந்தேன். தெலுங்கு தேச கட்சியை விட்டு வெளியேறி, புது மந்திரி சபை அமைத்தேன். முதல்வரானேன்'' என்றார்.

''எத்தனை நாள் முதல்வராக இருக்கப் போகிறோம் என்று தெரியாத நிலையில், கன்னாபின்னாவென உத்திரவுகளைப் பிறப்பித்தீர்களே! இது ஏன்?''

''முதல்வர் என்ற முறையில் என் கடமைகளைச் செய்தேன். அவ்வளவுதான்'' என்றார் ரொம்ப அமைதியாக.

'''தெலுங்கு தேசம்' என்று சொன்னபோது எல்லாரும் சிரித்ததாய்ச் சொன்னீர்கள். பின் உங்கள் கட்சிக்கு ஏன் ஜனநாயக தெலுங்கு தேசம் என்று பெயரிட்டீர்கள்?''

''தெலுங்கு தேசம் என் மூளையில் உதித்த கட்சி. பெயர் சூட்டினது என். டி. ஆர். அந்தக் கட்சியில் ஜனநாயகம் இல்லை; ஆனால் என் கட்சியில் இருக்கிறது; எனவேதான் ஜனநாயக தெலுங்கு தேசம் என்று பெயர்!''

தொடர்ந்து, எம். எல். ஏக்களை கவர்னர் மாளிகைக்கு அழைத்துச் சென்றது, இவர் முதல்வரானது, என். டி. ஆர். எம். எல். ஏக்களைத் தம் ராமகிருஷ்ணா ஸ்டுடியோவிலும், பெங்களூரிலும் கொண்டு போய் வைத்துக் கொண்டது போன்ற நமக்குத் தெரிந்த நாடகங்களை அவருடைய கண்ணோட்டத்தில் விளக்கினார்.

''மக்கள் தேர்தலில் உங்களை முழுமையாய் ஒதுக்கி விட்டார்களே! இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?''

''மக்கள் என். டி. ஆர். மாயையிலிருந்து விடுபடும் நாள் வெகுதூரத்தில் இல்லை. நான் ஆந்திரா முழுக்கச் சுற்றுப்பயணம் செய்து, அவரது வேஷத்தைக் கலைத்து வருகிறேன். மக்கள் கொஞ்சம் கொஞ்சமாய் உணர ஆரம்பித்து இருக்கிறார்கள்.''

விடைபெறும்போது, என். டி. ஆரை நாலாந்தர வார்த்தைகளால் திட்டிய பாஸ்கர ராவுக்கு என். டி. ஆர். மீதும் மக்களிடையே அவருக்குள்ள அபரிமிதமான செல்வாக்கு மீதும் எத்தனை வெறுப்பு, எரிச்சல், பொறாமை இருக்கிறது என்பதை உணர முடிந்தது, நிதர்சனமாய்.



GOLD AND
RADHAKRISHNA
YOUR PARTNERS
FOR PROGRESS







# Radha Krishna Jewellers

DIAMOND MERCHANTS MANUFACTURERS &
EXPORTERS OF GOLD JEWELLERY

POST BOX No: 2935, 13, NORTH MADA STREET,
MYLAPORE, MADRAS - 600 004, INDIA.
TEL: 73837 TLX: 41-6836 JWEL IN
CABLE: RAKEXPO

MAYUR IMPRESS 9/86.

னது கூந்தலை சுத்தம் செய்து கண்டிஷன் செய்ய...
னது மேனி நிறம் காத்திட... அங்கமெங்கும் பொங்கும்
ழில் பேணிட... எனதருமை க்ரௌனிங் க்ளோரி!

Dimple Kapadia







கூந்தலுக்கும், மேனி எழிலுக்கும், நிறத்திற்கும்
உதவும் ஒரே அழகு சாதன சோப்!

# ஆந்திர (சமையல்) ஸ்பெஷல்





### யுகாதி பண்டிகை!

யுகாதி ஆந்திராவின் புது வருடப் பிறப்பு. இதை 'ச்சேது பண்டிகை' என்கிறார்கள் (கசப்புப் பண்டிகையாம்). இது என்ன வேடிக்கை! வருஷப் பிறப்பை இனிப்பாகக் கொண்டாடாமல், கசப்புப் பண்டிகையாகவா கொண்டாடுவார்கள்? ஏன் என்பதற்குக் காரணம் அன்றைக்குச் சாப்பிடும் முதல் பண்டத்தைப் பார்த்தால் புரியும்!

வேப்பம்பூ, மாங்காய், உப்பு, மிளகாய், புதுப் புளி, வெல்லம் என எல்லாச் சுவைகளையும் போட்டுச் செய்யும் ஸ்பெஷல் பச்சடி அன்று முக்கியமானது. இதைச் சாப்பிட்ட பின்தான் காப்பி கூட என்பது சம்பிரதாயம். வாழ்க்கை என்பது இனிப்பானதுமட்டுமல்ல. கசப்பு, புளிப்பு, துவர்ப்பு என அனைத்தும் சேர்ந்ததுதான். இன்பமும் துன்பமும் சேர்ந்ததுதான் இல்லறம் என்பதை மிக அருமையாகப் புது வருடப் பிறப்பன்று இப்படி உணர்த்துகிறார்கள். தமிழ் நாட்டிலும் இந்த வழக்கம் உண்டே..!

### புளியங்காய்த் தொக்கு

இது புதுப்புளி வரும் நேரம். லேத சிந்த காயை (இளம் புளி) நார் எடுத்து, அலம்பி, உப்பு, மஞ்சள் போட்டு ஒன்றிரண்டாக இடித்து மூன்று நாட்கள் ஊற விடவேண்டும். பின் அதிலிருந்து கொட்டை, நார்களை எடுக்க வேண்டும். அப்புறம் அவ்வப்போது தேவையான அளவை மொத்தையாக எடுத்துக் கொள்ள வேண்டும். கணிசமான அளவு எண்ணெயில் உளுத்தம்பருப்பு, வெந்தயம், கடுகு, பெருங்காயம், மிளகாய் வற்றல் வறுத்து, முதலில் மிளகாயை இடித்து, பின் புளியையும் போட்டு இடிக்க வேண்டும். கடைசியில் மற்ற தாளிதங்களையும் போட்டு இடிக்கலாம்.

தண்ணீர் கலக்காமல் இருந்தால் 'புளியங்காய்த்தொக்கு' கெடாமல் இருக்கும். ஒருகால் கோடை வெயிலில் வறண்டு காய்ந்து விட்டால் அவ்வப்போது கொஞ்சம் தண்ணீர் தெளித்துப் பிசைந்து செலவழிக்கலாம். 'சிந்தகாய் தொக்கு' — சிந்தை கவரும் தொக்காக சாதத்துடன் பிசைந்து சாப்பிட, சப்பாத்தி, பிரெட், தோசை இவற்றிற்கும் பயன்படும்.

### ஆவக்காய்

சுமார் 50 காய்க்கு, 1¼ கிலோ மிளகாய்ப் பொடி; 2½ கிலோ உப்பு; ¼ கிலோ மஞ்சள் பொடி; 2 — 3 கிலோ எண்ணெய்; கடுகுப் பொடி 2½ கிலோ; வெந்தயம் 200 கிராம், கொத்துக் கடலை ½ கிலோ; தேவையானால் உரித்த பூண்டுப் பல் 200 கிராம். (இஞ்சி போடுவதானால் இஞ்சி, பூண்டை அரைத்துக் கொள்ளலாம்.)

மாங்காயை — புளிப்பும் கொஞ்சம் நாரும் கூடியது — அலம்பி கொட்டையுடன் துண்டுகளாகப் பிளந்து கொள்ள வேண்டும். ஆவக்காய் மாங்காயே தனி இனம். கடைக்குருகிலேயே உடைப்பவனும் கூட இருப்பான். உடைத்த துண்டுகளை ஈரத் துணியால் துடைத்து சுத்தம் செய்ய வேண்டும். ஒரு கை மாங்காய், உப்புப் பொடி, கொஞ்சம் கொத்துக்கடலை, மிளகாய்ப்பொடி, கடுகுப் பொடி எடுத்து ஒரு பேசினில் போட்டுக் கொண்டு ஒரு கிண்ணம் எண்ணெய் ஊற்றிப் பிசிறி பெரிய ஜாடியில் இடலாம். இப்படி மாங்காய்த் துண்டுகள் பூராவையும் கலந்து இட வேண்டும். மிகுந்த எண்ணெய் பொடிகளையும் கடைசியில் கொட்டிக் கலந்துவிடலாம். அவ்வப்போது கிளறி விட வேண்டும். ஜாடி வாயை சுத்தமாகத் துணியால் கட்டி வைக்கலாம். கொஞ்சம் கொஞ்சமாக வெளியில் எடுத்துப் பயன்படுத்தலாம்.

### கோங்க்கூரா துவையல்

இதை 'புளிச்ச இலைக் கீரை' என்று தமிழில் சொல்வார்கள். இதை முதலில் நன்கு ஆய்ந்து வைத்துக் கொள்ளவும்.

கோங்கூரா ஒரு கட்டு, மிளகாய் ஒரு கைப்பிடி, புளி எலுமிச்சை அளவு, உப்பு தேவையான அளவு, இரண்டு ஸ்பூன் உளுத்தம்பருப்பு, கடுகு, பெருங்காயம் கொஞ்சம்.

வாணலியில் எண்ணெயை விட்டு கடுகு வெடித்ததும் உளுத்தம்பருப்பு, மிளகாய் போட்டு வறுத்து எடுத்துத் தனியாக வைத்துக்கொள்ளவும். பின்னர் அதே வாணலியில் கோங்க்கூராவைப் போட்டு எண்ணெய் விட்டு நன்கு சுருள வதக்கவும். வெண்ணெய் போல வதங்கிவிடும்.

பிறகு முதலில் மிளகாய், புளி, உப்பு, பருப்பு எல்லாவற்றையும் அரைத்துக் கொண்டு கோங்க்கூராவையும், போட்டு மசிய அரைத்துக் கொள்ளவும். சுவையோ சுவை. தண்ணீரே விடாமல் இடித்து வைத்துக் கொண்டால் ஒரு மாதத்திற்குக் கெடாது.

— ஸ்ரீப்ரியா.











* அர. மணிவண்ணன், சென்னை—16

? 'தமிழக அரசு பட்ஜெட் திருப்பதி லட்டு' என்று அ.தி.மு.க. உறுப்பினர் கரூர் வடிவேலு சட்டசபையில் வர்ணித்துள்ளாரே. லட்டு ருசிக்குத்தானே உதவும்; பசி தீரப் பயன்படுமா?

! அருமையான விமர்சனம்! ஆளுங் கட்சியில் இருந்தாலும் சிறிதும் பாரபட்சமில்லாமல் பட்ஜெட்டை விமர்சனம் செய்த கரூர் வடிவேலுவின் துணிச்சலுக்கு ஒரு சபாஷ்!

* ரம்யா, கோவை—16 *

? பாமரனும் ஏமாற்றிவிட்டான். படித்தவனும் ஏமாற்றிவிட்டானே?

! பிக்பாக்கெட்காரர்களுக்குப் பறிகொடுக்காமல் சம்பளப் பணத்தைப் பத்திரமாய்க்கொண்டு போய் வீடு சேர்க்கும்போது, நாம் பிக்பாக்கெட்காரர்களை ஏமாற்றி விட்டதாகவா அர்த்தம்? அதுபோல அவர்கள் ஏமாற்றமடைந்திருக்கலாம். ஆனால் இவர்கள் ஏமாற்றியதாகக் கருத முடியாது.

* வனிதா நட்ராஜ், காரைக்கால்

? ஜனதாவால் ஹெக்டேக்குப் புகழா? ஹெக்டேயால் ஜனதாவுக்குப் புகழா?

! சந்தேகமென்ன? ஹெக்டே போன்று விரல் விட்டு எண்ணக் கூடிய அளவுக்காவது சிலர் இருப்பதால்தான் ஜனதா உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

* பா. நாராயணன், சென்னை—40

? இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கிப் பீடு நடை போடத் துவங்கியுள்ள இந்திய மக்கள் இன்னும் வரதட்சணைக் கொடுமைகளிலிருந்து விடுபடாதது எதைக் காட்டு

## நீங்கள் கேட்டவை

— தராசு



றது?

! விஞ்ஞான வளர்ச்சி மட்டுமே ஒரு தேசத்தின் வளர்ச்சியாகிவிட முடியாது. மனவளர்ச்சி மிக மிக முக்கியம். அது இல்லாமல் முப்பதாம் நூற்றாண்டுக்குச் சென்றாலும் இது மாதிரியான அநாகரிகங்களும், கொடுமைகளும் தொடர்ந்து கொண்டே தான் இருக்கும்.

* கே.வி.எஸ். மணியன், குடியாத்தம்

? அமெரிக்கா, லிபியா மேல் போர் தொடுப்பது பற்றி?

! கட்டாஃபி அமெரிக்காவைச் சீண்டியது கர்வம். அமெரிக்கா லிபியா மீது போர் தொடுப்பது ஆணவம்.

* க. தியாகராசன், நெய்வேலி

? தமிழ்நாட்டிலுள்ள பல நீதி மன்றங்களில் நீதிபதிகள் நியமிக்கப்படாமல் இருப்பது பற்றி?

! எம்.ஜி. ஆர். அரசுக்கு நீதியின் மேல் இருக்கும் அளப்பரிய காதலை உணர்த்துகிறது.

* சைதை. வி. முரளி, சென்னை—15.

? சென்னையிலிருந்து கன்னியாகுமரிக்கு விடுவதாக இருந்த 'பறக்கும் படகுத் திட்டம்' என்னவாயிற்று?

! பத்தோடு பதினொன்று; அத்தோடு இது ஒன்று. காற்றோடு பறந்து போயிற்று!

* அ. செல்வராஜ், கரூர்

? மாநகராட்சித் தேர்தல் நடந்து மதுரை மேயராக நெடுமாறன் தேர்ந்தெடுக்கப்பட்டது போல் ஒரு கனவு. இது பலிக்குமா?

! நீங்கள் நெடுமாறன் ஆதரவாளரா? அப்படியானால் இன்னும் கொஞ்சம் பெரிய பதவியாகக் கனவு கண்டிருக்கக் கூடாதா. என்ன கஞ்சத்தனம்?

* கா. சேட்டுமுகம்மது, விருத்தாசலம்—1

? ஊழலுக்குப் பேர்போன அமைச்சர் யார்?

! எரிகிற கொள்ளியில் எந்தக் கொள்ளி நல்ல கொள்ளி?

* மு. செந்தில்வாசன், திருமங்கலம்

? எம்.ஜி.ஆர். யாரை நம்புகிறார்?

! அவர் யாரையும் ஒருபோதும் நம்பியதே இல்லை; நம்புவதும் இல்லை. அதனால் வருகிற பிரச்னைகள்தான் இத்தனையும்!

* க. சந்திரமௌலி, சென்னை—38

? ஒரு கல்லூரி ஆண்டு விழாவுக்குப் பாக்யராஜை சிறப்பு விருந்ினராக அழைத்துச் சென்று மேடையேற்றி, மாணவர்கள் பலரும் ஒரு பக்கமாக நின்று கொண்டு, 'கலைஞர் வாழ்க!' என்று கூறி உதயசூரியன் சின்னத்தைக் காட்டிக் கேலி செய்தது குறித்து என்ன சார் நினைக்கிறீர்கள்?

! நீங்கள் கூறுவது உண்மையானால், மாணவர்களின் இந்த அநாகரிகத்துக்காக அவர்களின் ஆசிரியர்களும், பெற்றோர்களும் ஏன் மூத்த தலைமுறையினர் அத்தனை பேரும் வெட்கப்பட வேண்டிய விஷயம். மாணவர்களிடையே பரவியிருக்கும் இது போன்ற அநாகரிகங்களை அகற்றுவதுதான் நமது முதல் கடமையாக இருக்க வேண்டும்.

# பாக்யராஜுடன் காயா? பழமா?

* செல்வகுமார், ஆழியார்நகர்

? டெலிவிஷனில் கருணாநிதி பேட்டி ஒளி பரப்பாததற்கு நடந்த ஆர்ப்பாட்டங்களெல்லாம் தேவைதானா?

! 'ஒளிபரப்பப்படாததற்குக்காரணம் டி.வி. நிலையம் அல்ல; நிகழ்ச்சி தயாரிப்பாளரைத்தான் அது பற்றி கேட்க வேண்டும்' என்று நிலைய டைரக்டர் அறிவித்துவிட்ட போதிலும் யார் கண்டது. காலதாமதமாக வேனும், வெட்டப்பட்ட நிலையிலேனும் அந்தப் பேட்டி ஒளிபரப்பப்பட்டதற்கு தி.மு.க.வின் ஆர்ப்பாட்டங்கள் உதவியிருக்கலாம்!

* ஆர். சுரேஷ், ஈரோடு—2

? அந்த 77 நாட்கள் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

! அந்த எழுபத்தேழு நாட்கள் மட்டும் தானா? முந்நூற்று அறுபத்தைந்து நாட்களும் அப்படித்தான்!

* ஜி. இளங்கோவன், விழுப்புரம்

? உண்மையைச் சொல்லும்! தற்சமயம் பாக்யராஜுடன் காயா, பழமா?

! நான் எப்போதுமே மணம் பரப்பும் மலர். சிலருக்கு ஜலதோஷம் பிடித்துக்கொள்ளும்போது அந்த மணத்தை அனுபவிக்க முடியாமல் போய்விடுகிறது. அவ்வளவுதான்!

---

* ரூ 10 பரிசு பெறுபவர்:

ரம்யா,
52, அம்மன் கோவில் வீதி,
ஒண்டிப்புதூர்,
கோவை—641 016.

புத்தாண்டு வாழ்த்துக்கள்

# சுவாதி பைனான்சியர்ஸ்

உங்களது டெபாசிட்டுகளுக்கு மற்றும் ஓர் பாதுகாப்பு
உங்களது பிக்செட் டெபாசிட்டுகளுக்கு அதிக வட்டி
விகிதத்துடன் பாங்க் கியாரண்டி வழங்குகிறது.

வட்டி விகிதம்

# 24%

| 5 Years | 7 Years | 10 Years |
|---|---|---|
| 18% | 21% | 24% |

மாதந்தோறும் அளிக்கப்படும்.

## பிக்ஸட் டெபாசிட் திட்டம்

| 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|
| 15% | 16½% | 17½% | 19% | 22% |

வழக்கமான வட்டி விகிதங்களின் மேல் **3%**
கூடுதல் வட்டி அளிக்கப்படுகிறது.



ரூ. 10,000/- டெபாசிட் செய்பவர்களுக்கு (2 வருடங்கள்)
பண்டிகைக்கால சிறப்பு பரிசாக 1/4 சவரன் தங்க
மோதிரம் அன்பளிப்பாக வழங்கப்படும்.

**காமதேனு டெபாசிட் திட்டம்** உங்களது டெபாசிட் இத்திட்டத்தின் மூலம் நான்கே வருடங்களில் இரு மடங்காகிறது. அதாவது ரூ. 5,000/- ரூ. 10,000/- ஆகிறது.
சிறப்புப் பரிசு : ஒவ்வொரு ரூ. 5,000/-ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு (குறைந்தது 2 வருடங்கள்) சிறப்பு பரிசாக வெள்ளி குத்து விளக்கு அன்பளிப்பாக வழங்கப்படும்.

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி,




**சுவாதி பைனான்சியர்ஸ்**
பதிவு அலுவலகம்: 75, ரங்கநாதன் தெரு
(முதல் மாடி—உஸ்மான் ரோடு) எம்.எஸ். மார்க்கட்,
தி. நகர், சென்னை-17. போன்: PP 443827

சுவாதி — உங்களது வெற்றிக்கு துணைவன்



# விடுதலைப் போரில் ஆந்திராவின் பங்கு

**டி. ஆஞ்சநேயலு**



* பிரகாசம்



பட்டாபி சீதாராமையா

சுதந்திரப் போராட்டம் அல்லது சுயாட்சிப் போராட்டம் என்று சொன்னாலே காங்கிரஸ்தான் என்று எண்ணுமளவுக்குத் தேசம் முழுதும் அதன் புகழ் பரவியிருந்தது. ஆரம்பத்தில் பூரண சுயராஜ்யம் கோரப்பட வில்லை. பிரிட்டிஷ் அரசருக்கு விசுவாசமாக இருந்தபடியே நிர்வாகத்தில் அதிகமான அதிகாரங்கள் மட்டும்தான் கோரப்பட்டது. அந்தக் கால கட்டத்தில் கண்டுகூரி வீரேச லிங்கம் பந்துலு என்பவர் பள்ளிக்கூடத்தில் தெலுங்குப் பண்டிதராக அரசுப் பணி புரிந்து வந்தார். பொது வாழ்வில் தூய்மையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் பரவ அவர் ஆற்றிய தொண்டுக்கு நிகரில்லை. ராஜமுந்திரியில் பிறந்து சென்னையில் கால மான இவரது சமுதாயத் தொண்டை இரு நகரங்களுமே நிறையப் பெற்றன. ரானடே—கோகலே ஆகியோரின் சிந்தனைகளால் ஈர்க் கப்பட்டவர் இவர்.

அன்றைய தென்னகத்தின் அரசியல் தலைநகரமாகவும், நிர்வாகத் தலைநகரமாக வும் விளங்கியது சென்னைதான். எனவே பல பிரபலமான ஆந்திரர்கள் இங்குதான் வாழ்ந்தார்கள், செயலாற்றினார்கள். தென் னிந்தியர் ஒருவர் முதன் முதலாகக் காங்கிரஸ் அக்கிராசனரானது 1891ல் நாகபுரி காங்கிரஸ் மாநாட்டில். அவர் ஓர் ஆந்திரர். பெயர் அனந்த சாருலு. இவர் ஒரு வழக்கறி ஞர். இலக்கிய ஆற்றலும் பெற்றவர். ஒரு பத்திரிகை நடத்தி வந்ததுடன் 'வைஜயந்தி விலாசம்' என்ற தெலுங்குக் காவியத்தை எழுதினார். 'காங்கிரஸ் மாநாடு ஒன்றினை



* பொட்டி ஸ்ரீராமுலு



* என். ஜி. ரங்கா



* அனந்தாசார்லு



* புலுசு சாம்பமூர்த்தி



* வீரேச லிங்கம் பந்துலு

லண்டனில்நடத்தவேண்டும்!' என்ற இவரது கருத்து நிறைவேருமல் போயிற்று என்ருலும் நிறைவேற்ற முயற்சிகள் எடுக்கப்பட்டிருந்தால் அது எப்படி ஒரு கலக்குக் கலக்கியிருக்கும் என்பதை நாம் கற்பனை செய்து பார்க்க முடியும்தானே!

என். சுப்பராவ் பந்துலு காங்கிரஸின் காரியதரிசியாகத் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் (1914—1917) தேர்ந்தெடுக்கப்பட்டார். ராஜமுந்திரியிலிருந்து வந்த இந்த வழக்கறிஞர் அரசாங்கப் பதவி எதையும் ஏற்கவில்லை என்பதோடு காங்கிரஸுக்காக நாட்டைத் தமது சொந்தச் செலவில் சுற்றி வந்தார்!

1920ல் காந்திய சகாப்தமும் சட்ட மறுப்பு இயக்கமும் தோன்ற, நாட்டின் பிற பகுதிகளில்போலவே ஆந்திராவிலும் ஏராளமானவர் சுதந்திரப் போராட்டத்தில் குதித்தனர். அந்தக் காலகட்டத்தில் மகாத்மாவின் நம்பிக்கைக்குரிய ஆரம்ப காலத் தோழராக விளங்கியவர் தேச பக்தர் கோண்ட வெங்கடப்பையா பந்துலு. குண்டூரைச் சேர்ந்த இவர் காங்கிரஸின் ஒரு விசேஷ மாநாட்டுக்குத் தலைமை தாங்கினர்.

சுதந்திரத்துக்குப் பின் சில காலம் சென்று மொழி வாரி அடிப்படையில் மாநிலங்கள் தோன்றின. ஆனால் அதற்கு வெகு காலம் முன்பே 1917லேயே காங்கிரஸ் கட்சி மொழி வாரி அடிப்படையில் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு மொழிக்கும் நிர்வாக அமைப்புக்கள் உருவாயின. இதன் காரணகர்த்தா டாக்டர் பட்டாபி சீதாராமய்யா. மசூலிப்பட்டினத்தில் வைத்தியராகப் பணிபுரிந்து காங்கிரஸில் சேர்ந்த இவர், காங்கிரஸின் தோற்றம் வளர்ச்சி பற்றி ஆராய்ந்து, அதன் சரித்திரத்தை விரிவாக எழுதிய முதல் நபர். 1948 ஜெய்பூர் காங்கிரஸில் அவர்தான் அக்கிராசனர். அற்புதமாய்ப் பேசுவார், எழுதுவார். 'ஜன்ம பூமி' என்ற தலைப்பில் ஆங்கில சஞ்சிகை நடத்தி வந்தார். காந்திஜியின் கருத்துக்களை இவர் வியாக்கியானம் செய்கிற நேர்த்தியைப் பார்த்து காந்திஜியே வியந்து, "நான் சூத்திரங்களை உருவாக்கும் பனியா; பட்டாபி விரிவுரைகள் வழங்கும் பிராமணன்" என்ருர்.

ஸைமன் கமிஷன் பகிஷ்காரத்தின்போது (1927—28) பிரபலமடைந்தவர் பிரகாசம். வீரத்துக்காகவும் தியாகத்துக்காகவும் பின்னல் 'ஆந்திர கேசரி' என்று அழைக்கப்பட்ட இவர் ஒரு வழக்கறிஞர். ஸி. ஆர். தாஸ் போல நிறைய வருவாய் பெற்று வந்தவர். அதைத் துறந்து தேசியப் போராட்டத்தில் குதித்தார். 'சுயராஜ்யா' என்ற பத்திரிகையை நடத்தினர். சென்னையில் அனைவர் கண்களையும் உறுத்தி வந்த நீலன் (நீல்) சிலையை அருங்காட்சியகத்துக்கு அப்புறப்படுத்துவதில் சிறப்பான பங்கு வகித்தார். 1937 ராஜாஜி மந்திரி சபையில் முக்கிய இடம் பெற்ருர். 46—47ல் சென்னை மாகாணத்தின் முதல் அமைச்சராக விளங்கினர். 1953ல் ஆந்திர மாநிலம் உருவானதும் அம்மாநிலத்தின் முதல் முதலமைச்சர் ஆனர்.

அந்நிய ஆட்சியாளருக்குத் தலைவலியாக

தமிழ்ப் புத்தாண்டு முதல்

# பாண்டி பஜாரில் மாயா பஜார்

## ஹனீபா டெக்ஸ்டைல்ஸ்

மாயா பஜாரில் கிடைப்பது போல் பாண்டி பஜாரில் உள்ள ஹனீபா டெக்ஸ்டைல்ஸில் தமிழ்ப் புத்தாண்டு முதல், இந்திய திரு-நாட்டில் உள்ள எல்லா மில்களில் தயா-ராகும் வண்ண வண்ண துணிகள், அனைத்து வகையான பட்டுப் புடவைகள் ஆகியவைகள் அயல் நாடுகளில் குவிக்கப் பட்டுள்ளது போல் பிரமிக்கும் வகையில் குவிக்கப்பட்டுள்ள ஒரே இடம்

**ஹனீபா டெக்ஸ்டைல்ஸ்**



14, சர் தியாகராயா ரோடு, பாண்டி பஜார்
சென்னை-600 017

national/HT 1359



ஹைதராபாத்தில் ரிக்ஷாக்களின் சீட் சமதளமாக இருக்கிறது. ரிக்ஷாவில் ஏறினால் நாற்காலியில் உட்காருவது போல உட்கார முடியாது. முழங்காலைக் கட்டிக் கொண்டு தரையில் உட்காருவது போல உட்கார வேண்டும். இது ஹைதராபாத் ஸ்பெஷல்.



ஆந்திரத் திருமணங்களில் பல விசேஷங்கள் உண்டு. தாலி கட்டும்போது கரை போட்ட வெள்ளைப் புடைவையை மணமகள் அணிந்திருக்க வேண்டும். முதலிரவிற்கும் வெள்ளைப் புடைவை தான். படத்திலுள்ள திருமணத்தில் மணமகன் கத்தியை வைத்திருக்கிறான். முன் காலத்தில் வீரத்திற்கு அறிகுறியாக வாளை வைத்திருப்பார்கள். இப்போது அதைச் சம்பிரதாயமாக்கி இருக்கிறார்கள்.

விளங்கியதுடன் இந்தியர்களுக்குத் தலைவலி நிவாரணியாகவும் விளங்கியவர் 'அமிர்தாஞ்சன்' என்ற பிரபலமான மருந்தைத் தயாரித்த கே. நாகேஸ்வரராவ் பந்துலு. இவரது கொடை உள்ளம் இவருக்கு 'தேசோத்தாரகன்' என்ற பட்டத்தைப் பெற்றுத் தந்தது. சென்னையில் 'ஸ்ரீபாக்' என்ற இவரது மாளிகை பல முக்கியமான தீர்மானங்களை எடுக்க ஆந்திர—காங்கிரஸ் தலைவர்கள் கூடும் இடமாக விளங்கியது; விடுதலைப் போராட்ட வீரர்களுக்குப் புகலிடமாகவும் திகழ்ந்தது.

"மகரிஷி" என்றே அழைக்கப்பட்டவர் புலுஸு சாம்பமூர்த்தி. இந்த ஆண்டு அவரது நூற்றாண்டு கொண்டாடப்படுகிறது. காகினாடாவில் பல போராட்டங்களில் ஈடுபட்ட இந்த வீரர், தமது மகன் காலமானதைக் கூடப் பொருட்படுத்தாமல் 1923ல் காங்கிரஸ் மாநாட்டை நடத்திய பற்றற்ற உள்ளம் கொண்டவர். பின்னால் சென்னைக்கு வந்தவர் 1937ல் சட்டசபையின் சபாநாயகரானார். ஆந்திரா பிரிவினைக்காக 1952ல் பொட்டி ஸ்ரீராமுலு உயிர்த்தியாகம்புரிந்த சமயம் இவரும் அதே லட்சியத்துக்குப் பாடுபட்டார். சுதந்திரப் போராட்டத்தில் இவருடன் ஒத்துழைத்தவர் துர்காபாய்.

பின்னால் ஸி.டி. தேஷ்முக்கின் மனைவியான துர்காபாய், அன்று காட்டிய வீரம் காரணமாக 'ஜான்ஸி ராணி' என்றே அழைக்கப்பட்டார். ஆனால் இன்றும் என்றும் அவரை நினைவில் இருத்துவது பல்வேறு நகரங்களில் அவர் தோற்றுவித்துள்ள ஆந்திர மஹிள சபாவும் அதன் மருத்துவமனைகளும் கல்விக் கூடங்களுமே.

ஆந்திர சுதந்திரப் போராட்ட வீரர்களில் மிகவும் வயதானவர், மிகவும் உயரமானவர் என். ஜி. ரங்கா. நாடாளுமன்றத்தில் இன்றும் சுறுசுறுப்பாக இயங்குகிறார். பேராசிரியர், விவசாயியின் நண்பர், சுதந்திரா கட்சியின் தலைவராக விளங்கியவர், நேர்மைக்கும் எளிமைக்கும், தீரத்துக்கும் ஒளிவு மறைவின்மைக்கும் பெயர் பெற்றவர். தாம் செய்த அளப்பரிய தியாகங்களுக்காக எந்தவிதமான அரசாங்கப் பதவியையும் எதிர்பார்க்காமல் சேவை புரிவதே காரியமாக இன்றுவரை வாழ்ந்து வருகிற அபூர்வ அரசியல்வாதி.

சமீப காலத்தில் காங்கிரஸ் அக்ராசனராக விளங்கியவர்கள் சஞ்சீவ ரெட்டியும் சஞ்சீவய்யாவும். சஞ்சீவ ரெட்டி குடியரசுத் தலைவராகவே உயர்ந்தார். அல்லூரி சத்ய நாராயண ராஜு, பி.வி. நரசிம்மராவ் போன்றோர் காங்கிரஸ் காரியதரிசிகளாக விளங்கியவர்கள்.

இன்னும் எவ்வளவோ பேர். முக்கியமான விஷயம் இந்த ஆந்திரத் தலைவர்கள் எல்லாருமே தங்கள் பிராந்தியத்தின் கலாச்சாரத் தனித்தன்மைக்குப் போராடிய போதே தேசிய நோக்கைக் கண நேரமும் மறக்கவில்லை என்பதுதான்.

ஆந்திராவில் விஜயவாடாவிலிருந்து 80 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஜயந்திபுரம் மிகப் பிரும்மாண்டமான தொழிற்சாலையைப்பெறும்பாக்கியம்பெற்றிருக்கிறது. 77 கோடிசெலவில் நிர்மாணமாகியுள்ள சிமெண்ட்தொழிற்சாலை 7.5 டன் சிமெண்ட் 1986 இறுதியில் நவீன முறையில் தயாரித்தளிக்கும். ஜயந்திபுரத்தில் இந்தத் தொழிற்சாலையை நிர்மாணித்திருப்பவர்கள் மெட்ராஸ் சிமெண்ட் நிறுவனத்தினர். நவீன கம்ப்யூட்டர் சாதனங்களோடுகூடியது இந்தத் தொழிற்சாலை. இந்தியாவில் முதல் தடவையாக எக்ஸ்ரே ஆராய்ச்சிக் கருவிகளை நிறுவி மணிக்கு மணி கச்சாப் பொருட்களையும் தயாரித்த சிமெண்டையும் அலசிப் பார்ப்பது மெட்ராஸ் சிமெண்ட் நிறுவனம்தான். இந்தப் புதிய தொழிற்சாலையை நிறுவுவதில் மிகுந்த அக்கறை செலுத்தியவர் ராமசுப்பிரமணிய ராஜா. 'Corporate Performance Award' 1984ம் வருஷத்துக்கு மெட்ராஸ் சிமெண்ட் நிறுவனத்துக்குக் கிடைத்தது ஒருபெரிய பாராட்டு. இந்த விருதினை வழங்கியவை 'எகனமிக் டைம்ஸ்' பத்திரிகையும் இந்தியாவிலுள்ள ஹார்வர்டு பிஸினஸ் ஸ்கூல் கழகமும்தான். – **பி.எஸ்.எம்.**



° திருப்பதி தேவஸ்தான பிரதான பூஜை செய்யும் பட்டாச்சாரியருக்கு என்ன வருமானம் கிடைக்கிறது தெரியுமா? வருடம் ஒன்றுக்கு முப்பது லட்ச ரூபாய்! அவரது பரம்பரையைச் சேர்ந்த நான்கு முக்கியமான பட்டாச்சாரிகளுக்கும் அவர்களது உதவியாளர்களுக்கும் இத்தொகை வருடா வருடம் போய்ச் சேருகிறது.

— ஏ. கே. நாசர்




விஜயவாடாவில் கிருஷ்ணா நதி நீரைத் தடுத்து அழகிய ஒரு நீர்ப்பரப்பை உருவாக்கி இருக்கிறார்கள். இங்கு நீராடுபவர்கள் ஏராளம். ஒரு டூரிஸ்ட் சென்டரை ஏற்படுத்தப் போகிறார்கள்.

தண்ணீரைத் தேக்கியது அழகுக்காக மட்டுமில்லாமல் இரண்டு பெரிய வாய்க்கால்களாகப் பிரித்து நீர்ப்பாசனத்திற்கு விட்டிருக்கிறார்கள். அதிலொன்றின் பெயர் மெட்ராஸ் கெனால்!

ஏன் இதற்கு மெட்ராஸ் கெனால் என்று பெயர்? கேட்டதற்கு ஆச்சரியமான பதில் வந்தது. சென்னையில் இருக்கும் பக்கிங்ஹாம் கால்வாயின் பிறப்பிடம் இதுதானாம்!

அப்படி இருக்கும்போது மெட்ராஸ்சென்னையைக் கத்தப்படுத்தி இதிலேயே ஏன் தண்ணீர் கொண்டு வரக்கூடாது? தலையைச் சுற்றி ஏன் மூக்கைத் தொடுகிறார்கள்? பதில் சொல்ல ஆளில்லை!



° ஹைதராபாத் போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த துப்பறியும் நாய் ஒன்று திருட்டுப் போய்விட்டதாக அந்த போலீஸ் ஸ்டேஷனிலேயே புகார் ஒன்று பதிவுசெய்யப்பட்டு இருக்கிறது.

— ஏ. கே. நாசர்



தமிழ்ப் புத்தாண்டு முதல்

# பாண்டி பஜாரில் பரவசமூட்டும் பட்டு மாளிகை

## ஹனீபா டெக்ஸ்டைல்ஸ்

தமிழ்ப் புத்தாண்டிலிருந்து,
இமயம் முதல் குமரி வரை தயாராகும்
அனைத்து வகையான பட்டுப் புடவைகளும்
கிடைக்கும்.

இந்தியாவில் உள்ள எல்லா
பிரபல மில்களில் தயாராகும்
வண்ண வண்ண சேலைகள்,
ப்ளவுஸ் துணிகள் ஆகியவைகள்
அயல் நாடுகளில்
குவிக்கப்பட்டுள்ளதுபோல்
பிரமிக்கும் வகையில்
குவிக்கப்பட்டுள்ள
ஒரே இடம்.

## ஹனீபா டெக்ஸ்டைல்ஸ்



14, சர். தியாகராயா ரோடு,
பாண்டிபஜார், சென்னை-17.

national/HT/1361



• மல்லிகார்ஜுனர் கோயில்.



• ஸ்ரீசைலம் அணை.

# வறட்சியை விரட்ட...

### லாபத்தில் இயங்கும் ஒரே மின்சார வாரியம்:

முதலில் ஒரு க்விஸ்: இந்தியாவில் லாபத்தில் இயங்குகிற ஒரே மின்சார வாரியம் எது?

விடை: "ஆந்திரப் பிரதேச மாநில மின்சார வாரியம்" என்பதுதான்.

கிருஷ்ணா, கோதாவரி ஆறுகளின் தண்ணீரை வைத்துக் கொண்டு நீர் மின் நிலையங்கள், சிங்கரேணி பகுதியில் வெட்டி எடுக்கப்படும் நிலக்கரியைக் கொண்டு அனல் மின்சார உற்பத்தி. போதாக்குறைக்கு ராமகுண்டத்தின் சூப்பர் தெர்மல் பவர் ப்ளாண்ட் வேறு.

மாநிலமெங்குமாய் சுமார் 57,000 பேரை வேலைக்கு வைத்துக் கொண்டு, 35.87 லட்சம் கஸ்டமர்களுக்கு மின்சாரம் வினியோகம் செய்து வரும் இந்த வாரியம் லாபத்தில் தொழிலாளர்களுக்கு போனஸும் தருகிறது!

கடந்த சில ஆண்டுகளில் லாபக்கணக்கு இதோ: 1984—85 = ரூ. 34 கோடி; 85—86 = ரூ. 64 கோடி; 86—87 ல் எதிர்பார்ப்பது = ரூ. 51 கோடி. சரி! தமிழகத்தில் நிலைமை எப்படியாம்? 1984—85 = ரூ. 164 கோடி; 85 — 86 = ரூ. 206 கோடி. 86 — 87 ல் எதிர்பார்ப்பது ரூ. 259 கோடி.

ஒரே வித்தியாசம்: ஆந்திரா விஷயத்தில் சொன்னது லாபக்கணக்கு. தமிழகத்திலோ நஷ்டக்கணக்கு.

மின்சார உபயோகிப்பிற்கான கட்டணமும் அப்படி ஒன்றும் அதிகமில்லை. வீட்டு உபயோகத்துக்கு யூனிட்டுக்கு 45 பை. உயர் அழுத்த யூனிட்டுகளுக்கு 67.5 பைசா. விவசாயிகளுக்கு ஒரு குதிரை சக்திக்கு, ஆண்டுக்கு 50 ரூபாய் என்று ஒட்டு மொத்தமாய். விவசாயிகள் உபயோகிக்கும் மின்சாரத்தையும் அவர்கள் செலுத்தும் கட்டணத்தையும் ஒப்பிட்டால் யூனிட்டுக்கு சராசரியாய் எட்டு பைசா ஆகிறது.

83 க்குப் பின் பவர்கட்டே இல்லை!

மிஞ்சிய மின்சாரத்தை தமிழ்நாடு, கர்நாடகா, ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களுக்கும் அளிக்கிறது ஆ. பி. மி. வாரியம்.

புதிதாய்த் தொழில் தொடங்குபவர்களுக்கு மின்கட்டணத்தில் 25 சதம் சலுகையும் தரப்படுகிறது!

1984—85 ல் மட்டும் சுமார் 2000 கிராமங்களுக்குப் புதிதாய் மின்சார வசதி செய்து தரப்பட்டுள்ளது. 'இண்டிண்ட தீபம்' (வீட்டுக்கு வீடு விளக்கு) என்கிற திட்டம் மூலம் ஏழை எளிய மக்களின் குடிசைகளுக்கு மின்சாரவசதி ஏற்படுத்தித் தரப்பட்டுள்ளது.

### மின்சக்தியுடன் தெய்வீக சக்தி!

கர்நூலிலிருந்து சுமார் 5 மணி நேரம் பயணம் செய்தால் ஸ்ரீசைலம். கடல் மட்டத்திலிருந்து சுமார் 1500 அடி உயரத்தில் ஊர். மலைப்பாதையில் வளைந்து, வளைந்து பிரயாணம்.

இந்த அணைக்கட்டு, நூறு கிராமங்களை வயிற்றில் போட்டுக் கொண்டு கம்பீரமாய் 1680 அடி நீட்டத்துக்கு 470 அடி உயரம் நிற்கிறது. பாதிக்கப்பட்ட குடும்பங்கள் 14,581 என்று புள்ளிவிவரம் சொன்னது ஒரு போர்டு. அத்தனை பேருக்கும் புனரமைப்புத் திட்டம் செயல்படுத்தப்பட்டு



வண்டி வண்டியாக வைக்கோல்.

தாகம் தீர வெட்டப்பட்ட கால்வாய்.

# வளங்களைக் காண...

விட்டதாம்.

பெருக்கெடுத்து ஓடிவரும் கிருஷ்ணா நதி, ஸ்ரீசைலத்தில் இரண்டு பெரிய மலைப் பகுதிகளுக்கு இடையிலே, 90 டிகிரியில் ஒரு 'டர்ன்' அடிக்கிறது. இங்கே தடுத்து, பிரும்மாண்டமான இந்த அணைக்கட்டை உருவாக்கியிருக்கிறார்கள்.

இங்கிருந்து சுமார் 50 அடி விட்டத்துக்கு பெரிய குழாய் வழியே தண்ணீர் போகிறது. அவைகளை ஏழு கிளைக் குழாய்கள் மூலம் கீழே இறக்கி மின்சாரம் தயாரிக்கிறார்கள்.

இந்த யூனிட்டுகள் ஒவ்வொன்றுக்கும் சக்தி 110 மெ. வா. ஐந்தாவது யூனிட்டில் பாதி வேலை முடிந்துவிட்டது. ஆறாவது, ஏழாவதும் கூட அடுத்த வருட இறுதிக்குள் உற்பத்தியில் இறங்கிவிடுமாம். ஏற்கெனவே நிறைய மின் சக்தியை வைத்துக்கொண்டிருக்கும் ஆந்திர மாநிலத்துக்கு இன்னும் பலம் சேர்க்கப் போகிறவை இவை.

இந்த ஸ்ரீசைலத்துக்கு ஒரு தெய்வீக முகமும் இருக்கிறது. மல்லிகார்ச்சுனர் கோவிலுக்கு ராமனும் சீதையும் வந்து லிங்கம் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். சத்ரபதி சிவாஜி வந்து பூஜித்துப் போயிருக்கிறார். தினம் இருநூறு பேருக்கு அன்ன தானம் செய்கிறார்கள் கோவிலில்.

மூலவர் ஜோதிர் லிங்கமாகக் காட்சி தருகிறார். பக்தர்கள், தரையில் மூடி கொஞ்சம் போல மேல் பகுதி மட்டும் தெரிகிற லிங்கத்தைத் தொட்டுத் தங்கள் நெற்றி லிங்கத்தில் படும்படி விழுந்து வணங்குகிறார்கள்.

"காசியில் போய் உயிர்விட்டால்தான் மோட்சம், ஆனால் ஸ்ரீசைலத்திற்கு வந்து, ஆண்டவனைத் தரிசித்தாலே மோட்சம்!" என்கிறார்கள்!

## கால்நடைகளைக் காக்க ஒரு காம்ப்

அனந்தப்பூரிலிருந்து, சுட்டுப் பொசுக்கும் வெயிலில் சுமார் ஒரு மணி நேரம் பிரயாணித்தால் வரும் இடம் பெண்ண அகோபிலம். அங்கே போனால், எந்தப் பக்கம் திரும்பினாலும் மாடுகள். பசுக்கள்; எருமைகள்; கன்றுகள்; காளை மாடுகள்.

இங்கே என்ன நடக்கிறது? இது ஆந்திர மாநில அரசாங்கம் நடத்துகிற கால்நடைகள் முகாம். அங்கே இருந்த கால்நடை டாக்டரைச் சந்தித்த போது மேலும் விவரங்களைத் தந்தார்:

"இந்த ஏரியா வறட்சியின் தீவிரம் அதிகமாய் இருக்கிறது. இப்பகுதி கால்நடைகளுக்கு தண்ணீர் கிடையாது; வைக்கோல் கிடையாது; மக்கள் அல்லாடிக் கொண்டிருந்தார்கள். என். டி. ஆர். இந்தப் பகுதியைப் பார்க்க வந்தபோது, மக்கள் தங்கள் கஷ்டத்தை எடுத்துச் சொன்னதும், உடனே செயல்பட்டார்.

இரண்டே நாளில் செழிப்பான குண்டூர், தெனாலி, கிருஷ்ணா மாவட்டங்களிலிருந்து ஸ்பெஷல் ரயில் மூலமாய் வைக்கோல் கொண்டு வர ஏற்பாடு செய்து விட்டார். முதலில் மக்களுக்கு ரேஷன் போல, ஒவ்வொரு மாட்டுக்கும் தேவையான வைக்கோலை பாதி விலையில் கொடுத்தார்கள். ஊரிலிருந்து, வந்து வைக்கோல் வாங்கிக் கொண்டு போவது சிரமமாய் இருக்கவே பெண் அகோபிலத்தில் மாடுகள் முகாமே அமைக்க உத்தரவு போட்டு விட்டார் கலெக்டர்.,

மார்ச் முதல் தேதியிலிருந்து காம்ப் நடந்து கொண்டிருக்கிறது. மாடுகளின் சொந்தக்காரர்கள், முகாமிற்கு மாடுகளைக் கொண்டு வந்து, பதிவு செய்து, அட்டைகள் பெற்றுக் கொண்டு, இங்கேயே தங்கிவிட்டார்கள். ரயில்வே வாகன்களில் வந்திறங்கும் வைக்கோல், ஸ்டேஷனிலிருந்து லாரி மூலம் முகாமிற்கு வருகிறது. வைக்கோலை இலவசமாகவே இப்போது கொடுக்கிறார்கள். கால்வாய் வெட்டி, தண்ணீரும் தாராளமாய்க் கிடைக்கச் செய்திருக்கிறார்கள்.











## லக்ஷ்மி

மாவரைக்கும் இயந்திரங்கள்

**No. 1 for the past 23 years**

**ஸ்ரீ லக்ஷ்மி இண்டஸ்ட்ரீஸ்**

56, [illegible]

கோயமுத்தூர் 641002 போன் 31639

போலித் தயாரிப்புகளைக் கண்டு ஏமாறாதீர்கள்

---

குதூகல ஆரம்ப விழா

## லியோ காபி

நாளது 16.4.86 புதன்கிழமை காலை 10 மணி அளவில் நெ. 58—C, ஆரியக்கவுடர் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை—33 முகவரியில் எங்கள் புதிய கிளை திறப்பு விழா நடைபெறும் நற்செய்தியை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# லியோ காபி

மைலாப்பூர் மற்றும் கிளைகள்

நிர்வாக அலுவலகம்: 16, தெற்கு மாட வீதி,
மைலாப்பூர், சென்னை—600 004.
போன்: 76557 & 76912

குறிப்பு: காபி & ஏலக்காய் செடிகள் பொது மக்கள் பார்வைக்கு வைத்திருக்கிறோம்.

---

## P.R.K நாடார் சன்ஸ்

காபிக் கொட்டை & சர்க்கரை மொத்த வியாபாரம்

நெ. 16, 18 & 42, தெற்கு மாட வீதி, மைலாப்பூர்,
சென்னை—600 004. போன்: 76557, 76912 & 72303.





* நாகார்ஜுன சாகர் அணை



* நாகார்ஜுனர்

# ஓர் அணைக்கட்டு பாதுகாப்பில்லாமல் இருக்கிறது!

எஃகுக் கம்பிகளும் காங்கிரீட் கலவையும் இல்லாமல், கல்லடுக்கி சுவர் எழுப்புவது போல் கட்டப்படும் அணைக்கட்டுகளில் நாகார்ஜுன சாகர் உலகிலேயே இரண்டாவது பெரிய அணைக்கட்டு!

இந்த அணைக்கட்டிலிருந்து குதித்து இறங்கும் கிருஷ்ணா நதி நீர் அப்புறம் சமவெளியில் தான் பாய்கிறது.

இதன் ஆயக்கட்டு 10 லட்சம் ஏக்கர்! நீளம் 1½ கி.மீ. நீர் மட்டத்திலிருந்து 750 அடி உயரம்! ஆந்திராவின் 50% மின்உற்பத்தி இங்கேயே கிடைக்கிறது!

அணைக்கட்டு வேலைகள் நடந்து கொண்டிருந்தபோது பல புராதனமான புத்த மதச் சின்னங்கள் மற்றும் பொருட்கள் இங்கு கிடைத்தனவாம். அவற்றை நேருவின் யோசனையின்படி 8 கி.மீ. தூரமுள்ள ஒரு தீவில் மியூசியமாக வைத்திருக்கிறார்கள். காலை பன்னிரெண்டு வரை படகில் போய்ப் பார்க்கலாம். அழகிய இடம்.

நாகார்ஜுன என்ற புத்தபிட்சு வாழ்ந்து அருளுரைகள் வழங்கி இந்தத் தலத்தை புனிதமாக்கி மறைந்தாராம். எனவேதான் 'நாகார்ஜுன சாகர்' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

சாதாரணமாக யாரும் போக முடியாத அணைக்கட்டின் 750 அடி ஆழத்துக்கு லிஃப்டில் இறங்கி வெளிவந்தபோது தலையைச் சுற்றியது. இராட்சத இயந்திரங்கள், பிரும்மாண்டமான வால்வுகள், மின்னி எரியும் விளக்குகள், கம்ப்யூட்டர்கள்..பிரும்மாண்டமான அந்த அதி நவீன மின்உற்பத்தி நிலையத்தின் மையமான இடத்தில் சாந்தியும் தெய்வீகமும் பொலியும் நாகார்ஜுனர் சிலையை வைத்து இருக்கிறார்கள். விஞ்ஞானம் மனித குலத்துக்கு எந்தவிதமாகப் பயன்பட வேண்டும் என்பதைச் சொல்லாமல் சொல்வது போலிருக்கிறது.

ஆனாலும் ஓர் அச்சம் —

இந்த மாபெரும் அணைக்கட்டு பாதுகாப்பில்லாமல் இருக்கிறது. சாதாரணமாக அணைக்கட்டின் மேல் சாலைகள் இருந்தாலும் அதன் மேல்-பொது வாகனங்களை அனுமதிக்க மாட்டார்கள். ஆனால் நாகார்ஜுன சாகர் அணைக்கட்டின் மீது சர்வ சாதாரணமாக போக்குவரத்து நடைபெறுகிறது. கட்டுக் காவல் இல்லை.

குண்டூருக்கும் விஜயவாடாவுக்கும் இடையே செல்கின்ற லோடு ஏற்றிய லாரிகள் அனைத்தும் இந்த அணைக்கட்டின் மேல்தான் செல்கின்றன! இதனால் அணைக்கட்டுக்கு ஏற்படக்கூடிய அபரிமித அழுத்தம் ஒரு பக்கம் இருக்க, யாரும் எந்த நேரமும் அணைக்குச் சேதம் ஏற்படுத்தக்கூடிய நிலையும் இருக்கிறதே! தீய சக்திகளுக்கு நம்முடைய நாட்டில் பஞ்சமா என்ன?

இந்த அணைக்கட்டின் கீழே மற்றொரு பாலம் உடைந்த நிலையில் காட்சி அளிக்கிறது. அதை சில லட்சம் செலவு செய்து சரி செய்தால் அந்தப் பாதையை வாகனங்கள்-பயன்படுத்திக் கொள்ளலாம். ஏனோ இது அதிகாரிகள், அமைச்சர்களின் கவனத்தைக் கவரவில்லை!

மற்றொரு யோசனை—

அழகிய இந்த அணைக்கட்டின் பக்கம் அற்புதமான புல்வெளி — சாதனா — இருக்கிறது. இதை ஒரு நந்தவனமாக மாற்றினால், மைசூர் பிருந்தாவனம் போல ஆகாதோ? டூரிஸ்ட்டுகளையும் கவருமே!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

# கைபடாத சேவரிட் சேமியா
# மணக்குமே உங்கள் கைபட்டதும்!






சேவரிட் சேமியா மிக நவீனமான அயல் நாட்டு இயந்திரங்களால் மிகச் சுகாதாரமான முறையில் கைபடாமல் தயாரிக்கப்படுகிறது.

உயர்தர சம்பா கோதுமை ரவையில் தயாரிக்கப்படும் சேவரிட் சேமியா சத்து நிறைந்தது, குழைந்து போகாதது. சீக்கிரமாகச் சமைக்கக் கூடியது. மேலும், சேவரிட் சேமியாவை வறுக்க வேண்டிய அவசியமில்லை. இது சமைத்த பின்பும் பால்போல் வெண்மையாக இருக்கும்!

சிற்றுண்டிகளானாலும், பாயசம் போன்ற விசேஷ உணவு வகைகளானாலும் சேவரிட் சேமியா உங்கள் சமையலுக்கு ஊட்டமும் சுவையும் காட்டுகிறது!

ஆகையினால்தான் குடும்பநலன் கருதும் குடும்பத் தலைவிகள் விரும்பி வாங்குவது சேவரிட் சேமியாவே!

**முத்தான அம்மா சமைப்பது**
**சத்தான சேவரிட் சேமியா!**

**Savorit**
**சேமியா**

Sista's - UIM.482.85.TMA

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka



"இப்போது, லக்ஸையும் விட நான் அதிகம் விரும்பும் சோப் ஒன்று உள்ளது", என்கிறார் ஸ்ரீதேவி.

# புதிய லக்ஸ்

**நேர்த்தியான புது மணம்**

அதன் புத்தம் புது, மலர்களின் சாற்று மணம் பற்றி ஒவ்வொரு சினிமா நட்சத்திரமும், தம் விருப்பமான முறையில் விளக்குகிறார்—"மென்மைய மிக்கது", "கிளர்ச்சியூட்டுவது".



**கவர்ச்சியான புதுத் தோற்றம்**

உங்களைப் போலவே கவர்ச்சியானது நவநாகரீகமானது அது—கண்ணைக் கவர்வதும்கூட! மூன்று வகை அழகிய வண்ணங்களில் கிடைக்கிறது—இளஞ் சிவப்பு, பச்சை மற்றும் மஞ்சள்.




புதிய
லக்ஸ்
சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.

LL—2012

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு